# திருக்கோலம்

கி. வா. ஜகந்நாதன்



அமுத நிலையம்

# முன்னுரை

என்னுடைய ஆசிரியப் பெருமானாகிய மகாமகோபாத்தியாய டாக்டர் ஐயரவர்கள் தக்கயாகப்பரணியைப் பதிப்பிக்கும்போது, அந்த நூலின் உரையில் அம்பிகை சம்பந்தமான பல செய்திகள் வருவதை அறிய முடிந்தது. அவர்களுடன் இருந்து அந்த நூலை ஆராயும்போது தேவி பரமான செய்திகளுக்கு விளக்கம் தேடிப் பல நூல்களைப் படிக்க நேர்ந்தது. லலிதா சகசிரநாம பாஷ்யம், சௌந்தரிய லஹரி பாஷ்யம் ஆகியவற்றை ஒருவாறு பார்த்தேன். அப்பால் திருப்பனந்தாள் காசி மடாலயத்தின் தலைவராக எழுந்தருளியிருந்த ஸ்ரீ ல ஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் அபிராமி அந்தாதிக்கு உரை எழுதிப் பதிப்பிக்கும்படி பணித்தார்கள். அப்போது பின்னும் அம்பிகை சம்பந்தமான வரலாறுகளையும் கருத்துக்களையும் நூல்களின் வாயிலாகவும் பெரியோர்களின் வாயிலாகவும் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு உண்டாயிற்று.

ஸ்ரீமத் சிருங்ககிரி சாரதாபீடத்து ஜகத்குரு சங்கராசார்ய சுவாமிகளின் அருளாசியுடன் ஸ்ரீசங்கர கிருபா என்ற தமிழ்ப்பத்திரிகை வெளிவரத் தொடங்கியது. அதில் சில கட்டுரைகளை முதலில் எழுதினேன். அப்போது அதன் ஆசிரியராக இருந்த அமரர் கே. ஆர். வேங்கடராமையரவர்கள் தொடர்ந்து கட்டுரைகள் எழுதி வரவேண்டுமென்று விரும்பினார்கள். அவர்கள் விருப்பத்திற்கிணங்கி அப் பத்திரிகையில் அபிராமி அந்தாதிப் பாடல்களின் விளக்கத்தைதக் கட்டுரை வடிவில் எழுதி வந்தேன். அவற்றைப் படித்த அன்பர்கள் பாராட்டினார்கள். பல ஸ்ரீவித்யா உபாசகர்களுடைய பழக்கம் எனக்குக் கிடைத்தது.

நண்பர்களின் விருப்பப்படி இந்தக் கட்டுரைகளைத் தொகுத்துப் புத்தக வடிவில் வெளியிடத் தொடங்கினேன். காப்புச் செய்யுளுக்கும் முதல் இருபத்தைந்து செய்யுளுக்கும் உரிய விளக்கக் கட்டுரைகளை, 'எழில் உதயம்' என்ற பெயரிலும், 26 முதல் 50 வரையில் உள்ள செய்யுட்களின் விளக்கத்தை, 'மாலை பூண்ட மலர்' என்ற பெயரிலும், 51 முதல் 75 வரை உள்ளவற்றின் விளக்கத்தை, 'சரணம் சரணம்' என்ற பெயரிலும் வெளியிட்டேன். எஞ்சிய இருபத்தைந்து பாடல்களுக்கும் இறுதியிலுள்ள பயனுக்கும் உரிய விளக்கக் கட்டுரைகள் இப்போது 'திருக்கோலம்' என்ற பெயரோடு வெளியாகின்றன.

இந்த நூலின் ஆசிரியராகிய அபிராமிபட்டர் சிறந்த ஸ்ரீவித்யா உபாசகர்; ஸ்ரீவித்யையின் இரகசியங்களெல்லாம் அறிந்தவர்; அம்பிகையின் உபாசனையில் முறுகி நின்று அவளுடைய அருளநுபவத்தைப் பெற்றவர். அவருடைய திருவாக்கு, தெளிவும் ஆழமும் உடையதாக விளங்குகிறது. தாம் பெற்ற அநுபவத்தைப் பல இடங்களில் சொல்கிறார். அம்பிகையின் அருட்சிறப்பை மனம் உருக்கும் வகையில் பாடுகிறார். அவற்றைப் படிக்கும்போது நம்முடைய உள்ளமும உருகுகிறது. அதனால்தான் இந்த நூலைப் படிப்பவர்களும் பாராயணம் செய்து வருகிறவர்களும் பாடுகிறவர்களும் நாளுக்கு நாள் மிகுதியாகி வருகிறார்கள்.

இந்த நூலைப்பற்றிப் பல மேடைகளில் பேசும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. இப்போது அபிராமி அந்தாதி விரிவுரைகளைப் பல அன்பர்கள் அங்கங்கே நிகழ்த்துகிறார்கள். அவர்களில் பலர் நான் எழுதிய விளக்கக் கட்டுரைகளைப் படித்து இன்புற்றதாகச் சொல்கிறார்கள். அந்த அளவில் இவை பயன்படுகிறதை அறிந்து மகிழ்ச்சி அடைகிறேன். இப்போது அபிராமி அந்தாதிக்குப் பலர் உரை எழுதியிருக்கிறார்கள்.

இப்படிப் பல வகையிலும் அபிராமி அந்தாதியைத் தமிழ் மக்கள் பயன்படுத்தி வருவதைக் கண்டு, அபிராமி

பட்டரின் தவச்சிறப்பை உணர முடிகிறது. அருளாளர்களின் திருவாக்கு ஊறுகாயைப் போல, பஞ்சாமிர்தத்தைப் போல, நாளாக ஆக அதிகச் சுவையை ஊட்டிவரும்.

முருகப் பெருமான் திருவருளால் அன்னை அபிராமியின் துதிப் பாடல்களாகிய இந்த அந்தாதிக்கு உரை எழுதவும், விளக்கக் கட்டுரைகள் எழுதவும், விரிவுரை ஆற்றவும் முடிந்தது. என்னுடைய ஆசிரியப் பெருமானுடைய ஆசியே இந்த முயற்சியில் ஈடுபடுவதற்குரிய தைரியத்தை அளித்தது.

பழைய பாடல்களைக் கட்டுரை வடிவில் விளக்கும் முறையைப் பல காலமாக ஆண்டு வருகிறேன். சங்கநூற் பாடல்கள் சிலவற்றை விளக்கிச் சங்க நூற் காட்சிகள் என்னும் வரிசையில் எட்டு நூல்களையும், காவியமும் ஓவியமும் என்ற நூலையும் எழுதினேன். பிறகு பன்னிரு திருமுறைகளில் உள்ள பாடல்கள் சிலவற்றைத் தேர்ந்தெடுத்து விளக்கித் திருமுறை மலர்கள் என்ற வரிசையில் பன்னிரண்டு நூல்களை எழுதினேன். கந்தர் அலங்காரம், கந்தர் அநுபூதிப்பாடல்களுக்கும் விளக்கம் எழுதினேன். அதே முறையில் அபிராமி அந்தாதிக்கும் விளக்கக் கட்டுரைகள் எழுதி நிறைவேற்றும்படி முருகன் திருவருள் பாலித்தான்.

இந்த நூலின் விளக்கத்தில் மாணிக்கவாசகர், அருணகிரி நாதர், தாயுமானவர் முதலிய அநுபூதிமான்களின் திருவாக்குக்களை இடையிடையே மேற்கோளாகக் காட்டியிருக்கிறேன். அநுபூதிமான்கள் எந்தக் கடவுளை வழிபட்டாலும் அநுபவம் என்பது ஒன்றாகவே இருக்கும். இந்தத் திருவாக்குக்களை ஒப்பு நோக்கும்போது அந்த உண்மை நன்றாகப் புலனாகும்.

அம்பிகையின் இயல்புகளை அபிராமிபட்டர் எடுத்துச் சொல்லும்போது லலிதா சகசிர நாமத்திலுள்ள பல திருநாமங்கள் நினைவுக்கு வருகின்றன. அபிராமிபட்டர் பல காலும் அந்தச் சகசிர நாமத்தைச் சொல்லி அன்னையை அருச்சித்தவர். ஆதலின் அவருடைய உள்ளத்தில் அந்தத் தெய்விகத் திருநூல் நன்றாகப் பதிந்திருந்தது. அவர் பாடிய

பாடல்களிலெல்லாம் அந்த நூலில் வரும் அம்பிகையின் திருநாமங்களும், அவற்றால் தெளிவாகும் பண்புகளும் அமைந்திருத்தல் இயல்பே. எனவே, இந்த விளக்கக் கட்டுரைகளில் பல இடங்களில் லலிதா சகசிரநாமத்தை எடுத்துக் காட்டியிருக்கிறேன்.

ஸ்ரீவித்யையில் துறைபோனவர்கள் இந்த நூலுக்கு விரிவுரை எழுதினால், அது யந்திர மந்திர தந்திர நுட்பங்களுடனும் அம்பிகையின் வரலாற்றைக் கூறும் தேவி பாகவதம் முதலிய நூல்களின் மேற்கோள்களுடனும் விளங்கிப் பெரும்பயனைத் தரும். எளியேனுக்கு அத்தகைய ஆற்றல் இல்லாவிடினும், ஓரளவு பக்தியுணர்ச்சியை உணர்ந்து கொள்ளும் உள்ளத்துடன் இப்பாடல்களைப் படித்தேன்; சுவைத்தேன்; ஆழ்ந்தேன். முருகன் திருவருள் கூட்டுவித்தமையால் உரையும் விளக்கமும் எழுதும் வாய்ப்புக் கிடைத்தது. அம்பிகையை உபாசிக்கும் பெரியவர்கள் பலர் இந்தக் கட்டுரைகளைப் படித்து வாழ்த்தினார்கள். அந்த வாழ்த்தின் பயனாகவே இவற்றைப் புத்தக வடிவில் வெளியிடும் துணிவு உண்டாயிற்று.

அபிராமி அந்தாதி விளக்கம் இந்தப் பகுதியோடு நிறைவடைகிறது. இவற்றை வெளியிடத் தூண்டிய ஸ்ரீசங்கர கிருபா முன்னாள் ஆசிரியர் அமரர் கே. ஆர். வேங்கடராமையர் அவர்களை நன்றியறிவுடன் நினைவு கூர்கிறேன். இப்போது அதன் ஆசிரியராக இருக்கும் ஸ்ரீ கே. வி. சுப்பரத்தினம் ஐயரவர்களுக்கும், அந்தப் பத்திரிகையின் துணையாசிரியர் ஸ்ரீ கே. எஸ். வேங்கடராம சாஸ்திரிகள் அவர்களுக்கும் என்னுடைய நன்றியறிவைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்தக் கட்டுரைகள் பத்திரிகையில் வெளிவரும் போதும், புத்தக உருவில் வெளிவந்த பின்பும் படித்துப் பாராட்டி ஊக்கம் அளித்த அன்பர்கள் யாவருக்கும் என் நன்றியறிவு உரியது.

''காந்தமலை''
சென்னை-28.

**கி. வா. ஜகந்நாதன்**
1—11—77

# பொருள் அடக்கம்


| | | | |
|---|---|---|---|
| | முன்னுரை | | பக்கம் |
| | செய்யுள் முதற் குறிப்பகராதி | | |
| 1. | திருக் கோலம் | .... | 1 |
| 2. | திருநாமங்கள் | .... | 9 |
| 3. | கண்ணில் எழுதிய வடிவம் | .... | 16 |
| 4. | என்ன உறவு? | .... | 24 |
| 5. | என்ன அதிசயம்! | .... | 36 |
| 6. | அன்னையின் தண்ணளி | .... | 44 |
| 7. | கரணம் கழன்ற இன்பம் | .... | 54 |
| 8. | அடியார் பெறும் பதவி | .... | 64 |
| 9. | பிறப்பு அறுப்பவள் | .... | 72 |
| 10. | எங்கும் அவள் காட்சி | .... | 80 |
| 11. | கால ஜயம் | .... | 86 |
| 12. | அம்பிகையின் ஆற்றலும் கருணையும் | .... | 94 |
| 13. | தள்ளத் தகாது | .... | 103 |
| 14. | துரியமற்ற உறக்கம் | .... | 111 |
| 15. | குறைவிலா நிறைவு | .... | 121 |
| 16. | அடியார்க்கு அடியார் பெறும் பயன் | .... | 128 |
| 17. | மாருத நிலை | .... | 134 |
| 18. | முரண்பாடுகள் | .... | 142 |
| 19. | அடியார் அநுபவம் | .... | 149 |
| 20. | ஏது கவலை? | .... | 156 |
| 21. | வழிபாட்டின் பயன் | .... | 165 |
| 22. | அம்பிகையின் அடியார்கள் | .... | 171 |
| 23. | கரந்தது எங்கே? | .... | 177 |
| 24. | நான்கு நிலை | .... | 185 |
| 25. | அகக்காட்சி | .... | 193 |
| 26. | பயன் | .... | 200 |

# செய்யுள் முதற்குறிப்பகராதி


| | | பாட்டு |
|---|---|---|
| அணங்கே | .... | 81 |
| அளியார் | .... | 82 |
| ஆத்தானை | .... | பயன் |
| ஆதித்தன் | .... | 97 |
| உடையானை | .... | 84 |
| குயிலாய் | .... | 99 |
| குழையத் தழுவிய | ... | 100 |
| குறித்தேன் | .... | 76 |
| கூட்டியவா | ... | 80 |
| கோமள வல்லியை | .... | 96 |
| சிறக்கும் | .... | 89 |
| செப்பும் | .... | 78 |
| தைவந்து | .... | 98 |
| நகையே | .... | 93 |
| நன்றே வருகினும் | .... | 95 |
| பதத்தே | .... | 92 |
| பயிரவி | .... | 77 |
| பரம்என்றுனை | .... | 88 |
| பார்க்கும் | .... | 85 |
| மால்அயன் | .... | 86 |
| மெல்லிய | .... | 91 |
| மொழிக்கும் | .... | 87 |
| வருந்தாவகை | .... | 90 |
| விரவும் | .... | 83 |
| விரும்பித் | .... | 94 |
| விழிக்கே | .... | 79 |

# திருக்கோலம்

அம்பிகையைத் தியானம் செய்கிறவர்கள் பிறவித் துன்பத்தை அடையமாட்டார்கள் என்று சொல்லிய அபிராமிபட்டர், யமவாதனையும் அவர்களுக்கு இராது என்பதைச் சொல்ல வருகிறார். முன்பாட்டில் படர்க்கையாக வைத்துச் செய்தியைச் சொன்னவர், இப்போது தம்முடைய அநுபவத்தைச் சொல்கிறார். அம்பிகையை இப்போது அர்த்தேசுவர நாரியாக, இறைவனை ஒரு பாகத்தில் வைத்திருக்கும் அன்னையாகக் கண்டு துதிக்கிறார். பரமேசுவரனுடைய திருமேனியில் ஒரு பாகத்தை அவள் விரும்பிப் பறித்துக்கொண்டாளாம். அந்தக் கோலத்தையே இப்போது நினைக்கிறார்.

பரமேசுவரனுடைய அடையாள மாலை கொன்றை. அதை அவன் தலையிலும் மார்பிலும் அணிந்திருக்கிறான். பொதுவாகத் தேவலோகத்து மலர்களில் வண்டு மொய்ப்பதில்லை. ஆயினும் இறைவன் கருணை கொண்டு தான் அணிந்த கொன்றை மலரில் வண்டுகள் மொய்த்துத் தேன் உண்ணும்படி செய்திருக்கிறான்.

''சூழ்த்த மதுகரம் முரலும் தாரோயை''

என்று இந்தக் கருணையை மணிவாசகரும் எடுத்துச் சொல்வார்.

வண்டுகள் கொன்றை மலரைக் கிண்டுகின்றன. அதிலுள்ள வாசனை மிக்க தேன் கட்டவிழ்ந்து ஒழுகு

கிறது. அத்தகைய கொன்றையை எம்பெருமான் தன் சடாபாரத்தில் அணிந்திருக்கிறன்.

வண்டு கிண்டி
வெறித்தேன் அவிழ் கொன்றை வேணிப் பிரான்.

கொன்றை மலர் பொன் நிறம் உடையது. "தாரமர் கொன்றையும்....சாத்தும் தில்லையூரர்" (காப்பு) என்றும், "கொன்றை வார்சடைமேல், பனிதரும் திங்களும் பாம்பும் பகீரதியும் படைத்த புனிதரும்" (4) என்றும், "கொன்றை வார்சடையின் மேலினும்" (60) என்றும், "குழையத் தழுவிய கொன்றையந் தார்கமழ்" (100) என்றும் இறைவன் கொன்றையை அணிந்திருப்பதைப் பல இடங் களில் எடுத்தாளுவார். கொன்றைமலர் ஓங்காரம் போன்ற வடிவுடையது. ஆதலின் அதனைப் பிரணவ புஷ்பம் என்று கூறுவர்.

சிவபெருமானுடைய திருமேனியில் ஒரு பாகத்தை அம்பிகை பறித்துக் கொண்டாள் என்று சொல்கிறர். ஓர் அரசன் மற்றொர் அரசனோடு பொருது வெற்றி பெற்றால் அவன் தோல்வியுற்ற அரசனுடைய உடைமைகளைப் பறித்துக் கொள்வது வழக்கம். அதுபோல, தேவி தன் எழிலால் இறைவனை வென்று தோல்வியுறச் செய்தாள். அந்த வெற்றிக்கு அறிகுறியாக அவனுடைய வாமபாகத் தைத் தனக்கு உரியதாக வலிந்து பெற்றுக் கொண்டாள்.

"துணை இரதி
பதிசய மானது அபசய மாகமுன்
பார்த்தவர்தம்
மதிசய மாகஅன் றோவாம பாகத்தை
வவ்வியதே" (17)

என்று முன்பு ஒரு பாட்டில் இந்தச் செய்தியைச் சொன்னார். தன் வெற்றியை நிலைநாட்டுவதற்கு அவ்வாறு கவர்ந்து கொண்டாள்.

"தலைவர் அழியா விரதத்தை அண்டமெல்லாம்
பழிக்கும் படிஒரு பாகம்கொண்டு ஆளும்
பராபரையே" (87)

என்று இந்த வெற்றியைப் பின்னும் எடுத்துரைப்பார். இங்கே, "சிவபெருமானுடைய திருமேனியில் ஒரு பாதியைக் கவர்ந்து அங்கே குடிபுகுந்த பெருமாட்டியே" என்று அதையே வேறு வகையில் சொல்கிறார்.

பிரான் ஒரு கூற்றை மெய்யில்
பறித்தே குடிபுகுதும்.

பறித்து என்றது, வென்று கவர்ந்துகொண்டதைச் சுட்டியது.

அம்பிகை திருக்கரத்தில் ஐந்து மலரம்புகளை வைத்திருக்கிறாள். அவளுக்குப் பைரவி என்பது ஒரு திருநாமம்.

பஞ்ச பாண பயிரவியே.

பைரவராகிய சிவபெருமானுடைய தேவியாதலின் பயிரவி என்ற திருநாமம் வந்தது. பன்னிரண்டு வயசுப் பெண்ணுக்குப் பயிரவி என்று பெயர். தன்னை எதிர்ப் போருக்குப் பயத்தை உண்டாக்குகிறவள் என்றும் பொருள் கொள்ளலாம்.

இவ்வாறு தேவியைப் புகழ்ந்து விளித்தவர் அவளுடைய திருவுருவத் தியானத்தால் பெற்ற பேற்றைச் சொல்ல வருகிறார்.

அன்னை அழகிய திருக்கோலம் கொண்டு எழுந்தருளுகிறாள். மனத்துக்கும் வாக்குக்கும் பொறிகளுக்கும் எட்டாதவள் அவள்; வேதத்தாலும் அறிய ஒண்ணாதவள்;

பரமரகசியமான பரதேவதை; சர்வ சூக்ஷ்மமாக உள்ளவள்; தனக்கென்று வடிவம் இல்லாதவள்; என்றாலும், அன்பர்கள் கண்ணும் கருத்தும் கொள்ளும்படி அழகிய திருவுருவத்தை மேற்கொள்கிறாள். ஒரு பொருளுக்கு நாமமும் உருவமும் இல்லாவிட்டால் அதை மனம் பற்றாது. நாமரூப நாட்ட முடையது மனம். அம்பிகை மனமுடைய மனிதர்கள் தன்னைத் தியானிக்கும் பொருட்டு வடிவம் கொண்டு வருகிறாள். சகுணப்பிரம்ம உபாசனையின்றி நிர்க்குணப் பிரம்மானுபவம் கிட்டாது. மனம் இருக்கிறவரையில் ஈசுவர உபாசனை செய்ய வேண்டும். அம்பிகை தன் பக்தர்கள் தன்னைத் தியானித்து உய்ய வேண்டும் என்று கருதித் தன் உருவத்தை அவர்களுக்குக் காட்டுகிறாள். அந்த உருவத்தை அவர்கள் சொல்ல, விக்கிரக வடிவத்தில் நாம் வழிபடுகிறோம்.

வெளியிலே காணும் கோலத்தை உள்முகப்படுத்தித் தியானம் பண்ண வேண்டும். அம்பிகையின் திருக்கோல தரிசனத்துக்குப் பயன் அந்தக் கோலத்தைத் தியானம் செய்வதுதான். இலை நிறையப் பரிமாறி வைத்திருக்கும் விருந்துணவைக் கண்ணினால் கண்டால் போதுமா? அதை உட்கொள்ள வேண்டும். அப்போதுதான் அதன் சுவை தெரியும்; பசி தீரும். வெளியில் காணும் வடிவத்தை உள் முகத்தே தியானித்துப் பழகினால் அன்னை உள்ளே இயங்கு வாள்; நடனமாடுவாள்; புன்னகை பூப்பாள்; பேசுவாள். வெளியிலே தரிசிக்கும் அளவிலே நின்றுவிட்டால் பய னில்லை. "அந்தர்முகஸமாராத்யா, பஹிர்முகஸுதுர்லபா" என்று லலிதா சகசிரநாமம் கூறுகிறது. உள்முகத்தே அவள் திருக்கோலத்தை நிறுத்தித் தியானம் புரிய வேண்டும்.

அவள் வடிவம் முழுவதையும் உள்ளத்தே கலையாமல் நிறுத்துவது என்பது எளிய காரியம் அன்று. ஆனாலும் பல காலும் பயிற்சி பண்ணி, மனத்தை வெளியே திரியாமல்

அடக்கித் தியானித்தால் அன்னையின் திவ்யதரிசனத்தை உள்ளே காணலாம். இப்போது புறத்தே காணும் விக்கிரகம் வேறு; அப்போது உள்ளே காணும் திருக்கோலம் வேறு. பச்சை அப்பளம் பார்க்க அழகாக இராது. அதை எண்ணெயிலே பொரித்தால் நன்றாகப் பொரிந்து நிறமும் சுவையும் பெற்று விடுவதுபோல, புறத்தே காணும் அம்பிகையின் திருக்கோலத்தைப் பக்தியுணர்ச்சியுடன் உண்முகத்தே நிறுத்தித் தியானம் செய்தால் அப்போது அவளுடைய வடிவம் சோதியுடையதாகத் தோன்றும்; உயிர் ஓவியமாகத் திகழும்.

இவ்வாறு பல காலம் பயிற்சி செய்து அம்பிகையைத் தம் உள்ளே தரிசித்தவர் அபிராமிபட்டர்; அவளுடைய கோலத்தை முழுமையாக உள்ளே தியானித்தவர்.

நமக்கு மிகவும் பிரியமான ஒருவரை நாம் நினைத்தாலும் அவர் வடிவம் முழுவதும் மனத்தில் தெளிவாகத் தெரியாது; கனவிலே தெளிவாகத்தெரியும். அப்போது பொறிகள் வேலை செய்யாமல் இருப்பதால், மனத்தில் வடிவம் தெளிவாகத் தோன்றுகிறது. நனவிலேயே ஐம்பொறிகளையும் அடக்கும் ஆற்றல் உள்ளவர்களுக்குத் தியானமூர்த்தி தெளிவாகத் தெரியும். அப்படி அப்பியாசம் பண்ணினவர் அபிராமி பட்டர். 'உன்னுடைய திருக்கோலம் முழுவதையும் என் மனத்தில் தியானித்தேன்' என்று அவர் சொல்கிறார்.

குறித்தேன் மனத்தில் நின் கோலம் எல்லாம்.

எத்தனையோ பிறவிகளில் முயன்றால் இந்தப் பிறவியில் இத்தகைய பேறு கிடைக்கும். "நூதன விவேகி உள்ளம் நுழையாது; நுழையுமாகில், பூதசன் மங்கள் கோடி புனிதனும் புருட ஞமே" என்று கைவல்ய நவநீதம் சொல்லும். அத்தகைய புண்ணிய புருஷர் இந்த மகானும் ஆவர்.

இறைவியின் திருக்கோலம் முழுவதையும் அவர் தியானித்தார். அப்போது அம்பிகை அவர் உள்ளத்தே எழுந்தருளினாள்; தன் திருவுள்ளக் குறிப்பைக் காட்டினாள், அதை உணர்ந்து கொண்டார் அவர். "நீ இனி எதற்கும் அஞ்சாதே" என்று அன்னை குறிப்பைக் காட்டினாள். அதன் பின்பு இந்தப் பேரடியாருக்குப் பயமே இல்லாமல் போயிற்று. எல்லாப் பயங்களிலும் பெரிது யமபயம். "யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக் கென்கடவேன்!" என்று மணிவாசகரே அஞ்சுகிறார்.

அபிராமிபட்டர் இறைவியின் குறிப்பை அவள் திருவிழிப் பார்வையாலே உணர்ந்து கொண்டார்; யமபயம் தமக்கு இல்லை என்று உறுதி செய்துகொண்டார்.

யமன் எப்போது எப்படி வருகிறான் என்பது யாருக்கும் தெரியாது. அது மிகவும் இரகசியமாக இருக்கிறது. அவன் வரும் வழி மிகவும் நுட்பமானது. அவன் தம்மை அணுகும் வழியை அவர் அடைத்து விட்டார். அவன் வந்தால் முட்டி மோதிக்கொண்டு திரும்ப வேண்டியதுதான்.

நின் குறிப்பு அறிந்து
மறித்தேன், மறலி வருகின்ற நேர்வழி.

அம்பிகையின் தியானத்தால், அவள் உள்ளே தன் காட்சியை நல்கக் கண்டு களித்தார். அவள் கடாட்ச வீட்சண்யத்தைப் பெற்றார். அவள் புன்முறுவலைத் தரிசித்தார். அவை ஒரு குறிப்பைத் தெரிவித்தன; யமனுக்கும் அஞ்சாத தைரியத்தைக் கொடுத்தன. அந்தத் தைரியமே யமன் வரும் வழிக்கு அடைகல்லாக நின்றுவிட்டது.

பயமில்லாத அபயானந்தத்தில், "யமன் வரும் வழியைத் தடுத்துவிட்டேன்" என்று எடுப்பாகப் பேசுகிறார், இந்தப் பெரியவர்.

குறித்தேன் மனத்தில்நின் கோலம்எல்
லாம்நின் குறிப்புஅறிந்து
மறித்தேன் மறலி வருகின்ற
நேர்வழி; வண்டுகிண்டி
வெறித்தேன் அவிழ்கொன்றை வேணிப்
பிரான்ஒரு கூற்றைமெய்யில்
பறித்தே குடிபுகு தும்பஞ்ச
பாண பயிரவியே.

[வண்டுகள் கோதியதனால் மணம் பொருந்திய தேன் கட்டவிழ்ந்து ஒழுகுகின்ற கொன்றை மலரை அணிந்த சடாபாரத்தை உடைய சிவபெருமானுடைய திருமேனியில் ஒரு பாதியை, அவரை அழகால் வென்று கவர்ந்து, அங்கே குடிபுகுந்த, ஐந்து மலரம்புகளையுடைய பயிரவியே, அடியேன் மனத்தில் நின் திருக்கோலம் முழுவதும் தியானம் செய்தேன். அதன் பயனாக நின் திருவுள்ளக் குறிப்பை அறிந்து. யமன் என் உயிரைப் பறிக்க வருகிற நுணுகிய வழியைத் தடுத்தேன்.

குறித்தல்-தியானித்தல்; "குறியைக் குறியாது குறித்தறியும் நெறி" என்பது கந்தர்அநுபூதி. மறித்தேன்-தடுத்தேன். மறலி-யமன். நேர்தல்-நுணுகுதல்; நேர்வழி-மிகவும் நுட்பமாக அமைந்த வழி. கிண்டி-கிண்ட; எச்சத் திரிபு. வெறி-நறுமணம்.]

இந்தப் பாட்டில் குறித்துள்ள கோலம், அம்பிகையின் தனிக்கோலம் என்றும் கொள்ளலாம்; அல்லது பிற்பகுதியில் சொன்ன அர்த்தநாரீசத் திருக்கோலம் என்றும் கொள்ளலாம். யமவாதனையைப் போக்க, அந்தத் திருக்கோலத் தியானம் பயன்படும் என்பதை முன்னே ஒரு பாட்டில் புலப்படுத்தியிருக்கிறார்.

"வவ்விய பாகத்து இறைவரும்
நீயும் மகிழ்ந்திருக்கும்
செவ்வியும் உங்கள் திருமணக்
கோலமும் சிந்தையுள்ளே
அவ்வியம் தீர்த்தென்னை ஆண்டபொற்
பாதமும் ஆகிவந்து
வெவ்விய காலன்என் மேல்வரும்
போது வெளிநிற்கவே." (18)

அம்பிகையை இடைவிடாது தியானித்தால் கால பயம் இல்லாமல் ஒழியும் என்பது கருத்து.

அபிராமி அந்தாதியில் 78-ஆம் பாடல் இது.

# திருநாமங்கள்

அபிராமிபட்டர், "குறித்தேன் மனத்தில் நின் கோலம் எல்லாம்" என்று அம்பிகையின் திருவுருவத்தைத் தியானம் செய்வதைச் சொன்னார். அம்பிகை தனக்கு என்று ஒரு வடிவும் ஒரு பெயரும் உடையவள் அல்லள். ஆனாலும் பக்தர்களுடைய மனத்துள் புகுவதற்கு நாமரூபம் இல்லா விட்டால் முடியாதென்று, அவற்றை எடுத்துக் கொள் கிறாள். மனிதர்கள் வெவ்வேறு மன இயல்புடையவர்கள். அந்த அந்த இயல்புக்கு ஏற்ற வகையில் அவள் திருவுருவம் பல கொள்கிறாள். அப்படியே பல திருநாமங்களையும் ஏற்றுக் கொள்கிறாள். அவளுடைய அனந்த கல்யாண குணங்களையும், அடையாளங்களையும் புலப்படுத்துபவை, அவளுடைய நாமங்கள்.

அம்பிகையின் திருக்கோலத்தைப் பற்றிச் சொன்னவர், இப்போது அவளுடைய திருநாமங்களைப் பற்றிச் சொல்ல வருகிறார். அம்பிகைக்கு எத்தனையோ நாமங்கள் உண்டு. லலிதா சகசிரநாமம் ஆயிரம் திருநாமங்களைச் சொல்கிறது. அதில் இல்லாத பல திருநாமங்களை லலிதாத்ரிசதி சொல் கிறது. இந்த இரண்டிலும் சொல்லப்படாத பல திரு நாமங்களை அம்பிகையின் தோத்திர வடிவாக உள்ள நூல் களில் காணலாம். அந்த அந்தத் தலங்களில் அன்னை வேறு வேறு திருநாமம் உடையவளாக எழுந்தருளியிருக்கிறாள். புதிய புதிய துதிகளை இயற்றும் கவிஞர்கள் புதிய புதிய

பெயர்களை அமைப்பார்கள். அவை யாவும் காரணப் பெயர்கள்; பொருள் உள்ள திருநாமங்கள். இவ்வாறு பல வகையில் அன்னையின் திருநாமங்கள் விரிந்து கொண்டே போவதால் அவற்றிற்கு எல்லை கோலி வரையறுக்க முடியாது.

எம்பெருமாட்டியிடம் அன்பு செய்பவர்கள் அவ ளுடைய திருநாமங்கள் எல்லாவற்றையும் சொல்ல வேண்டும் என்று எண்ணமாட்டார்கள்; அது முடியாத காரியம். ஆனாலும் தம்மால் முடியும் வரையில் அதிக அளவுக்கு அந்தத் திருநாமங்களைச் சொல்லித் துதிப் பார்கள். ஆற்றுக்குப் போகும் பெண் ஆற்றில் உள்ள நீரை யெல்லாம் கொண்டுவர முடியாது. ஆனால் தான் கொண்டு போகும் குடத்தை முழுமையாக நிரப்பிக் கொண்டு வரலாம். அவ்வண்ணமே அம்பிகையின் திருநாமங்களையும் புகழையும் நாம் முழுதும் தெரிந்து சொல்லி விட்டோம் என்று யாராலும் சொல்ல முடியாது. என்றாலும், நம் வாழ்நாள் முழுவதும் பல திருநாமங்களைச் சொல்லி மன நிறைவு பெறலாம். மனம் அமைதி பெறுவதுதான் முக்கியமானது. அப்போதுதான் இன்பம் உண்டாகும்.

அபிராமிபட்டர் ஒரு பாட்டு முழுவதும் அன்னையின் திருநாமங்களாக அடுக்கிச் சொல்கிறார்; பத்துத் திருநாமங் களை எடுத்துக் கூறுகிறார். அவற்றைப் பார்க்கலாம்.

அம்பிகைக்குப் பயிரவி என்பது ஒரு திருநாமம். லலிதா சகசிரநாமத்தில் 276-ஆவது திருநாமமாக வருகிறது அது. பைரவராகிய சிவபெருமானுடைய மனைவி என்பது அதற்குப் பொருள். பகைவர்களுக்கு அச்சம் தருபவள் என்பதும் ஒரு பொருள். "தித்தித்தெய ஒத்தப் பரிபுர நிர்த்தப்பதம் வைத்துப் பயிரவி திக்கொக்க நடிக்கக் கழு தொடு கழுதாட" என்று அருணகிரிநாதர் போர்க்களத்தை

வருணிக்கிறார். பிறருக்கு அச்சம் தரும் வகையில் போர்க்களத்தில் நடமாடும் கொற்றவையைப் பயிரவி என்று குறிப்பிடுகிறார். துர்க்கையாகிய மயான வாசினியைப் பயிரவி என்று சொல்வது உண்டு. பரணி நூல்களில் அந்த நாமம் பயின்று வரும்.

அந்தப் பயிரவி என்ற திருநாமத்தை முதலில் சொல்லிவிட்டு, அடுத்தபடி பஞ்சமி என்ற நாமத்தைச் சொல்கிறார், ஆசிரியர். அந்தச் சொல்லுக்கு ஐந்தாவதாக இருப்பவள் என்று பொருள். பிரமன், திருமால், ருத்திரன், மகேசுவரன், சதாசிவன் என்ற ஐந்து மூர்த்திகளில் சதாசிவன் எல்லாரினும் மேலானவன். அவனுடைய சக்தியாக இருப்பதனால், அன்னைக்குப் பஞ்சமி என்ற திருநாமம் உண்டாயிற்று. இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி, ஆதி சக்தி, பராசக்தி என்ற ஐவகைச் சக்திகளினும் தலையாய பராசக்தியே பஞ்சமி. படைப்பு, அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐவகைத் தொழில்களையும் செய்யும் சக்திகளில் அருளலைச் செய்யும் அநுக்கிரக சக்தி பஞ்சமி, பஞ்ச மகாரங்களில் இறுதியாகிய ஆனந்தவடிவமாக இருப்பவளாதலின் இப்பெயர் வந்ததென்பதும் ஒரு கருத்து. லலிதா சகசிரநாமத்தில் 948-ஆம் திருநாமமாக வருவது இது. "நீடு பஞ்சமி சூலினி மாலினி", "கவுரி பஞ்சமி ஆயீமாயீ", என்று திருப்புகழிலும், "படிக்கும் பெரும்புகழ்ப் பஞ்சமி"; "கருத்திற் பயிலும் வராகிஎம் பஞ்சமி", "பாடகச் சீறடிப் பஞ்சமி" என்று வராகி மாலையிலும் (4,9, 19) இந்தத் திருநாமத்தைக் காணலாம்.

மூன்றுவதாக அபிராமிபட்டர் எடுத்துச் சொல்வது பாசாங்குசை என்ற திருநாமம்; ராகஸ்வரூப பாசாட்யா, க்ரோதாகாராங்குசோஜ்வலா (8, 9) என்று லலிதா சகசிர நாமத்தில் வரும் இரண்டு திருநாமங்களையும் இணைத்து அமைத்தது இது. அம்பிகை தன் கீழ்க் கைகள் இரண்டில்

இடக்கையில் பாசத்தையும் வலக்கையில் அங்குசத்தையும் வைத்திருக்கிருள். அபிராமி அந்தாதியில் பல இடங்களில் அன்னை பாசத்தையும் அங்குசத்தையும் ஏந்துவதை ஆசிரியர் பாடியிருக்கிருர்.

அம்பிகை ஐந்து மலர்களாகிய அம்புகளைத் தரித்தவள். அவை ஐந்தும் பஞ்ச தன்மாத்திரைகளைக் குறிப்பவை; 'பஞ்ச தன்மாத்ர ஸாயகா' என்று (11) லலிதா சகசிர நாமம் கூறும். இவற்றை மேலுள்ள வலக்கையில் அம்பிகை ஏந்தியிருக்கிருள். பஞ்சபாணத்தை உடையவளாதலின் பஞ்சபாணி என்று அம்பிகைக்கு ஒரு திருநாமம் உண்டாயிற்று. அதை ஆசிரியர் சொல்கிருர், தாமரை, மாம்பூ, அசோகமலர், முல்லை, நீலோற்பலம் என்பவை அந்த ஐந்து பாணங்கள்.

பயிரவி பஞ்சமி பாசாங்குசை பஞ்சபாணி

என்று நான்கு திருநாமங்களை அடையில்லாமல் சொல்லி விட்டு அடுத்த நாமமாகிய சண்டி என்பதை,

வஞ்சர் உயிர் அவி உண்ணும் உயர்சண்டி

என்று அடையுடன் சொல்கிருர். 'போர்க்களத்தில் வஞ்சகர்களாகிய அசுரர்களின் உயிரைப் பலியாகக் கொள்ளும் உயர்ந்தவளாகிய சண்டி' என்பது இதன் பொருள். "கனைகழல் நினையலர் உயிரவி பயிரவி" (தேவேந்திரசங்கவகுப்பு என்பது அருணகிரிநாதர் திருவாக்கு. சண்டி என்ற நாமமே சண்டிகா என்றும் வழங்கும். லலிதா சகசிரநாமத்தில் 552-ஆவதாக உள்ளது. கோபமுள்ளவள் என்பது பொருள். கொடுமைகள் நீங்கவும் நன்மை உண்டாகவும் சண்டி தேவியை வழிபட்டு வேள்வி செய்வது பெரியோர்கள் வழக்கம்.

காளி என்ற திருநாமத்தை அடுத்தபடி சொல்கிருர் ஆசிரியர். சண்டாசுரனையும் முண்டாசுரனையும் சங்கரித்த

பெருமாட்டி தேவி; அந்த நிலையில் அம்பிகைக்குக் காளி என்னும் திருநாமம் வழங்கும்; கரிய நிறம் உடையவள் என்பது சொற்பொருள்.

அன்னை எல்லாக் கலைகளுக்கும் தலைவி. அவை அவளைச் சார்ந்து விளக்கம் பெறுகின்றன. கலைகளையே மாலையாகத் தரித்திருத்தலின் கலாமாலா என்ற திருநாமம் அம்பிகைக்கு வந்தது. எல்லாக் கலைகளையும் அன்னை இடையில் மேகலையாக அணிந்திருக்கிறாளாம். பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணத்தில், "மெய்ம்மறையார் கலையனைத்தும் மேகலையா மருங்கசைத்த விமலை யம்மா" (4:34) என்று பாடுகிறார். இதை வேறு வகையில் இவ்வாசிரியர் சொல்கிறார். 'விளங்குகின்ற கலைகளாகிய வயிரங்களாலான சிறப்புள்ள வட்டமான மேகலையை அணிந்தவள்' என்னும் பொருள்பட,

ஒளிரும் கலா வயிர விமண்டலி

என்றார். ஒளிரும் என்பது, அம்பிகையைச் சார்ந்ததனால் அவை விளக்கம் பெறுகின்றன என்பதைக் குறிக்கும். மண்டலம்-வட்டம்.

மாலினி என்பது ஒரு திருநாமம். அதையும் சொல்கிறார். மலர்மாலையை அணிந்தவள் என்பது ஒரு பொருள். மாத்ருகா மாலையாகிய எழுத்து வரிசையின் தோற்றத்துக்குக் காரணமானவள் என்பது மற்றொரு பொருள். அம்பிகையே எழுத்தாகவும், சொல்லாகவும் விளங்குகிறாள். அக்ஷர மாலையைத் தரித்திருப்பவள்; "அக்ஷமாலாதிதரா" (489) என்பது அவள் திருநாமங்களில் ஒன்று.

அம்பிகை ஒரு கோலத்தில் சூலம், பாசம், கபாலம், அங்குசம் என்னும் நான்கு ஆயுதங்களையும் ஏந்தியிருக்கிறாள். 'சூலாத்யாயுத ஸம்பந்நா' (506) என்பது ஒரு திருநாமம். அந்த நான்கிலும் சூலம் முக்கியமானது. அதனால் அம்பி

கைக்குச் சூலி, சூலினி என்ற திருநாமங்கள் உண்டாயின. இந்தப் பாட்டில் சூலி என்ற பெயரைச் சொல்கிறார், அபிராமிபட்டர்.

பத்தாவதாக வராகி என்ற நாமத்தைச் சொல்கிறார். இது வாராகி என்றும் வழங்கும். விஷ்ணு சக்திகளில் வராக அவதாரத்துக்குரியவளும், சப்த மாதாக்களில் ஒருத்தியும் வராகி என்று வழங்கப் பெறுவாள். அந்தச் சக்தியாக இருப்பவள் என்பது ஒரு பொருள். அம்பிகையின் படைத் தலைவியாக இருக்கும் சக்திக்குத் தண்டினி, தண்டநாதா, வராகி என்ற பெயர்கள் உண்டு. வராகிக்குப் பன்னிரண்டு திருநாமங்கள் இருக்கின்றன. த்ரிபுரா சித்தாந்தம் என்னும் நூல், "பராசக்தி வராகானந்த நாதர் என்பவருக்கு வராகத் திருமுகத்துடன் தரிசனம் தந்தமையின் வாராகி என்னும் பெயர் பெற்றாள்" என்று கூறும். 32 செய்யுட்களால் வராகியைத் துதிக்கும் தமிழ் நூல் ஒன்று வராகி மாலை என்ற பெயருடன் வழங்குகிறது.

சூலி, வராகி என்று இரண்டையும் இங்கே அடுத்தடுத்துச் சொல்லுவது போலவே முன்பு. "வாராகி சூலினி மாதங்கி" (50) என்று சொன்னார்.

இப்படி உள்ள திருநாமங்கள் வேதத்திலுள்ள பொருள்களை உள்ளடக்கியவை; ஆதலின் இவற்றை, 'நான்மறை சேர் திருநாமங்கள்' என்கிறார். இவை தம்மை உச்சரிப்பார்களுடைய குற்றங்களை எல்லாம் போக்கும் தன்மை வாய்ந்தவை. இந்தத் திருநாமங்களை ஆன்றோர்கள், அம்பிகையின் மெய்யன்பர்கள், பலகாலும் சொல்லிப் பயன் பெறுவார்கள்.

என்றே

செயிர் அவி நான்மறை சேர் திரு நாமங்கள்
செப்புவரே

என்று கூறி முடிக்கிறார் ஆசிரியர். 'இந்த நாமங்கள் நானாகக் கற்பித்து அமைத்தவை அல்ல. பெரியவர்கள், அறிந்தவர்கள், அம்பிகையின் அன்பர்கள் இவற்றை எடுத்துச் சொல்வார்கள். அவர்கள் நான்மறையிலிருந்து அவற்றை உணர்ந்து செப்பினார்கள். அவற்றை ஓதுவார்களுடைய செயிர்கள் (குற்றங்கள்) அவியும் (அழியும்)' என்று சொல்கிறார்.

பயிரவி பஞ்சமி பாசாங்
குசைபஞ்ச பாணிவஞ்சர்
உயிர்அவி உண்ணும் உயர்சண்டி
காளி ஒளிரும்கலா
வயிர விமண்டலி மாலினி
சூலி வராகிஎன்றே
செயிர்அவி நான்மறை சேர்திரு
நாமங்கள் செப்புவரே.

[செயிர் அவி திருநாமங்கள், நான்மறை சேர் திருநாமங்கள் என்று கூட்டிப் பொருள் கொள்க. செப்புவரே என்ற பயனிலைக்கு எழுவாயாக ஆன்றோர், அறிஞர், அன்பர் என்பவற்றில் ஒன்றை வருவித்து உரைத்துப் பொருள் கொள்க. அது தோன்றா எழுவாய்.]

இது அபிராமி அந்தாதியில் 77-ஆவது பாட்டு.

# கண்ணில் எழுதிய வடிவம்

இறைவியின் திவ்ய ரூபலாவண்யத்திலே மனம் பறி கொடுத்த பக்தர்கள் அந்த வடிவத்தை எப்பொழுதும் தியானித்துக் கொண்டே இருப்பார்கள். மனம் பல விதமாக அலையாமல் இருக்கவேண்டுமானால் அதற்கு ஏதாவது வேலையைக் கொடுத்துக்கொண்டே இருக்க வேண்டும். பொல்லாத குழந்தை ஒன்று கத்தியை வைத்துக் கொண்டு விளையாடுகிறது. அது தன் கையை வெட்டிக்கொள்ளுமே என்று தாய் அஞ்சுகிறாள். "அதைக் கீழே போட்டுவிடு" என்று சொன்னால் முரட்டுக் குழந்தை போடாது. கத்தியைப் பிடுங்கப்போனால் இறுகப் பிடித்துக் கொண்டு தன் கையைக் காயப்படுத்திக்கொள்ளும். அவ்வாறு செய்யாமல் ஓர் அழகிய பொம்மையை அந்தக் குழந்தையின் கையில் கொடுத்தால் கத்தியை நழுவவிட்டுப் பொம்மையைப் பிடித்துக்கொள்ளும்.

மனத்தை வழிப்படுத்த வேண்டுமானால், "நீ சும்மா இரு" என்று சொல்லி அடக்க முடியாது. தன் போக்கில் அது போவதை மாற்ற வேண்டுமானால் அதற்கு ஏதாவது நல்ல வேலையைக் கொடுக்க வேண்டும். அன்னையின் திருவுருவத்தைக் கண்டு அதனை அடிக்கடி நினைத்துப் பார்க்க வேண்டும். எளிதில் அந்த வடிவம் உள்ளத்தில் படியாது. ஒரு கணம் படிந்தால் அடுத்த கணம் மனம்

எங்காவது போய் நிற்கும். இடைவிடாமல் அடுத்தடுத்துத் திருவுருவத் தியானத்தைச் செய்ய வேண்டும்.

அப்படித் தியானம் செய்து பழகினால், நினைக்கும் போதெல்லாம் அந்த வடிவத்தை உள்ளத்திலே ஒருவாறு காண முடியும். அந்த வடிவம் உள்ளே பதியப் பதியக் கண்ணிலே வந்து நிற்பது போன்ற உணர்வு உண்டாகும்.

நாம் ஏதேனும் அழகிய வடிவத்தைக் கண்டு மனம் ஈடு பட்டால், "இன்னும் என் கண்ணிலே நிற்கிறது" என்று சொல்லுகிறோம் அல்லவா? உள்ளத்திலே அந்த வடிவம் நன்றாகப் பதிந்தால் அத்தகைய நிலை உண்டாகும்.

அபிராமி பட்டர் புறக்கண்ணால் அபிராமியின் பேரழகைக் கண்டு கண்டு களித்தவர்; உள்ளத்திலே வைத்துத் தியானித்துப் பழகியவர். அதன் பயனாக எம்பெருமாட்டியின் திருவடிவம் முழுவதும் தம் கண்ணிலே நிற்பது போன்ற அநுபவம் அவருக்கு ஏற்பட்டிருக்கிறது. "என்னுடைய இரண்டு விழிகளிலும் அன்னையின் அங்க லாவண்யத்தை எழுதி வைத்தேன்" என்று சொல்கிறார். உள்ளே அம்பிகையைத் தியானித்துக்கொண்டே விழித்துப் பார்த்தால் கண்முன்னே உள்ள பொருள் ஏதும் தோன்றுவ தில்லை. எல்லாம் அவள் மயமாகவே காட்சியளிக்கின்றன. மஞ்சட்காமாலை வந்தவனுக்கு எல்லாம் மஞ்சளாகத் தோன்றுவதுபோல், உள்ளத்தே வைத்த வடிவத்தின் அழகு பொங்கித் ததும்பிக் கண்ணில் வழிவதனால் கண் விழித்திருந்தாலும் வேறு காட்சியே தெரிவதில்லை.

"விழித்த கண்குரு டாத்திரி வீரரும் பலரால்"

என்று உண்முக நோக்கம் உடைவர்களைச் சொல்வார்கள். இந்த அன்பரோ உள்ளும் புறம்பும் அன்னையையே காண் கிறார்; கருத்திலே எழுதி வைத்ததையே கண்ணிலும் எழுதி வைக்கிறார்.

எழுதி வைத்தேன் என் துணைவிழிக்கே

என்று பாடுகிறார்.

அம்பிகையின் திருவடிவிலுள்ள அங்கங்களைக் காண்கிறார். அந்தப் பெருமாட்டி உலகத்துக்கெல்லாம் தாய். ஞானமே பாலாக நிறைந்த தனபாரங்களை உடையவள். தாயின் திருமார்பில் குழந்தைக்குக் கண் செல்லும். அபிராமிபட்டராகிய குழந்தை தாயை இனம் கண்டு கொள்ளும்போது அந்த ஞானப்பால் பூரித்த கலசம் முதலில் நினைவுக்கு வருகிறது. பெண்களிலே அன்னையின் அழகு வேறு யாருக்கு வரும்? "அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி" என்று இவ்வாசிரியரே பாடுகிறார். பெண்களின் அழகை எடுத்துக்காட்டுவன அவர்களுடைய நகில்களும் கண்களும் புன்முறுவலும். பருவ அழகின் பொலிவை வெளிப்படுத்துபவை நகில்கள். முகத்துக்கு அழகு தருவன விழிகளும் புன்னகையும். அம்பிகையிடம் உள்ள இந்த மூன்றையும் இந்தப் பக்தர் சொல்கிறார்.

தன பாரங்களை, அம்பிகையின் திருநாமத்தைச் சொல்லும்போது அடைமொழியாக்கிச் சொல்கிறார்.

அன்னையின் தனங்கள் கடைந்த தந்தச் செப்புக்களைப் போல இருக்கின்றன; ஒளி விடுவதனால் தங்கக் கலசங்களைப் போலவும் ஒளிர்கின்றன. அவற்றின் மேல் கலவைச் சந்தனக் குழம்பை அப்பிக் கொண்டிருக்கிறாள்.

செப்பும் கனக கலசமும்
போலும் திருமுலைமேல்
அப்பும் களப அபிராமவல்லி.

இவ்வாறு அடையாகச் சொல்லித் திருநாமத்தைக் கூறினாலும் அவருடைய தியானத்துக்குரிய வடிவில் இந்த அங்கங்களின் பொலிவை அவர் கண்டு கண்டு குழந்தைக்கு உரிய நிலையை அடைகிறார் என்று கொள்ள வேண்டும்.

இனிமேல், அவர் கண்ணில் எழுதி வைத்தவற்றைச் சொல்ல வருகிறார்.

அம்பிகையின் கண்ணை நினைக்கிறார். கண்ணின் கடையில் அருள் வழியும். "அபிராமி கடைக் கண்களே" என்று பாடினவர் அல்லவா இவர்? அந்தக் கடாட்ச வீட்சண்யத்தைப் பெற்றவர், இப்போது அதை நினைக்கிறார். அம்பிகையின் திருவிழி நீளமானது; காதளவோடிய கண். அதன் கடைசியை, அதாவது கடைக்கண்ணைக் காதுக்கு அருகில்தான் பார்க்கவேண்டும். கோயில் வாயிலைக் கண்டு உள்ளே புகுவாரைப் போல முதலில் காதைக் கண்டு அதனருகில் உள்ள கடைக்கண்ணைக் காணுகிறார்.

அம்பிகை தன் மேற்காதில் கொப்பையும், கீழ்க் காதில் தோடு அல்லது குழையையும் அணிந்திருக்கிறாள். கொப்பு என்பது மேல்காதில் அணிவது. முத்தால் ஆன கொப்பு அது. கீழுள்ள குழை கண்ணின் கடையோடு ஒட்டி ஒளி வீசுகிறது. அது வயிரத்தால் ஆனது. அந்தக் குழையைத் தாடங்கம் என்று வடமொழியில் சொல்வார்கள்.

அம்பிகையின் இரண்டு காதுகளிலும் சூரியனும் சந்திரனுமே தாடங்கங்களாக இருக்கிறார்களாம். "தாடங்க யுகளீபூத தபனோடுப மண்டலா" (22) என்று லலிதா சகசிர நாமம் இந்தச் செய்தியைச் சொல்கிறது.

அபிராமிபட்டர் அந்தக் காதணிகளை நினைக்கிறார்.

அபிராமவல்லி அணி தரளக்
கொப்பும் வயிரக் குழையும்-

காதணிகளை நினைத்தவுடன் அருகில் உள்ள கடைக் கண் தெரிகிறது. அது வளமான கடைக்கண்; அருளால் பொலிவு பெற்றதாதலின் அதைக் கொழுமையானதென்கிறார்.

## விழியின் கொழுங்கடையும்.

அம்பிகையின் கடைக்கண் அருளுக்காக ஏங்குகிறவர்கள் பக்தர்கள். ஆகவே அவர்களுடைய நோக்கம் அந்தக் கடைக்கண்ணிலே இருக்கும்.

அடுத்தபடி, அம்பிகையின் திருவுள்ளம் உவப்புற்றதைக் குறிப்பது, அவளுடைய புன்முறுவல். பெண்களின் உள்ளக் குறிப்பைக் காட்டுவது அவர்களின் முறுவல். காதலன் தன் காதலியின் முறுவலிலிருந்து அவள் உள்ளத்திலுள்ள காதற் குறிப்பை உணர்ந்து மகிழ்வான். அகப்பொருட் பாடல்களில் இந்தச் செய்தியைச் சொல்லும் துறைக்கு, 'முறுவற் குறிப்பு உணர்தல்' என்று பெயர். காதலானாலும் வாத்ஸல்யம் ஆனாலும் உள்ளக் குறிப்பைப் புன்முறுவல் காட்டும்.

அபிராமி பட்டர் அம்பிகையின் திருவுள்ளத்தில் பொங்கும் வாத்ஸல்யத்தை உணரத் துடிக்கிறார். அவளுடைய திருவாயைப் பார்க்கிறார். அவளுடைய அதரங்கள் சற்றே திறந்து புன்னகையை வெளிப்படுத்துகின்றன.

முதலில் இதழ் கண்ணிலே படுகிறது. அது பவளத்தைப் போலச் செக்கச் செவேலென்று ஒளி விடுகிறது. 'நவவித்ரும பிம்பஸ்ரீ நயக்காரி தசனச்சதா' (லலிதா. 2-) என்பது அன்னையின் திருநாமங்களில் ஒன்று. 'புதிய பவளம், கோவைக்கனி ஆகியவற்றின் ஒளியைத் தாழச் செய்கின்ற இதழ்களை உடையவள்' என்பது அந்தத் திருநாமத்தின் பொருள். அதனால் புதிய பவளத்தினும் சிறந்த செவ்வண்ணம் உடையது அன்னையின் இதழ் என்பது புலனாகிறது.

இங்கே அந்த இதழைப் பவளம் போன்ற இதழ் என்று சொல்லவில்லை; பவளம் என்றே சொல்லிவிடுகிறார். 'அதோ

பவளம்!' என்று வியப்பு மீதூரச் சொல்வதுபோலச் சொல்கிறார்.

இதழ்களினிடையே அம்பிகையின் புன்முறுவல் மலர்ந்திருக்கிறது. அதைப் பார்த்தவுடனே உள்ளம் குளிர்கிறது. அந்த முறுவல் நிலவைப்போல, ஒளியும் தண்மையும் எழிலும் இணைந்து தோன்றுகின்றது. இதழைப் பவளம் என்று சொன்னதுபோல இதழினூடே தோன்றும் முறுவலை நிலவு என்றே சொல்கிறார்.

துப்பும் நிலவும்

என்று சேர்த்துச் சொன்ன குறிப்பினால், அவை அன்னையின் திருவாயில் உள்ள அதரத்தையும் புன்முறுவலையும் உணர்த்துகின்றன என்று தெரியவரும்.

அன்னையின் புன்முறுவலைப்பற்றி மூக கவி 'மந்தஸ்மித சதகம்' என்று வடமொழியில் நூறு பாடல்கள் பாடியிருக்கிறார். லலிதா சகசிரநாமத்தில் அந்த முறுவலின் சிறப்பை உணர்த்தும் திருநாமங்கள் மூன்று உள்ளன. 'மந்தஸ்மித ப்ரபாபூர மஜ்ஜத் காமேச மானஸா' (28) (தன்னுடைய புன்முறுவலின் ஒளி வெள்ளத்தில் காமேசுவரருடைய திருவுள்ளத்தை முழுகச் செய்கின்றவள்) என்பது ஒரு திருநாமம். 'சாருஹாஸா' (242) (அழகிய முறுவலை உடையவள்) என்பது மற்றொரு திருநாமம். அந்த முறுவலே திங்களின் நிலவாக இருக்கிறதென்றும் சொல்வதுண்டு. 'தரஸ்மேர முகாம்புஜா' (924) என்பது ஒரு திருநாமம்; 'சிறிது முறுவல் பூக்கும் திருமுகத்தாமரையை உடையவள்' என்பது பொருள். இவ்வாறு போற்றப்பெறும் புன்முறுவலாகிய நிலவையும் அபிராமிபட்டர் தம் கண்களில் நிறுத்துகிறார்.

கொப்பை முதலில் கண்டு, அப்பால் கீழே பார்வையைத் தாழ்த்திக் குழையைத் தரிசித்து, அதை அடுத்துக் கடைக்

கண்ணைச் சேவித்து, பிறகு சற்றே பார்வையை இறக்கித் திருவாயின் உதடுகளைப் பார்த்து, அவற்றினிடையே தோன்றும் நிலவனைய முறுவலை விழியில் நிறுத்துகிறார்.

அணிதரளக் கொப்பும் வயிரக் குழையும்
விழியின் கொழுங்கடையும்
துப்பும் நிலவும் எழுதிவைத்தேன் என்
துணைவிழிக்கே.

அம்பிகை கொப்பு அணிவதை, "காதுக்கொர் தமனியக் கொப்புமிட்டு" (செங்கீரைப். 1) என்று மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழிலும் காணலாம். கண் முன்னே தோற்றுவதைக் கண்ணில் எழுதிவைப்பதாகக் கூறுவதை, "கருணை வதன பற்பமும் கமல விழியும் மனமும் எழுதி" (முத்துக் குமாரசாமி பிள்ளைத்தமிழ், முத்தப். 10) என்பதனாலும் உணரலாம்.

அம்பிகையின் திருவுருவத் தியானச் சிறப்பினால் அவளுடைய திருவுறுப்புகள் கண்ணிலே வந்து நிற்கின்ற அநுபவம் மிகச் சிறந்தது, மிகச் சிறந்த பக்தர்களே இந்த அநுபவத்தைப் பெறுவார்கள். அபிராமிபட்டர் அத்தகையவர்.

செப்பும் கனக கலசமும்
போலும் திருமுலைமேல்
அப்பும் களப அபிராம
வல்லி அணிதரளக்
கொப்பும் வயிரக் குழையும்
விழியின் கொழுங்கடையும்
துப்பும் நிலவும் எழுதிவைத்
தேன்என் துணைவிழிக்கே.

[தந்தத்தால் கடைந்த செப்பையும் தங்கத்தாலான கலசத்தையும் போன்ற அழகிய தனங்களின்மேல் அப்பிய

கலவைச் சந்தனத்தையுடைய அபிராமவல்லி காதில் அணிந்த முத்துக் கொப்பையும், வயிரக் குழையையும், திருவிழியின் செழுமையான கடைசியையும், பவளம் போன்ற இதழ்களையும், அவற்றினிடையே மலர்ந்த நிலவு போன்ற புன்னகையையும் என் இரண்டு கண்களிலும் எழுதி வைத்தேன்.

பொதுவாகச் செப்பு என்றாலும், பின்னே தங்கக் கலசத்தைச் சொன்னமையால் தந்தச் செப்பைக் கொள்வது சிறப்பு. நகிலை அடையாகச் சொன்னாலும் அவையும் அவருடைய விழியில் நிற்பனவாகக் கொள்ளவேண்டும். குழை என்பது தளிருக்குப் பெயர். பழங்காலத்தில் பெண்கள் தம் காதில் அசோகந்தளிர் முதலிய தளிர்களை அணிந்தார்கள். நாளடைவில் பொன்னும் மணியும் கொண்டு செய்த காதணி வந்தபோது அதையும் குழையென்றே சொன்னார்கள். அதனால் குழை என்பது காதணி என்ற பொருளிலே வழங்குகிறது. விழிக்கடைக்குக் கொழுமை, கருணை நிரம்பியிருத்தல்.

துப்பு-பவளம்; இங்கே இதழுக்கு ஆயிற்று; அப்படியே நிலவு, புன்சிரிப்புக்கு ஆயிற்று; இரண்டும் உவம ஆகு பெயர்கள். துணைவிழி-இரண்டு கண்கள். விழிக்கே-விழியில்; உருபு மயக்கம்.]

அம்பிகையின் வடிவைத் தியானச்சிறப்பினால் புறத்தும் பார்க்கலாம் என்பது கருத்து.

இது அபிராமி அந்தாதியில் 78-ஆவது பாட்டு.

# என்ன உறவு?

இந்த உலகில் பிறந்த உயிர்கள் இங்கும் நன்ருக வாழ வேண்டும். இந்தப் பிறவிக்குப் பின்னும் என்றும் மாருத இன்ப வாழ்வைப் பெறவேண்டும். எப்படி வாழ வேண்டுமோ அப்படி வாழ்ந்தால் இந்த இரண்டு வகைப் பயன்களையும் பெறலாம். நம்முடைய சமய நூல்கள் நமக்கு வகுத்துக் காட்டும் நெறிகள் இந்த இருவகை வாழ்வையும் பெறுவ தற்கு உதவுவன.

மனிதன் பெறவேண்டிய உறுதிப் பொருள்கள் நான்கு. அவற்றைப் புருஷார்த்தம் என்று வடமொழியில் சொல் வார்கள். அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பவை. இவற்றில் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றும் இந்த உலக வாழ்வில் பெறுவதற்குரியவை. வீடு இந்த வாழ்வுக்குப்பின் அடைவது. இறைவனை வழிபட்டு அவன் அருளைப் பெற்ருல் இந்த இருவகை வாழ்வும் நமக்குக் கிடைக்கும் என்று அருளாளர்கள் உறுதியாகச் சொல்லி யிருக்கிருர்கள்.

"மண்ணில் நல்லவண்ணம் வாழலாம் வைகலும்;
எண்ணின் நல்லகதிக்கு யாதுமோர் குறைவிலை"

என்பது திருஞானசம்பந்தப் பெருமானுடைய திருவாக்கு.

"இம்மை யேதரும் சோறும் கூறையும்;
ஏத்த லாம்இடர் கெடலும்ஆம்;
அம்மை யேசிவ லோகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுற வில்லையே"

என்பது சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்.

அறம் என்பது, செய்யவேண்டியதைச் செய்து, விலக்க வேண்டியதை விலக்குவது. அவரவர்கள் தம் தம் நிலைக்கு ஏற்றபடி தம் தம் கடமைகளைச் சேய்து வரவேண்டும். அதுவே அறம்.

பொருள் என்பது அறவழியில் நின்று ஈட்டும் செல்வம். இந்த உலக வாழ்வுக்கு இன்றியமையாதது பொருள். "பொருளிலார்க்கு இவ்வுலகம் இல்லை" (திருக்குறள்) என்பது வள்ளுவர் வாக்கு. முனிவர்களே யானாலும் இவ்வுலக வாழ்க்கைக்கு வேண்டியவற்றைப் பொருளினால் பெறுவார்கள். அதனால்,

"முனிவரும் மன்னரும் முன்னுவ
பொன்னால் முடியும்"

என்று மாணிக்கவாசகரே சொல்கிறார்.

பொருளை ஈட்டுவதும் இல்லறத்தானுக்குரிய கடமை நேர்மையான வழியில் ஈட்டிப் பிறருக்கு ஈவதோடு கடமைகளை ஆற்றவும் பொருள் பயன்படும். அப்படியே மனைவியோடு வரையறைக்கு உட்பட்ட இன்பத்தைப் பெறுவதும் உறுதிப் பொருளேயாகும். மகரிஷிகளில் பலர் தம்முடைய மனைவியரோடு வாழ்ந்தவர்கள்; அவர்களுக்கு மக்களும் உண்டு.

இவ்வாறு அறம் செய்து, நேர்மையான வழியில் பொருளை ஈட்டி, செய்யவேண்டியவற்றுக்காக அதைச் செலவிட்டு, மனைவியோடு இன்புற்று மக்களைப் பெற்று வாழ்வது இல்வாழ்வானுக்குரிய நல்வாழ்வு. இந்த வாழ்வை

நன்கு வாழ்பவன் மனம் அமைதியாக இருக்கும். எம் பெருமாட்டியை எண்ணி அறம் செய்து, அவள் அருளை முன்னிட்டுக் கொண்டு பொருள் ஈட்டி, அவள் அருளை மறவாமல் மனைவியோடு வாழ்ந்தால் அந்த அருளே நமக்கு வீடு என்னும் பேரின்ப வாழ்வைக் கொடுக்கும்.

அபிராமி அம்மை, நல்ல முறையில் வாழ்ந்து தன்னை வழிபடும் அன்பர்களுக்கு எல்லா நன்மைகளையும் தருவாள். அவளே நேராகக் கொண்டுவந்து தருவாள் என்பது இல்லை. அவள் தன் அருட்கண்ணால் பணித்தால் போதும்; நமக்குச் சகல சௌபாக்கியங்களும் வந்து சேரும்.

"இவன் என் பக்தன் இவனுக்குக் கல்வியைத் தருவாயாக" என்று தன் கடைக்கண்ணினால் கலைமகளுக் குக் குறிப்பித்தால் போதும்; வாய் திறந்து சொல்ல வேண்டியதில்லை. உடனே கலைமகள் நமக்குச் சிறந்த கல்வி யறிவை வழங்குவாள். மிக உயர்ந்த நிலையில் உள்ளவர்கள் தம்முடைய குறிப்பினாலே மற்றவர்களுக்கு ஏவல் இடு வார்கள்.

என் ஆசிரியப்பிரானாகிய டாக்டர் மகாமகோபாத்தி யாய ஐயரவர்கள், திருவாவடுதுறை ஆதீனத்தில் ஞானா சிரியராக இருந்த அம்பலவாண தேசிகரைப்பற்றி ஒன்று சொல்வார்கள். அவர் மிகச் சிறந்த அறிவு பெற்றவர். மடத்துக்கு யாரேனும் வந்தால் அவர்களை வரவேற்று உபசரிப்பது வழக்கம். வெவ்வேறு பதவியில் வெவ்வேறு பணியாளர்கள் இருப்பார்கள்.

வருகிறவர்கள் பல திறப்பட்டவர்கள். அதிகாரிகள் வருவார்கள்; செல்வர்கள் வருவார்கள்; சிறந்த புலவர்கள் வருவார்கள். அவரவர்களுக்கு ஏற்றபடி உபசாரம் செய்ய வேண்டும். அதிலும் தரம் அல்லது வரிசை உண்டு அல்லவா?

அப்படி வருகிறவர்களுக்குஇன்ன இன்னவாறு உபசாரம் செய்ய வேண்டுமென்று ஆதீனத்தலைவர் விரிவாகச் சொல்ல மாட்டார்; குறிப்பாகப் புலப்படுத்துவார். அந்தக் குறிப்பை உணர்ந்து பணியாளர்கள் ஆவன செய்வார்கள்.

"கலெக்டர் வந்திருக்கிறார்" என்று மடத்தின் பணியாளர் வந்து சொல்வார்.

"அப்படியா? சரி" என்பார் தலைவர். அப்படிச் சொல்வதிலேயே அவருக்கு எந்த வகை உபசாரத்தைச் செய்ய வேண்டுமென்பதைப் பணியாளர் தெரிந்துகொள்வார்.

"வக்கீல் ஐயா வந்திருக்கிறார்" என்பார் பணியாளர்.

"வரட்டும்" என்பார் பண்டாரசந்நிதிகள். அதற்கு ஓர் அர்த்தம் உண்டு. அதன்படி வரவேற்பு நடக்கும்.

"இன்ன ஜமீன்தார் வந்திருக்கிறார்" என்றுசொன்னால், தலைவர் காலை மாற்றி உட்காருவார். அதிலிருந்து பணியாளர் குறிப்பை உணர்ந்துகொண்டு அந்த ஜமீன்தாரை வரவேற்பார்.

இவ்வாறு குறிப்பிப்பதும் அதை உணர்ந்து செய்வதும் இரு சாராருடைய இயல்பையும் பொறுத்திருப்பவை.

அம்பிகை எல்லோருக்கும் மேலான நிலையில் இருப்பவள். அவளுடைய ஆணைக்கு அடங்கி எல்லாத் தேவர்களும் தம் தம் தொழிலைச் செய்துவருகிறார்கள். தன்னிடம் அன்பு செய்யும் பக்தர்களுக்கு அநுக்கிரகம் செய்யவேண்டும் என்று அம்பிகை திருவுள்ளம் கொண்டால் போதும். அன்பர்களுக்கு என்ன வேண்டுமோ அதைத் தருவதற்கு அவள் முயன்று ஒன்றும் செய்யவேண்டியதில்லை. திருவுள்ளத்தில் எழுந்த அருளைக் கண்ணால் காட்டினால் போதும். அவளுடைய ஏவலைச் செய்கிறவர்கள் அந்தக் குறிப்பை உணர்ந்துகொண்டு அன்பர்களுக்கு வேண்டியவற்றைத் தருவார்கள்.

அம்பிகைக்குத் தன் அன்பர்களுக்கு வேண்டியவற்றை வழங்கவேண்டும் என்ற கருணை நிரம்ப உண்டு. அந்த அருளை வெளிவிடும் மடையாகத் திருவிழிகள் இருக்கின்றன.

விழிக்கே அருள் உண்டு, அபிராமவல்லிக்கு.

அந்த விழிகளின் குறிப்பை உணர்ந்து கலைமகள் கல்வி அறிவை வழங்குவாள்; திருமகள் செல்வத்தை வழங்குவாள்; மற்ற மற்றத் தேவர்கள் தம்மால் ஆகும் நலங்களையெல்லாம் செய்வார்கள். மின்சாரத்தினால் இயங்கும் விசிறி முதலிய பல கருவிகள் வீட்டில் உள்ளன. மூல ஸ்விட்சைப் போட்டால் எல்லாம் எப்படி எப்படி இயங்க வேண்டுமோ அப்படி அப்படி இயங்கும். அபிராமவல்லியின் விழியருளும் அத்தகையதுதான். அந்த விழியின் அருட் குறிப்புக் கிடைத்துவிட்டால் எல்லாம் நிரம்பும்.

ஆனால் அந்த அருளைப் பெறவேண்டுமே! எம்பெருமாட்டியின் திருவுள்ளம் உவக்குமானால் அருள் பொங்கும். அது அவள் விழியின்வழியே ஊற்றெடுக்கும். அன்னையின் திருவுள்ளம் உவக்கும்படி ஒழுகுவது எப்படி?

இந்த உலகில் வாழவேண்டிய முறையில் வாழ்ந்து அவளுக்கு அடிமையாகி இடையீடுபடாத அன்பு செய்தால் அவளுடைய திருவுள்ளம் குளிரும்; அருள் வெளிப்படும்.

உலகில் வாழவேண்டிய முறை எது? அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு உறுதிப்பொருள்களையும் அடையும் வழியை நமக்கு அறிவிப்பது வேதம். இந்தியாவில் பல பல சமயங்கள் இருந்தாலும், இந்த நாட்டுக்கே உரிய சமயங்களுக்கெல்லாம் அடிப்படை நூலாக இருப்பது வேதம். அது யார் யார் எப்படி ஒழுகவேண்டும், எதை எதைச் செய்யவேண்டும், எவற்றைச் செய்யக் கூடாது என்பவற்றை வரையறையாகச் சொல்வது.

செய்ய வேண்டியதை விதித்தும் செய்யத் தகாதவற்றை விலக்கியும் வழிகாட்டுகிறது. வேதம் சொன்ன வழியே நடப்பது இந்துக்களின் கடமை. சைவம், வைஷ்ணவம், சாக்தம் என்று உபாசனை வகையினால் வெவ்வேறு சமயங்கள் இந்த நாட்டில் இருந்தாலும் எல்லாவற்றிற்கும் ஆதார மாக இருப்பது வேதம். அதனால் எல்லாவற்றுக்கும் பொதுவாக ஒரு பெயர் சொல்ல வேண்டுமானால் இந்து மதம் என்று சொல்கிறோம். அது பிற்காலத்தில் வந்த பெயர். வைதிக மார்க்கம் என்று சொல்வது பொருந்தும். அதையே வேதநெறி என்று கூறுவார்கள். அந்த நெறிக்குள் சைவம், வைஷ்ணவம் முதலிய கிளைகள் அல்லது துறைகள் பல இருக்கின்றன.

இந்துக்கள் வாழும் நெறியைக் காட்டுவது வேதம். இனிப் புதியதாக ஒரு நூலைப் படைக்க வேண்டிய அவசியம் இல்லை. மிகமிகப் பழைய காலம் முதற்கொண்டு வேதம் இந்த நாட்டுக்கு வழி காட்டி வருகிறது. இறைவி எப்படி அநாதியோ அப்படியே வேதமும் அநாதி.

ஆதலால் யார் சொல்வதைக் கேட்டால் நல்லது என்ற கேள்விக்கே இடம் இல்லை. அவரவர்கள் எப்படி எப்படி நடக்க வேண்டும் என்பதை வேதம் சொல்கிறது; கட்டளை யிடுகிறது; எசமான் தன் ஏவலாளர்களுக்கு இப்படிச் செய், இப்படிச் செய்யாதே என்று கட்டளையிடுவதுபோல விதிநிஷேதங்களைச் சொல்கிறது. அதைத் தெரிந்து அதன் படி நடப்பது நம் கடமை. இவ்வாறு கட்டளையிடுவதால் வேதத்தைப் பிரபு ஸம்மிதை என்று சொல்வார்கள்.

வேதம் இருக்கிறது; அது சொல்லும் நெறி இருக் கிறது; அந்த நெறியில் சென்று பயன் பெற்றவர்களும் இருக்கிறார்கள். எல்லாருமே வேத நெறிப்படியே ஒழுகு கிறார்கள் என்று சொல்ல இயலாது. உலகில் நல்லவர்களும்

இருக்கிறார்கள்; பொல்லாதவர்களும் இருக்கிறார்கள். நல்ல நெறியில் செல்கிறவர் சிலர்; தீய வழியில் நடப்பவர் பலர்.

இறைவியின் பக்தர்கள் நல்ல நெறியில் நடப்பவர்கள்; வேதம் சொன்ன வழியில் ஒழுகுகிறவர்கள்; அதன்படியே நடக்க வேண்டும் என்ற உள்ளம் உடையவர்கள்; அம்பிகையை வேத நெறிப்படி வழிபடுகிறார்கள். அதனால் அவர்கள் அறம், பொருள், இன்பம் என்பவற்றைப் பெற்று, வீடு அடையும் தகுதியையும் பெறுகிறார்கள். அன்னையின் அருள் அவர்களுக்குக் கிடைக்கிறது.

இந்தக் கருத்தைச் சொல்கிறார் அபிராமிபட்டர்.

விழிக்கே அருள் உண்டு
அபிராமவல்லிக்கு; வேதம் சொன்ன
வழிக்கே வழிபட நெஞ்சு உண்டு
எமக்கு.

தம்மைப் போன்ற அன்பர்களையும் சேர்த்துச் சொல்வதனால், "எமக்கு" என்கிறார்.

இந்தக் கூட்டத்தினர் செல்லும் வழி வேதமார்க்கம். இவர்கள் பெறுவது அன்னையின் அருள். அதனால் இன்ப வாழ்வு அமைகின்றது.

உலகில் இந்தக் கூட்டத்தினரே நிரம்பியிருக்கிறார்கள் என்று சொல்ல முடியுமா? இவர்கள் செல்லும் வழிக்கு மாறான வழியில் செல்வோர் பலர் இருக்கின்றனர். நல்ல வழி இல்லாமற் போனதால்தான் அவர்கள் கெட்ட வழியிலே செல்கிறார்கள் என்று சொல்ல நியாயம் இல்லை. நல்ல வழியாகிய வேத வழி இருக்கிறது. அதில் உள்ளம் வைத்து நடக்கின்ற அன்பர்களும் இருக்கிறார்கள். அவர்கள் அன்னையின் திருவருளுக்கு ஆளாகிறார்கள்.

அந்த வழி இருக்கவும், பலர் அந்த வழியிலே செல்வதில்லை. அவர்கள் இழிகுணமுடையவர்கள்; கயவர்கள்.

இவ்வுலகத்தில் அவர்கள் செய்யும் தீய செயல்களால் பலருக்குத் துன்பம் உண்டாகிறது. அதனுல் அவர்களைப் பலரும் பழிக்கிருர்கள். புகழுக்குரிய செயல்களைச் செய்வது நல்ல இயல்பு. "புகழெனின் உயிரும் கொடுப்பர்" அவர்கள். ஆனால் கயவர்களோ பழி வருமே என்று எண்ணமாட்டார்கள்; தீய செயல்களைச் செய்து பழியைக் கட்டிக் கொள்வார்கள். பழி வந்த பின்பேனும் அதைச் செய்யக் கூடாது என்ற உணர்ச்சி வருகிறதா? மேலும் மேலும் பழி உண்டாகும்படியான இழி செயல்களையே செய்து அவற்றிலே சுழன்று சுழன்று உழன்றுகொண்டிருப்பார்கள்.

அவ்வழி கிடக்கப் பழிக்கே சுழன்று.

மனிதன் தவறு செய்யப் புகுந்தால் அவன் நெஞ்சம் வேண்டாம் என்று தடுக்கும். பிறர் பழிப்பார்களே என்ற அச்சம் உண்டாகும். ஆனால் ஒரு முறை தவறு செய்து விட்டால் பிறகு தடுப்பது அரிதாகிவிடும். திரும்பத் திரும்ப அந்தத் தவற்றையே செய்துகொண்டிருப்பான்; அதிலே விழுந்து சுழலுவான்! கரையேற முயலமாட்டான்.

பழிமட்டுமா? அவன் பாவச் செயல்கள் பல செய்வான். எல்லாப் பாவச் செயல்களும் பழியை உண்டாக்குவதில்லை. எல்லாப் பழிச்செயல்களும் பாவத்தை உண்டாக்குவதில்லை தன் கையில் உள்ள பொருளைக் கொண்டு கோயிலை ஒருவன் கட்டுகிருன். அவனைச் சிலர் பழிக்கக்கூடும். ஆனுல் அவன் செய்வது புண்ணியச் செயலே. நல்லோர் பழித்தால் அது தவருன செயலாகத்தான் இருக்கும். அல்லாதவர்கள் பழித்தால் அது தீய செயலாகத்தான் இருக்குமென்று சொல்ல இயலாது.

ஒருவரும் அறியாமல் தீய செயலை ஒருவன் செய்தால் அவனுக்குப் பழி வராது. பிறர் அறிந்து தவறு செய்கிருன்

என்று சொல்வதுதானே பழி? பிறர் அறியாமல் தீய செயல் செய்வதனால் பழி உண்டாகாவிட்டாலும் நிச்சய மாகப் பாவம் உண்டாகும்.

கயவர்களில் தொடக்க நிலையில் இருப்பவர்கள் பாவத் துக்கு அஞ்சாவிட்டாலும் பழிக்கு அஞ்சுவார்கள். பழிக்கே அஞ்சாதவர்கள் பாவத்திற்குச் சிறிதும் அஞ்சமாட்டார்கள். அவர்கள் கொடிய பாவச் செயல்களைச் செய்வார்கள்.

வெம்பாவங்களே செய்து.

இந்த வாழ்விலே அவர்களைப் பழி சூழும்; பாவம் சூழும். இதன் பயனாக மறுமையிலே அவர்கள் பாழான நரகக் குழியிலே ஆழ்வார்கள்; எல்லாத் துன்பங்களினும் மேலான துன்பங்களை அடைவார்கள்.

இம்மை, மறுமை, வீடு என்று உயிர்கள் வாழும் நிலைகள் மூன்று. இந்த உலக வாழ்வை இம்மை என்பர். இங்கே மிகுதியான புண்ணியச் செயல்களைச் செய்தவர்கள் இந்தப் பிறவிக்குப்பின் சொர்க்கபோக வாழ்வைப் பெறுவார்கள்; பாவச் செயலைச் செய்தவர்கள் நரக வாழ்வைப் பெறு வார்கள். இந்த இருவகையும் மறுமை எனப்படும். என்றும் மாறாத பேரின்ப வாழ்வே வீடு அல்லது முக்தி.

வீடு என்ற சொல்லுக்கு விடுதலை என்று பொருள். முக்தி என்ற வடசொல்லும் அந்தப் பொருளுடையதே. வினைகள், சுகதுக்கங்கள், சரீரங்கள் ஆகியவற்றினின்றும் விடுபடுவதனால் வீடு என்ற பெயர் வந்தது. அது இன்பமே யன்றி வேறில்லாத நிலை; இறைவியோடு ஒன்றுபடும் நிலை.

பழியும் பாவமும் செய்கிறவர்கள் இம்மையிலும் துன்புறுவார்கள்; மறுமையிலும் நரக வாழ்வை அடை வார்கள்; அந்த நரகத்தில் நெடுங்காலம் அழுந்திக் கிடப் பார்கள். மிகவும் கொடிய குற்றத்தைச் செய்தவர்களுக்கு நீண்ட சிறைவாசம் கிடைப்பதுபோல, இந்த வெம்பாவங்

களைச் செய்யும் கயவர்கள் எளிதில் மீண்டு வர முடியாதபடி நரகக்குழியிலே அழுந்திக் கிடப்பார்கள்.

பழிக்கே உழன்று வெம்பாவங்களே
செய்து பாழ் நரகக்
குழிக்கே அழுந்தும் கயவர்.

நல்ல வழியில் நடப்பவர்கள் தம்முடைய வழியில் நடப்பவர்களையே துணையாகக் கொள்ளவேண்டும். மனிதன் சமுதாய விலங்கு என்று சொல்லப்படுகிறான். அவன் எந்தச் சமுதாயத்திலே பழகுகிறானோ அதற்கு ஏற்றபடி அவனுடைய குணங்களும் செயல்களும் அமையும். "சேரிடம் அறிந்து சேர்" என்று ஒளவைப்பாட்டி சொன்னாள். பொல்லாதவர்களோடு சேர்ந்தால் நம்முடைய நன் முயற்சிகள் யாவும் வீணாகிவிடும்.

விளக்கை ஏற்றுவது பெரிதன்று; அந்த விளக்கு அணையாமல் பாதுகாக்க வேண்டும். நல்ல நெறியில் செல்கிறவர்கள், அதற்கு மாறான வழியில் செல்பவரோடு இணங்குவது தீமையை உண்டாக்கும். பொல்லாதவர்களைக் காணாத தூரத்தில் நீங்கிவிட வேண்டும்,

நல்லவர் இணக்கம் குறைவாக இருந்தாலும் குற்றம் இல்லை. எப்படியோ தத்தித் தள்ளாடி முன்னுக்கு வர முயலலாம். பொல்லாதவர்கள் இணக்கம் இருந்தால் நம்மைக் கீழே இழுத்துக் கெடுத்துவிடுவார்கள். அதனால் தான் பெரியவர்கள் சத்சங்கத்தை வற்புறுத்துவார்கள்; அல்லாதார் கூட்டத்தில் சேரக்கூடாது என்று சொல்வார்கள்.

"ஒருமையுடன் நினது திருவடிமலர் நினைக்கின்ற
உத்தமர்தம் உறவு வேண்டும்;
உள்ஒன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்
உறவுகலவாமை வேண்டும்"

என்று வேண்டுவார் இராமலிங்க வள்ளலார்.

ஆகவே, வேத நெறியின்படி நடக்கவேண்டும் என்ற விருப்பமுள்ள மனம் உடையவர்கள் அபிராமவல்லியின் அருளைப் பெறுவார்கள்; தீய நெறியிற் சென்று பழி பாவங்களைச் சுமக்கின்ற கயவருடைய உறவை விரும்பமாட்டார்கள்; முன்னை நிலையில் அத்தகையவர்களோடு பழகும் சந்தர்ப்பம் இருந்தாலும் வேத வழியில் செல்லத் தொடங்கிய பிறகு அவர்கள் பக்கத்திலே எட்டிப் பார்க்க மாட்டார்கள்; "இப்போது அவர்களுக்கும் நமக்கும் ஓர் உறவும் இல்லை" என்ற உறுதிப்பாட்டோடு இருப்பார்கள்.

கயவர் தம்மோடு என்ன
கூட்டு இனியே?

உயர்ந்தவர்கள் கூட்டுறவினால் நல்லகுணங்கள் நிரம்பும். ஒருவரிடம் ஒரு பொருள் இல்லையென்றால் அந்தப் பொருள் உள்ளவரோடு கூட்டுச் சேர்ந்தால் அவர்கள் தம்மிடம் உள்ள பொருளை மற்றவருக்கும் பகிர்ந்து கொடுப்பார்கள். அந்தக் கூட்டினால் அவருக்குப் பயன் உண்டு. நல்லவர்களோடு கூட்டு உண்டானால் அவர்களுடைய நல்லகுணங்கள் நம்மிடம் படியும். கயவர்கள் கூட்டு உண்டானால் நம்மிடம் உள்ள நல்ல குணங்கள் பறிபோய்விடுவதோடு அவர்களுடைய தீய குணங்கள் நம்மிடம் குடியேறிவிடும். ஆகவே, 'அத்தகையவர்களுடைய கூட்டு நமக்கு எதற்கு? அவர்களுக்கும் நமக்கும் என்ன சம்பந்தம்?' என்று கேட்கிறார் அபிராமிபட்டர்.

விழிக்கே அருள்உண்டு அபிராம
வல்லிக்கு; வேதம்சொன்ன
வழிக்கே வழிபட நெஞ்சுஉண்டு
எமக்கு; அவ் வழிகிடக்கப்

பழிக்கே உழன்றுவெம் பாவங்க
　　ளேசெய்து பாழ்நரகக்
குழிக்கே அழுந்தும் கயவர்தம்
　　மோடுஎன்ன கூட்டுஇனியே?

[அபிராமவல்லிக்குத் திருவிழியால் எமக்கு வழங்கும் திருவருள் இருக்கிறது; அவ்வருளை அடையும் பொருட்டு வேதம் சொன்ன நெறியில் அவளை வழிபட எமக்குத் துணையாக நெஞ்சு இருக்கிறது; அந்த நல்ல வழி இருக்கவும், பழிச்செயல்களிலே உழன்று திரிந்து, கொடிய பாவச் செயல்களையே செய்து அதன் பயனுகப் பாழான நரகக் குழியிலே அழுந்த இருக்கும் இழிந்தவர்களோடு இப்போது எமக்கு என்ன உறவு இருக்கிறது?

விழிக்கே-விழியில்; உருபுமயக்கம், வழிக்கே-வழியில். எம்முடைய நெஞ்சம் எமக்கு உறுதுணையாக இருக்கிறது என்றபடி. "மனத்துக்கண் மாசில ஞதல் அனைத்தறன்" என்பார்களாதலால், யாம் செய்வது உள்ளத்தோடு ஒட்டிய வழிபாடு என்று இதனல் புலப்படுத்தினர். பழி-பழியை உண்டாக்கும் செயல்கள்; பாவங்கள்-பாவத்தை உண்டாக்கும் செயல்கள்; இவை இரண்டும் ஆகு பெயர்கள். நரகத்தில் நல்வாழ்வு இல்லாமையால் பாழ் நரகம் என்ருர். தன்பால் விழுந்தவரை எளிதில் மேலெழச் செய்யாததாதலின் நரகக்குழி என்ருர். கயவர்-இழிகுணமும் இழிசெயலும் உடையவர்கள். கூட்டு-தொடர்பு; உறவு. இனி-இப்போது; இனிமேல் என்றும் சொல்லலாம்.]

இது அபிராமி அந்தாதியில் 79-ஆம் பாட்டு.

# என்ன அதிசயம்!

“கூயவர்களோடு எனக்கு என்ன உறவு?” என்று கேட்ட அபிராமிபட்டர், தாம் யாரோடு உறவாடினுர் என்பதை அடுத்தபடி நினைக்கிருர். அவராகத் தேர்ந் தெடுத்து நல்லவர்களோடு கூடினுரா? இல்லை, இல்லை; அம்பிகையே அவருக்கு ஏற்ற சங்கத்தில் அவரைச் சேர்த்து விட்டாளாம். பக்தர்கள் இப்படித்தான் எண்ணுவார்கள். “நான் அடியார்களோடு சேர்ந்தேன்; நான் அம்பிகையை வழிபட்டேன்” என்று சொல்லமாட்டார்கள்.

“ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடா தாரே
அடக்குவித்தால் ஆரொருவர் அடங்கா தாரே
ஓட்டுவித்தால் ஆரொருவர் ஓடா தாரே
உருகுவித்தால் ஆரொருவர் உருகா தாரே
பாட்டுவித்தால் ஆரொருவர் பாடா தாரே
பணிவித்தால் ஆரொருவர் பணியா தாரே
காட்டுவித்தால் ஆரொருவர் காணு தாரே
காண்பார்ஆர் கண்ணுதலாய்க்காட்டாக்காலே”

என்று அருளாளராகிய அப்பர் கூறுவார். ‘எல்லாம் அவள் செயல்’ என்று எண்ணி அகந்தை ஒழிந்து நிற்பவர் இந்த ஆசிரியர். ஆகவே தாம் இறைவியின் அருளைப் பெறுவதற்குக் காரணமாக இருந்த சத்சங்கத்தை நினைக் கிருர். அந்த அடியார் கூட்டுறவை அம்பிகைதான் கூட்டு வித்தாள், அது வியப்புக்கு உரிய செயல் என்று சொல் கிருர்.

மிக மிகத் தாழ்ந்த நிலையில் இருந்த ஒருவர் மிக மிக உயர்ந்த நிலையில் இருப்பவரோடு தோழமை கொள்வது என்பது இயல்பு அன்று. அவர்கள் தம் தம் இயல்புக்கு ஏற்றவர்களோடு கூடுவதும் நெருங்கிப் பழகுவதும் வழக்கம். தாழ்ந்தவர்களுக்குத் தம்மினும் உயர்ந்தவர்களோடு கூடிப் பழகவேண்டும் என்ற எண்ணமே தோன்றாது. கிணற்றுத் தவளைக்கு அந்தக் கிணறே சொர்க்கம் என்ற எண்ணமே இருக்கும். ஒருகால் உயர்ந்தவர்களோடு சேரவேண்டும் என்ற எண்ணம் அருமையாக உண்டானால், அதற்குரிய வழி தெரியாது. தெரிந்து அணுகினாலும் அவரோடு பழக அஞ்சுவார்கள். ஒருகால் சிறிது பழகினால் முன்னை வாசனையால் அது ஒத்து வராது; மறுபடியும் பழைய கூட்டத்தோடே சேர்ந்துவிட வேண்டும் என்ற துடிப்பே உண்டாகும். இவ்வளவையும் கடந்து மேலோர்களோடு கலந்து பழகும் நிலை உண்டாகுமானால் அது அவருடைய சொந்த முயற்சியினால் உண்டானது என்று சொல்ல முடியாது. மனித சக்திக்கு அப்பாற்பட்ட திருவருளாற்றலே அவரை அந்த நிலைக்குக் கொண்டு வந்ததென்றே சொல்ல வேண்டும்.

புலி புல்லைத் தின்றால் வியப்பாக இராதா? ஊனையே விரும்பி உண்ணும் அது புல்லை உண்பது இயற்கைக்கு மாறானது. அப்படியே இழிந்த பண்புடையவர் அடியார்களோடு கூடியிருப்பதும் இயற்கைக்கு மாறானது; வியப்பை உண்டாக்குவது. மற்றவர்கள் அந்த நிலையைக் கண்டு வியப்பது பெரிதன்று. அவரே தம்முடைய முன்னை நிலையையும் பின்னை நிலையையும் ஒப்பிட்டுப் பார்த்து வியப்புறுவார்.

அவ்வண்ணமே வியப்பில் ஆழ்ந்து, அம்பிகையின் திருவருள் வல்லபமே அந்த வியப்புக்குக் காரணம் என்று சொல்கிறார் அபிராமிபட்டர்.

## கூட்டியவா என்னைத் தன் அடியாரில்!

'என்னைத் தன் அடியாரோடு கூட்டியவாறு என்ன ஆச்சரியம்!' என்பது இதன் பொருள். மற்ற இடத்தில் கூட்டியதைவிடத் தன் அடியாரோடு கூட்டினளே, அது தான் அதிசயம். ஏன்? அடியார்களின் பண்புகளை அன்னை நன்கு உணர்வாள். அவர்களுடைய தூய்மையைக் கெடுக்காமல் பாதுகாக்கும் திருவுள்ளம் கொண்டவள். ஆகவே, 'அவர்களுடைய உயர்வை அறிந்தும், என்னுடைய இழி நிலையை அறிந்தும், என்னை அவர்களோடு கூடச்செய்து நன்மை பெற வைத்தாள். இது எத்தனை வியப்பான காரியம்!' என்று எண்ணி வியக்கிறார்.

'நான் கொடிய பாவங்களைச் செய்தவன். அடியவர்களோ பாவமே தெரியாத தூயவர்கள். பாவங்களினின்றும் நீங்கித் தூயவனான பிறகே நான் அவர்களோடு சேரும் தகுதி உடையவனாவேன். அத்தகைய தகுதி எனக்கு இல்லை என்றாலும், அன்னை என்னிடம் பேரருள் வைத்தாள். என் கொடிய வினைகளை நீக்கவில்லை. இந்த வினைகள் இருக்கும்போதே அடியார் கூட்டத்தில் என்னைச் சேர்த்து விட்டாள். அப்படிச் சேர்த்தது ஆச்சரியம்! ஒட்டாத இரண்டு பொருளை ஒட்ட வைத்தது போன்ற ஆச்சரியம் அது. ஆனால் அதைவிடப் பெரிய ஆச்சரியம் இப்போது நிகழ்ந்தது' என்று சொல்ல வருகிறார்.

"என்னை அடியவர்களோடு சேர்த்து வைத்தாள். என்னிடம் இருந்த கொடிய வினைகளை, பாவங்களை ஓடும்படி செய்துவிட்டாள். அது பெரிய ஆச்சரியம் அல்லவா?"

அடியார்கள் கங்கையைப்போலத் தூயவர்கள். அழுக்கு உடைய ஒருவனைக் கங்கையிலே போட்டுவிட்டால் அந்தக்

கங்கை அழுக்காகாது. அவனிடம் உள்ள அழுக்கெல்லாம் போய்விடும். இன்னும் ஓர் உதாரணத்தைப் பார்க்கலாம்.

சாக்கடை இருக்கிறது; அதில் உள்ள நீரின் நிறம், மணம், குணம் எல்லாம் அருவருக்கத்தக்கவை; உடலுக்குத் துன்பம் உண்டாக்குபவை. ஆற்றின் நீரோ நேர்மாறானது. அது தூய்மையே வடிவானது. இரண்டும் எல்லா வகையிலும் மாறுபட்டவை. சாக்கடை நீர் ஆற்றிலே கலந்துவிடுகிறது. அப்போது சாக்கடை நீர் தனியே இராது. ஆற்று நீரோடு கலந்து அதுவும் தீர்த்தமாகிவிடும்.

"ஊர் அங் கணநீர் உரவுநீர் சேர்ந்தக்கால்
பேரும் பிறிதாகித் தீர்த்தமாம்"

என்று நாலடியார் சொல்கிறது. அவ்வாறே இழிந்த சாக்கடையைப்போல இருப்பவன் கங்கையைப் போன்ற அடியாரோடு சேர்ந்தால் அவனும் அடியானாகிவிடுவான்; தூயவனாக மாறிவிடுவான்.

"என்னை அடியார்களோடு சேர்த்துவிட்டு என்னுடைய கொடிய கன்மங்களை ஓட்டிவிட்டாள்; இது எவ்வளவு பெரிய வியப்பு!"

கொடிய வினை ஓட்டியவா!

வியப்பு இதோடு நிற்கவில்லை. அன்னையின் திருவருளைப் பெறுவதற்கு அவளைத் தேடி நாம் போக வேண்டும். அன்னையோ அடியாரைத் தேடி வருகிறாள். 'என்னை அடியாரோடு சேர்த்தாள்; என்னிடமிருந்த கொடிய வினைகளைப் போக்கினாள்; எனக்குத் திருவருள் பாலிக்க என்னிடம் ஓடிவந்தாள். இது மிகப் பெரிய ஆச்சரியம் அல்லவா?'

என்கண் ஓடியவா!

'என்னிடம் வந்தவாறு என்ன வியப்பு!' என்று சொல்லவில்லை; 'என்னிடம் உள்ள பெருங்கருணையால்

ஓடி வந்தாளே; அது எவ்வளவு ஆச்சரியம்!' என்று சொல்கிறார்.

சாக்கடையில் விழுந்த குழந்தையைத் தண்ணீரில் ஆட்டிக் கழுவச்செய்து, உடனே வேகமாகச்சென்று அணைக்கின்ற அன்னையின் செயலைப்போல் இருக்கிறது இது.

வந்து என்ன செய்தாள்? மாபெரும் வியப்பு! 'ஒன்றுக்கும் பற்றாத என்னிடம் விரைந்து வந்து தன்னுடைய உண்மையான சொரூபத்தைக் காட்டினாளே! அது அதிசயத்திலும் அதிசயம்!' என்கிறார்.

தன்னை உள்ள வண்ணம் காட்டியவா!

அடியார்களின் உறவினால் வினைகள் போக, வினைகள் போனதனால் அன்னையின் அருள் வந்து பதிய, அதனால் அவளுடைய திவ்ய தரிசனம் கிடைக்கிறது. இதுவரையில் அன்னையைப் பார்த்த பார்வை வேறு. விக்கிரகமாக, படமாக, உருவமாகப் பார்த்த பார்வை அது. இப்போது அம்பிகையின் அகண்டாகார ஸ்வரூப தரிசனம் கிட்டியது. அதனாலுண்டான வியப்புக்குக் கங்குகரை இல்லை. இப்போது தான் அம்பிகையின் உண்மையான நிலை தெரிகிறது.

"நின்னை உள்ளவண்ணம், பேயேன்
அறியும் அறிவுதந்தாய்; என்ன பேறுபெற்றேன்" (61)

என்று முன்பும் ஒரு முறை அபிராமவல்லியை உள்ள வண்ணம் அறியும் அநுபவம் தமக்குக் கிடைத்ததைச் சொல்லியிருக்கிறார்.

அம்பிகையின் சொரூப தரிசனத்தால் உண்டான ஆனந்த அநுபவம் எல்லா வியப்புக்களிலும் மேலான வியப்பு. அதற்கு மிஞ்சின அதிசயமே இல்லை. அவளுடைய திவ்ய தரிசனத்தை இந்தக் கண்களாலே காணும் பேறு பெற்றார் இந்த அருளாளர். அதனால் கண்கள் களித்தன.

கண்வழியே அம்பிகை உள்ளத்தில் புகுந்தாள். இப்போது உள்ளமும் களிக்கிறது. ஒரே ஆனந்த வெள்ளத்தில் ஆழ்ந்து விடுகிறார்.

### கண்ட கண்ணும் மனமும் களிக்கின்றவா!

இதுவரையில் அவர் வேறு, அம்பிகை வேருக இருந்தனர். அடியார்களோடு உறவாடியபோது அவர்கள் செய்வதைப்போலச் செய்தார். கொடிய வினைகள் நீங்கிய பிறகு தம் உடம்பே கனமற்றுப் போனதுபோல உணர்ந்தார். அம்பிகையைக் கண்டபோது அவள் உருவத்தில் கண்ணையும் மனத்தையும் பறிகொடுத்தார். பிறகு—?

இதுவரைக்கும் செய்வது, அநுபவிப்பது என்பன வற்றை உடையவராக இருந்தார். இப்போது அவர் செயலை இழந்தார். காண்பான், காட்சி, காணப்படும் பொருள் என்ற திரிபுடி போயிற்று. அம்பிகையின் கைப் பாவை ஆகிவிட்டார். அவள் ஆனந்த நடனம் ஆடுகிறாள்; அவரும் ஆடுகிறார். அவராக ஆடவில்லை. அவள் ஆட அதனால் அவர் ஆடுகிறார். அவள் தான் ஆடி அவரையும் ஆட்டுவிக்கிறாள். அவள் செயல் தம் செயல் என்ற வேறு பாடு இல்லாமற் போய்விட்டது. அவள் ஆட்டுவிக்கிறபடி யெல்லாம் ஆனந்த நடனம் ஆடுகிறார்.

### ஆட்டியவா நடம்!

அடியாரோடு அம்பிகை கூட்டுவிக்க, கூடியது ஒரு செயல். அதனால் கொடிய வினை நீங்கி நின்றது மற்றொரு செயல். அம்பிகை அவரை அணுக அவளுக்கு நெருக்கமாக இருப்பது பின்னும் ஒரு செயல். அவள் தன் உண்மை வடிவத்தைக் காட்டக் கண்டது அப்பால் உண்டான செயல். கண்ணும் மனமும் களித்தது அநுபவம். செயலைச் செய்யும் கர்த்தாவாக இருந்து, பின்பு அநுபவத்தை நுகரும் போக்தாவாக இருந்தார். முடிவிலே கர்த்தாவும் அன்றிப்

போக்தாவும் அன்றி அவளோடு ஒன்றி அவள் ஆட்டுவிக்கத் தாம் ஆடும் நிலையை அடைந்து விட்டார்.

அழுக்குப் படிந்த குழந்தையைத் தன் ஏவலாளரிடம் விடுகிருள் தாய்; அவர்களால் குழந்தையின் அழுக்கு நீங்கி விடுகிறது. உடனே அன்னை மகவிடம் வேகமாக வருகிருள். தன் வடிவழகைப் பார்க்கும்படி முன் நிற்கிருள்; அணைக் கிருள். குழந்தை சிரிக்கிறது; களிக்கிறது; பிறகு தூங்கிப் போகிறது. அன்னை தொட்டிலிலிட்டு ஆட்டுகிருள்.

இப்படித்தான் ஆனந்த உறக்கத்தில், செயலற்று அநுபவிக்கிரேம் என்ற உணர்வும் அற்று இருக்கிருர் அபிராமிபட்டர். இப்படிச் செய்த பெருமாட்டி யார்? பொன்மயமான இதழ்களை உடைய ஸஹஸ்ரார கமலத்தில் வீற்றிருக்கும் அருந் தெய்வமாகிய அபிராமவல்லியே இவ்வாறு அதிசயிக்கத்தக்க அருட்செயலைச் செய்கிருள்.

ஆடகத் தாமரை ஆரணங்கே!

அம்பிகை தாமரை மலரில் வீற்றிருத்தலைப் பல இடங் களில் இவ்வாசிரியர் சொல்வதை முன்பும் பார்த்தோம்.

"அம்புயமேல் திருந்திய சுந்தரி" (5)
"உறைகின்ற நின் திருக் கோயில்....கஞ்சமோ" (20)
"அருணம்புயத்தும் என்சித்தாம் புயத்தும்
அமர்ந்திருக்கும்....தையல்" (58)

என்பவற்றைப் பார்க்க.

"அளியார் கமலத்தில் ஆரணங்கே" (82)

என்று பின்னும் சொல்வார்.

கூட்டிய வா என்னைத் தன் அடி
யாரில்! கொடியவினை
ஓட்டிய வா! என்கண் ஓடிய
வா! தன்னை உள்ளவண்ணம்

காட்டிய வா! கண்ட கண்ணும்
மனமும் களிக்கிறனவா!
ஆட்டிய வா நடம்! ஆடகத்
தாமரை ஆரணங்கே.

[பொற்றாமரையில் எழுந்தருளியிருக்கும் அரிய அழகியாகிய தேவி, சிறிதும் தகுதியில்லாத என்னைத் தன் அடியாருள் ஒருவனுகச் சேர்த்தருளியவாறும், அவ்வாறு சேர்த்துப் பின் என்னிடமிருந்து கொடிய கன்மங்களைப் போக்கியவாறும், அருள் புரிய என்னிடம் ஓடிவந்தவாறும், தன் திருக்கோலத்தை உள்ளபடியே காட்டியவாறும், அவளைத் தரிசித்து அறிந்த என் கண்ணும் மனமும் ஆனந்த மேலீட்டால் மகிழ்கின்றவாறும், என்னை ஆனந்த நடனம் ஆட்டுவித்தவாறும் என்ன அதிசயம்!

கூட்டியவா - கூட்டியவாறு என்ன வியப்பு! இப்படியே ஓட்டியவா, ஓடியவா, காட்டியவா, களிக்கின்றவா, ஆட்டியவா என்பவற்றிற்கும் பொருள் செய்யவேண்டும். கொடிய வினை - கொடிய பாவங்கள்; கொடிய செயல்கள் என்றும் கொள்ளலாம். என்கண் - என்னிடத்தில். ஓடியவா - ஓடி வந்தவாறு. ஆட்டியவா நடம் - இவ்வாறெல்லாம் என்னை ஆடும்படி செய்தவாறு என்றும் பொருள் கொள்ளலாம். ஆடகம் - பொன்; ஆடகத்தாமரை - சகசிரார கமலம்; அது ஆறு ஆதாரமும் கடந்து உச்சியில் உள்ளது.

அடியார் கூட்டுறவினுல் வினை அகலும்; வினை அகன்ருல் அம்பிகையின் அருளநுபவம் வாய்க்கும் என்பது கருத்து.

இது அபிராமி அந்தாதியில் 80-ஆவது பாட்டு.

அம்பிகை, சரபோஜி அரசர் பூர்ண மதியைக் காணச் செய்த அற்புதத்தைக் கேட்ட பின்னர்ப் பாடியது இந்தப் பாட்டு என்று சொல்வர். ஆனந்தாதிசயத்தில் பாடப் பெற்றதாகவே இது தோன்றுகிறது.

# அன்னையின் தண்ணளி!

கங்கையில் நீர் வற்ருமல் ஓடுகிறது. அதிலிருந்து பெரிய பெரிய கால்வாய்களை வெட்டியிருக்கிருர்கள். அந்தக் கால்வாய்களிலிருந்து கிளைக் கால்வாய்கள் பல பிரிந்து செல்கின்றன. அவை பாயும் இடங்களிலெல்லாம் வளம் கொழிக்கின்றது. கால்வாய்களில் நீர் ஓடிக்கொண்டிருப் பதனுல் அங்கங்கே உள்ள கிணறுகளில் ஊற்றெடுத்து நீர் நிறைய இருக்கிறது. பெரிய கால்வாய்கள், சிறிய கால் வாய்கள், கிணறுகள் ஆகிய எல்லாவற்றிலும் நீர்வளம் இருப்பதற்குக் கங்கையில் வரும் நீரே காரணம்.

ஒருவன் கிணறு உள்ள இடத்தில் இருக்கிருன். அவனுல் நெடுந்தூரம் செல்ல முடியாது. அந்தக் கிணற்று நீரில் ஆடுகிருன்; அதையே தாகத்துக்குப் பருகுகிருன்; அதைக் கொண்டே சமையல் செய்கிருன். கிணற்றில் நீர் நிறைய இருக்கவேண்டுமென்ருல் கங்கை நீர் வற்ருமல் இருக்க வேண்டும் என்ற உண்மை அவனுக்குத் தெரியும். கங்கை நீரின் பெருமை தெரிந்தாலும் அவனுக்குக் கிணற்று நீர் தான் கிடைக்கிறது. அவனுடைய ஆற்றலுக்குள் அடங் கியது அதுதான். அவன் கங்கைநீரினுல் ஊறும் ஊற்று நீரைத்தான் பருகுகிருன்; அதில்தான் குளிக்கிருன்.

வேறு ஒருவன் சிறிய வாய்க்காலின் கரையில் வாழ் கிருன். அவன் அந்த வாய்க்காலில் நீராடுகிருன்; அந்தத்

தண்ணீரையே பருகுகிறுன். கங்கையிலிருந்து தண்ணீர் வருவதை நிறுத்திஞல் அந்த வாய்க்காலில் நீர் வராது.

பெரிய கால்வாயை அடுத்து ஒருவன் வாழ்கிறுன். அவன் அந்தக் கால்வாய் நீரில் ஆடுகிறுன்; அதையே பருகுகிறுன். அவனுக்குக் கிணற்று நீர் தேவையில்லை; சிறிய வாய்க்கால் நீரும் தேவை இல்லை; அவற்றைத் தேடிப்போக வேண்டிய அவசியம் இல்லை; என்ருலும் கங்கையாற்று நீரைக் கால்வாயில் விடாமல் அடைத்துவிட்டால் அவஞல் நீராட இயலாது.

கங்கைக் கரையிலே ஒருவன் வாழ்கிறுன்; நினைத்தால் அவன் அந்தப் பெரிய ஆற்றிலே நீராடலாம்; நீந்தி விளையாடலாம்; தோணி ஓட்டி உல்லாசமாகப் போகலாம்; அந்த நீரைப் பருகலாம்; அதைக் கொண்டு சமையல் செய்யலாம்.

கிணற்றங்கரையில் வாழ்ந்தவன் கங்கைக்கரைக்கே வந்துவிடுகிறுன். பிறகு அவனுக்குக் கிணற்றை நாட வேண்டிய அவசியம் இல்லை; நூற்றுக்கணக்காக உள்ள சிறிய வாய்க்கால்களை நாடிப் போய் நீராட வேண்டியதில்லை; வெவ்வேறிடங்களில் பிரிந்து செல்லும் பல பெரிய கால்வாய்களை அணுகவும் தேவையில்லை. அவன்தான் கங்கைக்கரைக்கே வந்துவிட்டானே! அவனுக்கு மற்ற நீர் நிலைகளைப்பற்றிய கவலை எதற்கு?

அம்பிகையை வழிபட்டு அவளுடைய திருவருளுக்குப் பாத்திரமானவர்கள் அத்தகையவர்கள். அவர்களுக்கு மற்றத் தெய்வங்களிடம் நாட்டம் செல்லாது. எல்லாத் தெய்வங்களுக்கும் தலைவியாக இருக்கிறவள் அம்பிகை; எல்லாத் தெய்வங்களும் தத்தமக்கு வரையறுக்கப்பட்ட எல்லைக்குள் நின்று செயல்படும்படி செய்கிறவள் அன்னை. அவளுடைய ஆணையிஞல் எல்லாம் நடைபெறுகின்றன.

அம்பிகையின் ஏவல்களைச் செய்யும் பரிவாரங்களாக எல்லாச் சக்திகளும் இருக்கின்றன. பிரமன், திருமால், இந்திரன் முதலியவர்கள் அப்பெருமாட்டியைச் சூழ்ந்து துதிக்கிறார்கள். 'ப்ரஹ்மோபேந்த்ர மஹேந்த்ராதி தேவ ஸம்ஸ்துத வைபவா' (83) என்று லலிதா சகசிர நாமம் சொல்கிறது. 'ஹரிப்ரஹ்மேந்த்ர ஸேவிதா' (291) என்பது மற்றொரு திருநாமம், சிவபெருமானே அன்னையை ஆராதிக்கிறனும்; 'சிவாராத்யா' (406), 'மஹாபைரவ பூஜிதா' (231) என்னும் திருநாமங்களால் இதனை அறியலாம். கமலாக்ஷராகிய திருமால் தனியே வந்து சேவித்துத் தம் விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்கிறார்; 'கமலாக்ஷ நிஷேவிதா' (555) என்ற திருநாமத்தால் இது தெளிவாகும். கோடி திருமகளிர் அவள் திருத்தொண்டைச் செய்கிறார்களாம்; 'கடாக்ஷ கிங்கரீபூத கமலாகோடி ஸேவிதா' (590) என்பதனால் இதனை அறியலாம். திருமகளும் கலைமகளும் அன்னைக்குச் சாமரம் வீசுகின்றனர்; 'ஸசாமர ரமாவாணீ ஸவ்யதக்ஷிண ஸேவிதா' (614) என்னும் திருப்பெயர் அதைத்தானே சொல்கிறது? அறுபத்து நான்கு கோடி யோகினிகள் அவளைப் பணிந்து நிற்கின்றனர். பண்டாசுரனைச் சங்கரித்தபோது உடன் இருந்த சக்திகளின் பெரும்படை அவளைச் சூழ்ந்து நிற்கிறது. அம்ருதாதி மகாசக்திகள் அவளைச் சுற்றி உள்ளனர். கால ராத்ரி முதலிய சக்திகளும், டாமரி முதலியவர்களும், ரம்பை முதலிய தேவ மகளிரும் பிறரும் அவளை வந்தித்துத் துதிக்கிறார்கள். உலகத்தை ஆக்கி அளித்துத் துடைக்கும் சக்திகளும், வெவ்வேறு நலன்களை உண்டாக்கும் அணங்குகளும், ஒவ்வொரு பொருளின் அதிதேவதையாக இருப்பவர்களும் அன்னைக்குத் தொண்டு செய்யும் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள்; தம்மைத் துதிப்பவர்களுக்கு அவர்கள் சில சில நலன்களையும் உண்டாக்குகிறவர்கள்.

இவ்வளவு பேர்களுக்கும் தனித்தலைவியாகிய அம்பிகையை வணங்கி, வாழ்த்தி அருள் பெற்றால் தனித்தனியே ஒவ்வொருவர் தரும் நலன்கள் எல்லாவற்றையும் அன்னையே வழங்குவாள். கங்கையை அடைந்த பிறகு கிணற்றையும் கால்வாய்களையும் தேடிப் போகவேண்டிய அவசியம் இல்லை. எல்லாத் தெய்வசக்திகளையும் தன் பரிவாரமாகப் பெற்ற அம்பிகையின் அருள் பெற்ற பிறகு வேறு யாரை அணுகி வணங்க வேண்டும்?

இதை அபிராமிபட்டர் சொல்கிறார். 'தேவி, எல்லா வகையான அணங்குகளும் நின் பரிவாரங்கள்; ஆகையினால் நான் உன்னை வணங்குவதையன்றி வேறு யாரையும் வணங்க மாட்டேன்; உன்னை வாழ்த்துவதையன்றிப் பிறர் யாரையும் வாழ்த்தமாட்டேன்' என்கிறார்.

அணங்கே, அணங்குகள் நின் பரிவாரங்கள்
ஆகையினால்
வணங்கேன் ஒருவரை; வாழ்த்துகிலேன்.

இன்னது செய்யமாட்டேன் ' என்று இரண்டைச் சொன்னவர் பின்னும் ஒன்றைச் சொல்கிறார்.

நல்ல எண்ணம் உடையவராக இருந்தாலும் பொல்லாதவர்களோடு சேர்ந்தால் அவர்களுடைய சார்பினால் நல்ல பண்புகள் மாறி அவர்களுடைய பொல்லாத குணங்கள் வந்து அடையும். மனிதன் கூடும் கூட்டத்திற்கு ஏற்ப மாறும் இயல்புள்ளவன். இது நல்லது என்று தெரிந்து ஒன்றைச் செய்ய முற்பட்டவர்கள், தம்முடைய அறிவாற்றலால் அதைக் கடைப்பிடித்து நிற்கலாம்; ஆனால் மாறுபட்ட கொள்கையுடையவர்களோடு சேர்ந்தால் கடைப்பிடி நழுவினாலும் நழுவும். விளக்கில் நல்ல திரியைப் போட்டு எண்ணெயும் நிறைய விட்டு ஏற்றி வைத்தால் போதாது; காற்று வீசும் இடத்தில் அதை வைத்தால்

அந்தக் காற்று அதை அணைத்துவிடும். ஆகவே, காற்றினால் அணையாதபடி அதைப் பாதுகாக்க வேண்டும். இல்லையானால் திரி, எண்ணெய் இவை இருந்தும் விளக்கு எரிய இயலாது.

இறைவியின் பெருமையை அறிந்து அவளுடைய திருவடியையே புகலாகக் கருதி உபாசனை செய்யப் புகுகிறோம். அந்த உபாசனை உறுதி பெற வேண்டுமானால் அந்த இயல்பு உள்ளவரோடு பழகவேண்டும். உலகியலிலே ஈடுபட்டவர்கள் நம்மிடம் குலாவ வருவார்கள்; நமக்கு நன்மை செய்பவர்களைப் போலப் பேசுவார்கள். உள் ஒன்று வைத்துப் புறம் ஒன்று பேசும் அவர்களோடு சேரக்கூடாது. சேர்ந்தால் நம் கடைப்பிடி நழுவிவிடும். இதனை அறிந்த ஆசிரியர், 'நெஞ்சில் வஞ்சக எண்ணம் உடையவர்களோடு நான் இணங்க மாட்டேன்' என்கிறார்.

நெஞ்சில் வஞ்சகரோடு இணங்கேன்.

நல்லதை ஈட்டுவது வேண்டுவதுதான்; ஆனால் தீயது வராமல் பாதுகாப்பது அதைவிட இன்றியமையாதது. உடம்பில் வளம் இல்லாமல் இருக்கலாம். ஆனால் நோய் வரக்கூடாது. பொல்லாதவர்களுடைய தொடர்பு பிணியைப் போன்றது. அதனால், தம் கொள்கைக்கு மாறுபட்டவர்களைக் கண்டால் அஞ்சி நடுங்கி ஒதுங்கி விடுவார்கள் நல்லவர்கள். அதனால்தான் இவ்வாசிரியர்,

> ''வெருவிப் பிறிந்தேன்....நரகுக்கு உறவாய
> மனிதரையே'' (3)

என்றும்,

> ''கயவர் தம்மோ டென்ன கூட்டினியே''(79)

என்றும் கூறினார்,

இறைவியின் அடியாரோடு இணங்கியிருப்பதனால் நம்மிடம் உள்ள பக்தி முறுகும். அவர்கள் சங்கத்தால்

நம்முடைய பக்குவம் விரைவாக உயரும். அத்தகையவர்களைக் கண்டால் அவர்களோடு நட்புக்கொள்ளவேண்டும்; பிணங்கக் கூடாது. இதை அபிராமி பட்டர் சொல்ல வருகிறார்.

அன்னையின் திருவருள் பெற்ற அநுபூதிமான்கள் எப்படி இருப்பார்கள்? தம்முடையவை எல்லாவற்றையும் அவளுக்கே அர்ப்பணம் செய்துவிட்டு அமைதியாக இருப்பார்கள்.

''உனக்கே பரமென் றளித்துவிட்டேன்''

என்று இவ்வாசிரியரே சொல்லியிருக்கிறார். எல்லாவற்றையும் அன்னையிடம் அர்ப்பணம் செய்தவர்களுக்குக் கவலை ஏது?

மிகச் சிறிய பருக்கைக் கல்லை ஒரு குளத்தில் போட்டால் அது நீரில் அமிழ்ந்து விடும். ஆனால் பெரிய பாறை ஒன்றைக் கொண்டுவந்து நீரில் மிதக்கும் கட்டையின்மேல் வைத்தால் அந்தப் பாறை நீரில் ஆழாது; சார்பினால் உண்டான பெருமை இது. அப்படி, எல்லாவற்றையும், ''உன்னுடையவை'' என்று அன்னையிடம் சமர்ப்பித்துவிட்டிருப்பவர்கள் கவலைக் கடலில் ஆழமாட்டார்கள். அப்படி இருப்பவர்கள் மிகச் சிலர்.

அத்தகையவர்களை நாடிச் சென்று அவர்களுக்குத் தொண்டு செய்து அவர்களோடு இணங்கி நிற்பவர் அபிராமி பட்டர். அவர்கள் திருவுள்ளக் குறிப்பறிந்து ஒழுகுபவர்; அவர்களோடு சிறிதளவும் கருத்து மாறுபட்டுப் பிணங்க மாட்டார்.

எனது உனது என்று இருப்பார்
சிலர்; யாவரொடும் பிணங்கேன்.

இறைவியின் பெருமையை அறிந்து, அவளே எல்லோருக்கும் தலைவி என்பதையும் உணர்ந்து, யாவரும் அவளு

டைய ஏவலாளர்கள் என்பதையும் தெளிந்து, அவனையே வணங்கி வாழ்த்துவதை யன்றி வேறு யாரையும் வணங்கி வாழ்த்தாதவர் இவர்; வஞ்சகமுடையவரோடு இணங்காத வர்; இறைவியிடம் ஸர்வ ஸமர்ப்பணம் செய்த பெரியவர் களோடு இணங்கி, அவரோடு சிறிதும் மாறுபடாமல், பிணங்காமல் இருப்பவர்.

இவ்வளவு உறுதிப்பாடு எப்படி வந்தது? இவர் கூறுவதைக் கேட்கலாம்.

'என் அறிவின் திறத்தினால் உன் பெருமையை அறிந்து உன்னையன்றி வேறொருவரையும் வணங்காத உறுதியைப் பெறவில்லை. அப்படியே அறிவினால் ஆராய்ந்து இன்னாரோடு சேரக்கூடாது, இன்னாரிடமிருந்து பிரியக்கூடாது என்று எண்ணி அதற்கேற்ப ஒழுகவில்லை. நான் சிறிதும் அறிவு இல்லாதவன். அறிவுடையவர்களே தெளியமாட்டாத உன்னை அறிவு ஒன்றும் இல்லாத அடியேன் எப்படி அறிய முடியும்? தக்கது இன்னது, தகாதது இன்னது என்று பார்க் கும் அறிவுக்கும் எனக்கும் வெகுதூரம். வஞ்சகர் யார், அநுபூதிமான்கள் யார் என்று தேர்ந்து அறியும் அறிவு எனக்கு இல்லை' என்கிறார்.

அறிவு ஒன்று இலேன்.

பின் எப்படி இவ்வாறு செய்ய முடிந்தது? இவர் சொல் கிறார்; 'தாயே, எல்லாம் உன்னுடைய திருவருளால் விளைந்த அற்புதம். இந்த ஏழையிடம் நீ பெரிய கருணை வைத்தாய். சாமானியமான கருணை வைத்தால்கூட நான் உய்ந்திருக்க மாட்டேன். நான் மிகப் பாதாளத்தில் அழுந்தி இருப்பவன் என்பதை நீ உணர்ந்து, உன்னுடைய பெருங் கருணையை, என் தாபங்களெல்லாம் போக்கும் குளிர்ச்சியான தண்ண ளியை, என்னிடம் காட்டினாய். அதனால் நான் உய்ந் தேன். உன்னையன்றிப் பிறரை வணங்காத உறுதி

ஏற்பட்டது. வஞ்சகரோடு இணங்காமல் இருக்கவும் அநுபூதிமான்களோடு பிணங்காமல் இருக்கவும் நீயே என்னை இயக்கினுய். எல்லாம் நின் கருணை' என்கிறுர்.

என்கண் நீ வைத்த பேரளியே!

"அவனருளாலே அவன் தாள் வணங்கி" என்று மணிவாசகர் சொல்வார். அவ்வாறு, அம்பிகையை வணங்குவதற்கு அவள் அருளே துணை நிற்கவேண்டும். அவள் அருள் இருந்தால்தான் அவளிடம் நம்பிக்கை உண்டாகி உறுதிப்படும்; ஒருமை மனத்தோடு அவளையே வணங்கிப் பிறரை வணங்காத திண்மை உண்டாகும்.

"செறிந்தேன் உனது திருவடிக்கே" (3)
"உன்னையன்றிமற் ருேர்தெய்வம் வந்திப்பதே?" (13)
"கொள்ளேன் மனத்தில் நின் கோலம் அல்லாது" (23)
"பணியேன் ஒருவரை நின்பத்ம பாதம்
பணிந்த பின்னே" (24)
"இனி எண்ணுவதற்குச் சமயங்களும் இல்லை" (31)
"துவளேன் இனிஒரு தெய்வம்உண்
டாகமெய்த் தொண்டுசெய்தே" (41)
"வீணே பலிகவர் தெய்வங்கள்
பாற்சென்று மிக்க அன்பு
பூணேன்" (64)

என்று இந்த உறுதிப்பாட்டோடு முன்பு பாடினுர் இவ்வாசிரியர்.

"உன்றன், இதத்தே ஒழுக அடிமைகொண்
டாய்; இனி யான் ஒருவர்
மதத்தே மதிமயங்கேன்" (92)

என்று பின்னும் பாடுவார்.

"எனது உனது என்றிருப்பார்" என்று அன்னையினிடம் பழுத்த அன்புடையவரை இந்தப் பாட்டில் சொன்ன ஆசிரியர்,

"எனக்கு உள்ள எல்லாம்
அன்றே உனது என்று அளித்துவிட்டேன்"

என்று தம் இயல்பைப் பின்பு ஓரிடத்தில் சொல்வார்.

அணங்கே, அணங்குகள் நின்பரி
வாரங்கள் ஆகையினால்
வணங்கேன் ஒருவரை; வாழ்த்துகி
லேன்; நெஞ்சில் வஞ்சகரோடு
இணங்கேன்; எனதுஉனது என்றுஇருப்
பார்சிலர்; யாவரொடும்
பிணங்கேன்; அறிவுஒன்று இலேன்; என்கண்
நீவைத்த பேர்அளியே!

[தேவி, வெவ்வேறு சக்திகளாக உள்ள தெய்வப் பெண்கள் நின்னைச் சூழ்ந்து ஏவல் செய்யும் பரிவாரங்கள் ஆகையினால், உன்னையன்றி வேறு ஒருவரையும் அடியேன் வணங்கமாட்டேன்; வாழ்த்தவும் மாட்டேன்; உன் அன்பர்களாக இராமல் நெஞ்சில் வஞ்சகத்தை உடையவர்களோடு சேரமாட்டேன்; 'எனது எல்லாம் நின்னுடையதே' என்று எல்லாவற்றையும் நினக்கே அர்ப்பணம் செய்துவிட்டு அமைதியாக இருப்பவர் சிலர்; அவர் எல்லாரோடும் மாறுபடாமல் உறவு பூண்டிருப்பேன்; யான் அறிவு சிறிதும் இலேனானாலும் அடியேனிடம் நீ வைத்த பெரிய குளிர்ந்த கருணை இருந்தவாறு என்னே! அதுவே இத்தனைக்கும் காரணம்.

ஒருவரையும் என்பதில் உம்மை தொக்கது, ஒருவரையும் வணங்கேன், ஒருவரையும் வாழ்த்துகிலேன் என்று

கூட்டுக; ஒருவரை என்பது நடுநிலை விளக்காக நின்றது, உடல் பொருள் ஆவி யாவும் சேர்ந்த தொகுதியை எனது என்று ஒருமையாற் சுட்டினார்; தொகுதி ஒருமை.- என்று எண்ணி. இருப்பார்-அமைதியாக இருப்பவர் என்று பொருள் கொள்ளவேண்டும். சிலராகிய அந்த யாவரோடும் பிணங்கேன் என்று கூறினாலும் சேர்ந்திருப்பேன் என்பதே கருத்தாகக் கொள்க. ஒன்று-சிறிதும்; இங்கும் உம்மை தொக்கது. தண்ணளியே இவ்வளவுக்கும் காரணம் என்று பொருள் கொள்ள வேண்டும்.]

அன்னையின் திருவருளே அவளை வணங்கவும், சாது சங்கத்தைப் பெறவும் துணைசெய்யும் என்பது கருத்து.

இது அபிராமி அந்தாதியில் 81-ஆவது பாடல்.

# கரணம் கழன்ற இன்பம்

அம்பிகையின் திருவுருவத்தைத் தரிசித்து மகிழும் அடியவர்கள் அன்னையை உண்முகத்தே தியானித்து இன்புறுவார்கள். அம்பிகையின் திருவுருவத்தை உள்ளே நிறுத்துதல் அவ்வளவு எளிய காரியம் அன்று. நாம் கண்ணில் காணும் திருவுருவத்தைப் பார்த்துப் பார்த்து அந்த வடிவத்தை உள்ளே நிறுத்திக் கொள்ள வேண்டும். படம் பிடிப்பதைப் போலப் புறத்தே பார்ப்பதை உள்ளத்தில் மெல்ல மெல்ல வைத்துப் பழக வேண்டும். "உயிராவணம் இருந்து உற்று நோக்கி, உள்ளக் கிழியில் உருவெழுதி" என்று திருநாவுக்கரசர் கூறுவார்.

ஒரு பொருளைக் கண்முன்னால் பார்க்கிறோம். கண்ணை மூடி அதை அப்படியே மனத்துக்குள் பார்க்க வேண்டுமானால் பல காலம் அப்பியாசம் பண்ண வேண்டும். ஜாக்கிராவஸ்தையில் மனம் புறத்தே செல்லும் தன்மையை உடையது. கண்ணை மூடிக் கொண்டாலும் காது முதலிய இந்திரியங்கள் திறந்திருப்பதனால் அவற்றிலே படும் விஷயங்களில் மனம் தாவும். ஆகையால் மிகவும் பழக்கமான பொருளைக்கூடக் கண்ணை மூடிக்கொண்டால் தெளிவாகக் காண முடியாது.

கனவில் ஒரு பொருளைத் தெளிவாகக் காணுகிறோம். அப்போது நம்முடைய இந்திரியங்கள் வேலை செய்வதில்லை.

மனம்மட்டும் வேலை செய்கிறது. அதுபோல ஜாக்கிராவஸ்தையில் இந்திரியங்கள் தொழிற்படாமல் இருக்கும் நிலை வந்தால் தியானம் கைகூடும். அதை ஜாக்கிரத்தில் ஸ்வப்னம் என்று சொல்வார்கள். நாம் மனத்தில் எந்த உருவத்தை அடிக்கடி தியானித்துப் பழகுகிறோமோ அதில் மனம் லயித்துவிட வேண்டும்.

மனம் எப்போதும் சுழன்றுகொண்டே இருப்பது; ஒரு கணத்தில் பல பொருள்களை நினைப்பது. அம்பிகையின் வடிவத்தை நினைக்கும்போது திடீரென்று ஒரு மலையின்மேல் ஏறி நிற்கும். அங்காவது நிற்கிறதா? உடனே ஏதோ ஒரு தோட்டத்தில் போய்ப் பூப்பறிக்கும் அடுத்த கணத்தில் சினிமாக் கொட்டகையில் உட்கார்ந்துகொள்ளும். அதை ஒருமுகப்படுத்துவதற்கு மிகவும் கடுமையான பழக்கம் வேண்டும்.

ஓடிப்போகும் குழந்தையை அம்மா இழுத்து இழுத்து வந்து சோற்றை ஊட்டுவதுபோல, மனத்தை இழுத்து இழுத்து அம்பிகையின் திருவுருவத் தியானத்தில் ஈடுபடுத்த வேண்டும்.

இதற்கு உபகாரமாக இருப்பவை, அம்பிகையின் திருவுருவ வருணனையைச் சொல்லும் பாடல்கள். பாட்டைச் சொல்லும்போது அதில் சொல்லப்பெறும் அங்கங்களை மனத்தில் ஒவ்வொன்றாக அமைத்துக்கொள்ள வேண்டும். ஏதேனும் மந்திரத்தை ஜபம் செய்வதற்கு முன் அதற்குரிய தியான சுலோகம் ஒன்றைச் சொல்வது வழக்கம். அந்தத் தியான சுலோகம் ஜபத்திற்குரிய தெய்வத்தின் திருவுருவை விளக்கும் வகையில் அமைந்திருக்கும். அந்தச் சுலோகத்தில் உள்ள வடிவத்தை மனத்தில் எழுதிக்கொண்டு ஜபம் செய்ய வேண்டும்.

இந்தத் தியான யோகத்தால், மனம் கண்டபடி திரியாமல் ஒரு வட்டத்துக்குள் வளைய வரும், மனம்

அடங்காமல் இருப்பதை மாற்ற வேண்டுமானால், நெடு நேரம் ஓர் ஒழுங்கான இடத்துக்குள் வளைய வரும்படி பழக்க வேண்டும். அம்பிகையின் திருக்கோயிலுக்குப் போவது, ஆவரணங்களை வலம் வருவது, சந்நிதிக்குள் புகுவது, அம்பிகைக்கு அபிஷேகம் செய்வது, பிறகு அலங்காரம் செய்வது, அருச்சனை செய்வது, தூப தீபங்கள் காட்டுவது, கர்ப்பூர ஆரத்தி காட்டுவது முதலியவற்றை மானசிகமாகச் செய்யப் பழகினால் மனம் நெடு நேரம் அந்தச் சூழ்நிலையில் உலவிவரும். ஒரு குறிப்பிட்ட பொருளிலே ஈடுபடுவதற்குமுன் இவ்வாறு செய்தால் மெல்ல மெல்ல மனம் ஒருமுகப்படும்.

அம்பிகையின் முன் நின்று தீபாராதனை ஆகும்போது, அவள் திருமேனியில் அந்த ஒளி வீசும்போது, மனம் உருக நின்று பழக வேண்டும். கோயிலைச் சுற்றிவந்து அபிஷேக ஆராதனைகளைக் கண்ட பிறகு அம்பிகையின் திருமுன் நின்று அவள் திருவுருவத்தில் மனத்தைப் பதியச் செய்ய வேண்டும். மனம் அந்த நிலையில் ஈடுபட்டால் உடம்பிலே ஒரு கிளு கிளுப்பு ஏற்படும்.

மனத்தில் அம்பிகையின் உருவம் பதிந்துவிட்டால் அவளுடைய திருமேனி சோதி வடிவமாகத் தோன்றும். விளக்கிலே பார்த்துப் பார்த்துப் பழகினால், கண்ணை மூடிய வுடன் இருட்டாகத் தோன்றும் நிலை மாறி அம்பிகையின் புன்முறுவலைத் தரிசிக்கலாம்; அம்பிகையின் திருமேனித் தேஜசைக் காணலாம். அப்போது எங்கும் ஒரே ஒளியாக இருக்கும். ஒளி வெள்ளத்தில் மூழ்கும்போது வேறு எந்த உணர்ச்சியும் இராது. ஓரளவு நம்மை மறக்கும் நிலை உண்டாகும்.

அப்போது உடம்பு மிக மிக இலேசாக இருக்கும். புறத் திலே உள்ள சீதோஷ்ண நிலை நம்மைப் பாதிக்காது. உடம்பு

புளகம் போர்க்கும். கண்ணில் ஆனந்தத்துளிகள் பெருகும். எங்கோ கவலையற்று இன்பமயமான வானத்தில் பறப்பது போன்ற அநுபவம் ஏற்படும். ஒரே ஒளி, ஒரே ஆனந்தம், அமுத அலைகளில் மிதக்கும் உணர்வு. அந்த நிலையை வார்த்தைகளால் சொல்ல முடியாது, பல காலம் தியானம் செய்து பழகினால் அந்த நிலை உண்டாகும். அப்போது குண்டலினி சக்தி எழும்ப, முதுகந்தண்டிலே கிளுகிளுப்பும் குளிர்ச்சியும் பிறகு ஜில்லென்ற அநுபவமும் ஏற்படும்.

இந்த நிலை வளர்ந்தால், இந்த அநுபவம் முறுகினால், அந்தக்கரணங்கள் பூரித்து வெறும் வெளியாக மாறிவிடும். எதுவுமே தட்டுப்படாமல் எல்லாம் ஒளி வெள்ளமாக இருக்கும். அப்போது உண்டாகும் ஆனந்தத்துக்கு எல்லை ஏது?

இந்த அநுபவத்தை அபிராமிபட்டர் சொல்கிறார்.

அம்பிகையைப் பத்மாசனத்தில் வீற்றிருக்கும் தேவியாகத் தியானம் செய்தார். சகசிரார கமலத்தில் வீற்றிருக்கும் ஆரணங்கு அவள். அப்போது இனிய நாதம் கேட்கும். வண்டுகளின் ரீங்காரம் போன்ற ஒலி கேட்கும். வண்டுகள் சூழ்ந்து முரலும் ஆயிர இதழ்த் தாமரையில் அம்பிகை வீற்றிருக்கிறாள் என்று சொல்லத் தோன்றும்.

அளி ஆர் கமலத்தில் ஆரணங்கே!

[அளி-வண்டு.]

இவ்வாறு முதலில் தியானத்தைத் தொடங்கியவர் பிறகு அம்பிகையின் அகண்ட ஸ்வரூபத்தைத் தியானிக்கிறார். அவள் அகில அண்டங்களிலும் பரந்து விரிந்து நிற்பவள். ஒரே சோதி வெள்ளமாக நிரம்பி நிற்பவள். "இறைவி ஒளி வெளி எங்குமே" (தக்க, 166) என்று ஒட்டக்கூத்தர் பாடுகிறார்.

அகிலாண்டமும் நின் ஒளியாக நின்ற
ஒளிர் திருமேனியை உள்ளுதொறும்.

முதலில் தாமரையில் எழுந்தருளும் தேவியாகக் காண லாம். பிறகு மெல்ல மெல்ல அந்த வடிவம் சோதியுருவாகத் தோன்றும். அந்தச் சோதியுருவம் விரிந்து பரந்து எங்கும் அதனையன்றி வேறு ஒன்றும் தோன்றுதவண்ணம் படர்ந்து கப்பிக்கொள்ளும். அகிலாண்டமும் அவள் ஒளியாக நிற்கும் கோலத்தை உண்முகமாகவும் தரிசிக்கலாம். அண்டத்தில் உள்ளதைப் பிண்டத்திலும் காணலாம். எல்லேக்குள் அடங்கித் தாமரையில் வீற்றிருக்கும் திருக்கோலத்தில் மனம் பதித்தால், வர வர அது சோதி வடிவாகப் படர்ந்து, எல்லே காண முடியாத சோதி வெள்ளமாகத் தோன்றும்.

குளத்தை வெட்டுகையில் அதற்குக் கரை அமைக் கிருர்கள். குளத்தில் ஊற்று உண்டாகித் தண்ணீர் வரும். குளத்துக்குள் அடங்கி நிற்கும். சில இடங்களில் அந்த ஊற்று மிக வேகமாக எழுந்து வெள்ளமாகப் பரவிக் குளத் தின் கரையையும் மீறி எல்லாவற்றையும் உடைத்து மறைத்துக்கொண்டு பரவும். குளத்தில் தேங்கியிருந்த நீராக இராமல் எல்லாவற்றையும் கடந்து பெருகிய வெள்ள மாகக் காட்சி அளிக்கும். குளமே தோன்றுதபோது ஊற்றுக்கண் தோன்றுமா?

இத்தகைய அநுபவம் அம்பிகையின் தியான யோகத் தில் சித்திக்கும். அம்பிகையின் அகண்ட ஸ்வரூபமாகிய ஒளிவெள்ளம் உள்ளே படரும்போது ஆனந்த உணர்வு ஏற்படும். அந்தக்கரணங்கள் அந்த வெள்ளத்தைத் தாங்கு வதற்குப் பெரியனவாகப் பூரிக்கும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பவை அந்தக்கரண பேதங்கள். நிறைய உண்டால் வயிறு பூரிப்பதுபோல இந்த ஒளி வெள்ளத்தைக் கண்டு உள்ளம் பூரிக்கும்; அந்தக்கரணங்கள் விம்மும்.

அகிலாண்டமும் நின் ஒளியாக நின்ற
ஒளிர் திருமேனியை உள்ளுதொறும்
களியாகி அந்தக்கரணங்கள் விம்மி.

அந்தக்கரணங்கள் மிக மிக விரியும். மனத்துக்கு மிக விரியும் ஆற்றல் உண்டு. சிறு பனித்துளியில் பனைமரத்தின் வடிவம் தோன்றுவதுபோல், இந்த மனம் சிறியதானாலும் பெரிய பெரிய மலைகளையெல்லாம் தன் உள்ளே அடக்கிவிடும் ஆற்றல் இதற்கு உண்டு. ஒரு கணத்தில் ஆயிரக்கணக்கான மைல்களைத் தாண்டிவிடும்.

அம்பிகையின் ஆனந்தச்சோதி வெள்ளம் பெருகப் பெருக அந்தக்கரணமும் பெருகுகின்றது; பூரிக்கிறது; விம்முகிறது; அதை உண்முகமாகக் கண்டு களிக்கிறது. இனிய கனவிலே உண்டாகும் களிப்பு அப்போது உண்டா கிறது.

அதோடு நிற்கிறதா? அந்த ஆனந்தவெள்ளம், குளத்தில் உண்டான ஊற்றினால் வெள்ளம் பெருகிக் குளத்தை நிரப்பிப் பிறகு அதன் கரைகளையெல்லாம் உடைத்துக் கொண்டு பரவுவதுபோலப் பெருகுகிறது; அந்தக்கரணங்களென்னும் கரையைக் கடந்து செல்கிறது. கரைபுரண்டு பரவுகிறது. இன்ப வெள்ளம். இப்போது ஒரே வெள்ள மயம்; கங்குகரையில்லாத ஒளிமயம்; ஆனந்தமயம். ஒரே வெளியாக, ஆகாசமாக, எல்லை தோன்றாததாக ஓர் அநுபவம் உண்டாகிறது. அந்தக்கரணங்கள் நிரம்பி நின்ற களிப்பு நிலை இல்லை, இப்போது. அந்தக்கரணங்களே மூழ்கிப் போய்விட்டன. கரையே தெரியாத ஒரே பரப்பு, ஒரே வெளியாக இருக்கிறது. காலம், இடம் என்ற எல்லைகளே தெரியாத பரவெளியாக இருக்கிர்து. இந்த அதீத நிலையில் காண்பான், காட்சி, காணப்படும் பொருள் ஆகிய திரிபுடிகளும் மறைகின்றன.

இன்பக்கனவு காணும்போது மனம் இருக்கிறது; அப்போது களிப்பு உண்டாகிறது. ஐந்து நிமிஷத்தில் பல நாள் அநுபவித்த சுகத்தைக் கனவாகக் காணுகிறது. காலமும் இடமும் மனத்துக்குள் விரிகின்றன. மனம் விரிந்து விம்பி அவற்றை ஏற்றுக் கொள்கிறது. இப்போது கனவு நிலை மாறி எல்லாம் மறந்த சுழுத்தி நிலை வந்து விடுகிறது. கனவிலே களிப்பு இருந்தது. சுழுத்தியில் எல்லாம் மறந்து மனமும் ஓய்ந்து இருக்கின்றது. அப்போது உண்டாகும் ஆனந்தத்தை இத்தகையதென்று சொல்ல முடியாது. எழுந்த பிறகு, "நான் சுகமாகத் தூங்கினேன்" என்று சொல்லுகிறோம். கனவில் மனம் இருந்து இன்பத்தை அநுபவிக்கிறது. சுழுத்தியில் மனமும் அடங்கி ஆன்மா ஆனந்தாநுபவத்தைப் பெறுகிறது.

தியான யோகத்தில் ஜாக்கிரத்தில் சொப்பனம்போல அம்பிகையின் வடிவ தரிசனம் கிடைக்கிறது. அப்போது இன்பம் உண்டாகிறது. மனம் விரிந்து அம்பிகையின் அகண்ட வடிவத்தைக் காண்கிறது. இன்பம் மிகுதியாகிறது. அந்த நிலை தீவிரமானால் மனம் இல்லாமற் போகிறது. ஜாக்கிரத்தில் சுஷுப்தி நிலை வருகிறது. அப்போது உண்டாகும் ஆனந்தம் அளவற்றது. கருவி கரணங்கள் கழன்ற நிலை அது. ஒரே பரவெளியில் ஒளியே ஆனந்தமாய் எல்லாவற்றையும் தனக்குள் கரைத்துக் கொள்ளும் நிலை அது. அங்கே ஆத்மானந்தம், பராம்பிகையோடு அத்விதீயமாக ஒன்றும் அநுபவம், பிரம்மானந்த அநுபவம் ஏற்படுகிறது.

அந்தக் கரணங்கள் விம்மிக் கரை புரண்டு
வெளியாய் விடின்.

இத்தகைய நிலையே நிர்விகல்ப சமாதி. முதலில் அம்பிகையின் திருவுருவத்தைத் தியானிக்கப் புகுந்து, பிறகு

அவளுடைய தேஜோமய வடிவம் உள்ளமெல்லாம் நிரம்பி நிற்கக் கண்டு, அப்பால் அந்த ஒளி வடிவிலே கலந்து எல்லாம் மறந்த ஆனந்த அநுபவம் உண்டாகிறது. நிர்விகல்ப சமாதி என்பது இதுதான்.

இத்தகைய இன்பம், மூச்சையடக்கி யோகம் செய்யாமல், இந்திரிய நிக்கிரகம் செய்து வருந்தாமல், தியானத்தின் மூலமாகக் கிடைக்கிறது. அம்பிகை இந்த வழியைக் காட்டி அநுக்கிரகம் புரிகிறாள். இத்தகைய பேரானந்தப் பிராப்திக்கு உபாயம் அவள் திருவுருவத் தியானம் என்பதை அவளே காட்டிக் கொடுக்கிறாள்.

மிகவும் அல்லற்பட்டுப் பல காலம் பயின்று பெற வேண்டிய இன்பத்தை, எளிய முறையில் அடைய அம்பிகை வழி காட்டினாளே என்பதை நினைத்து அபிராமிபட்டர் வியக்கிறார். அம்பிகையின் கருணையை நினைந்து உருகுகிறார். 'தாயே, நீ எனக்குக் காட்டிக்கொடுத்த இந்த உபாயத்தை நான் எவ்வாறு மறக்க முடியும்?' என்கிறார்.

எங்ஙனே மறப்பேன் நின் விரகினையே!

தியானத்தின் மூன்று வேறு நிலைகளை இந்தப் பாட்டில் அபிராமிபட்டர் சொல்கிறார். முதலில் சொரூபத் தியானமும், பிறகு அகண்டாகார விருத்தியும், அப்பால் நிர்விகல்ப சமாதியும் ஆகிய மூன்றையும் அம்பிகையின் திருவருளால் பெற்றவர், அந்த மூன்று நிலையையும் இப்போது நினைந்து நினைந்து உருகுகிறார். அம்பிகையைத் தாமரையில் வீற்றிருக்கும் தேவியாகத் தியானிக்கப் புகுந்து, உள்ளம் முழுவதும் நிரம்பிய தேஜோமய விக்கிரகமாகக் கண்டு, கருவி கரணங்கள் சுழன்ற அநுபவத்திலே கரைந்து ஒன்றும் இன்பத்தை அடைந்தார்.

அளியார் கமலத்தில் ஆரணங்
கே,அகி லாண்டமும்நின்
ஒளியாக நின்ற ஒளிர்திரு
மேனியை உள்ளுதொறும்
களியாகி, அந்தக் கரணங்கள்
விம்மிக் கரைபுரண்டு
வெளியாய் விடின்எங்ஙனேமறப்
பேன்நின் விரகினையே!

[வண்டுகள் மொய்க்கும் தாமரை மலரில் எழுந்தருளிய தேவி, சகல அண்டங்களும் நின் ஒளியாகப் பரவி நிற்கக் காரணமான பிரகாசிக்கும் அழகிய நின்றன் திருமேனியைத் தியானிக்குந்தோறும், என் அந்தக் கரணங்கள் இன்பம் உடையனவாகிப் பூரித்து, பிறகு காலதேச எல்லைகளெல்லாம் கடந்து திரிபுடியற்ற பரவெளியாகி விடுமானால், நீ அருள்செய்த இந்த அதிசய உபாயத்தை எவ்வாறு அடியேன் மறப்பேன்!

அளி-வண்டு. ஆரணங்கு-பொறிகளுக்கு அரிய தேவி. உள்ளுதொறும்-தியானிக்கும்பொழுதெல்லாம். வெளியாய் விடின்-எல்லை கடந்த பரவெளியாகிவிடுமானால். இதையே பாழென்றும் சூன்யமென்றும் சொல்லர்; "முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாய்" என்பதும் இது. விரகு-உபாயம்.]

"வெளிநின்ற நின் திருமேனியைப் பார்த்தென் விழியும் நெஞ்சும், களிநின்ற வெள்ளம் கரை கண்டதில்லை" (19) என்று முன்பும் சொல்லியிருக்கிறார். வெளியாதல்-அதீத நிலையை அடைதல்.

இத்தகைய அநுபவத்தைக் கந்தர் அலங்காரத்தில் அருணகிரிநாதர் பின் வருமாறு சொல்கிறார்:

"பத்தித் திருமுகம் ஆறுடன் பன்னிரு
தோள்களுமாய்த்
தித்தித் திருக்கும் அமுதுகண் டேன், செயல்
மாண்டடங்கப்
புத்திக் கமலத் துருகிப் பெருகிப்
புவனம்எற்றித்
தத்திக் கரைபுர ளும்பர மானந்த
சாகரத்தே."

அம்பிகையின் தியானம் முறுகினல் அந்தக்கரணத்தில் இன்பம் உண்டாகும்; அது பின்னும் முறுகினல் கருவி கரணம் கழன்ற நிலையில் சிவானந்த அனுபவம் உண்டாகும் என்பது இதன் கருத்து.

அபிராமி அந்தாதியில் 82-ஆவது பாடல் இது.

# அடியார் பெறும் பதவி

அம்பிகையின் திருவருளால் தமக்கு உண்டான ஆனந்த அநுபவத்தைச் சொன்னார் அபிராமிபட்டர். கருவி கரணங்கள் கழன்ற நிலையில், எல்லாம் மறந்த நிலையில், பெறும் இன்பம் அது. அதை வழங்கும் அம்பிகை தன்னை வழிபடுகிறவர்களுக்கு இந்த உலகிலும் இன்பத்தைத் தருவாள்; பரலோகத்திலும் நல்ல பதவியைத் தருவாள்.

உலகத்தில் பல வகையான பக்குவமுடைய மக்கள் இருக்கிறார்கள். எல்லோரும் ஒரே நிலையில் இருந்து அம்பிகையை வழிபடுவதில்லை. அன்னையிடம் குழந்தைகள் யாவரும் ஒரே மாதிரி பொருளை வேண்டுவதில்லை. சின்னஞ் சிறு குழந்தைகள் உணவுப்பொருளையே கேட்கும்; பிறகு விளையாட்டுப் பண்டங்களைக் கேட்கும்; பிறகு ஆடை அணி களைக் கேட்கும். வயசு அதிகமாக ஆகஅதிக நாள் நிலைக்கும் பொருள்களையும் நுட்பமான பொருள்களையும் மைந்தர்கள் கேட்பார்கள். செல்வம் படைத்த அன்னை அவரவர்கள் விருப்பத்துக்கும் தகுதிக்கும் ஏற்றபடி உதவி புரிவாள்.

சிறு குழந்தைக்குப் பால் ஊட்டுவாள். சற்றே பெரிய குழந்தைக்குச் சோறு ஊட்டுவாள். வளர்ந்த குழந்தைக்குச் சாதம் பரிமாறுவாள். ஒரு மகனுக்கு ஆடை வழங்குவாள். தக்க வயதுள்ளவனுக்குக் கல்வி கற்பிக்க வகை செய்வாள். சிலருக்குப் பொருளைத் தருவாள்.

பராம்பிகையாகிய அபிராமியும் தன்னுடைய பக்தர்களின் பக்குவத்துக்கு ஏற்றபடி அருள் பாலிப்பாள். இந்த உலகில் அறமும், பொருளும், இன்பமும் நிரம்பும்படி அருளுவாள். மறுமையில் இந்திர பதவி முதலியவற்றை வழங்குவாள். எல்லாவற்றுக்கும் மேலாக முக்தியை அளிப்பாள். இம்மை, மறுமை, வீடு என்ற மூன்று வகையான இன்பங்களையும் வழங்குகிறவள் அவள்.

மறுமையில் தேவராக வாழ்தல் மிக்க இன்பம் தருவது. புண்ணியம் மிகுதியாகச் செய்தவர்கள் தேவராக இருந்து இன்புறுவார்கள். நூறு யாகம் செய்தவர் தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரனுடைய பதவியைப் பெற்று வாழ்வர். நூறு யாகம் செய்வது எளிய காரியம் அன்று. அம்பிகையின் அன்பர்கள் எளிதில் இந்திர பதவியைப் பெற்றுவிடலாம். அம்பிகையை வழிபடுவதே பல வேள்விகள் செய்வதற்குச் சமானம். இதை அபிராமிபட்டர் சொல்ல வருகிறார்; 'அபிராமி அன்னையைப் பூஜிப்பவர்கள் இந்திரனாக வீற்றிருக்கும் பதவியைப் பெறுவார்கள்' என்கிறார்.

பக்தி வகைகளில் அருச்சனை ஒன்று. தேவியை மலர் தூவி வழிபடுவது அது. "அருச்சனை வயலுள் அன்புவித்திட்டுத், தொண்ட உழவர் ஆரத் தந்த, அண்டத் தரும் பெறல் மேகன்" என்று திருவாசகம் கூறும். அம்பிகைக்கு ஆயிர நாமங்கள் உள்ளன. அவற்றைச் சொல்லி அன்னையின் திருவடிகளில் அருச்சனை செய்வது மரபு.

இறைவியினுடைய திருவடியில் மலரை இடும்போது மூன்று கரணங்களும் ஈடுபட வேண்டும். கை மலரை இடும்; வாய் அவள் திருநாமத்தைச் சொல்லும்; மனம் அந்தத் திருவடியிலே ஈடுபடும். ஒரு பொருளை அடையாளம் வைத்துப் பார்ப்பதுபோல மலரால் திருவடியை அடையாளமிட்டுக் கண்ணால் கண்டும், கருத்தால் தியானித்

தும் வழிபடுவது அன்பர்களின் இயல்பு. மலரை இடும் போது மனம் என்னும் மலரையும் திருவடியில் இட வேண்டும்.

"தகட்டிற் சிறந்த கடம்பையும் நெஞ்சையும்
தாளிணைக்கே
புகட்டி"

என்று கந்தர் அலங்காரம் சொல்கிறது.

மனம் எளிதில் ஒன்றில் ஈடுபடாது. அதனால், நெடு நேரம் விடாப்பிடியாக அவள் திருநாமத்தைப் பலகாலும் சொல்லி அவள் மலரடியில் மலரை இட்டால், மெல்ல மெல்ல மனமும் அதில் படியும். புறத்தில் செய்யும் எல்லா வழிபாடுகளும் அகத்தே செய்வதற்கும் மனத்தை நிறுத்துவதற்கும் உரிய வழிகள். பிறர் பூஜை செய்வதைத் தரிசிக்கும் சரியா மார்க்கமும், நாமே பூஜை செய்யும் கிரியா மார்க்கமும், உள்ளத்திலே தியானம் செய்து ஒன்றுவதாகிய யோகத்திற்குச் செல்ல மேற்கொள்ளும் படிகள். நாமே பூஜை செய்வது என்பது கிரியை என்னும் படி. அதற்கு மேற்படிக்குப் போக வேண்டுமானல் பூஜை செய்யும் போதே மனத்தை ஒருமுகப்படுத்திப் பழக வேண்டும்; மலரோடு மனத்தையும் வைத்துப் பழக வேண்டும்.

ஒருமுறை மனத்தை வைத்தால் அது அங்கே நில்லாது; திரும்பவும் எங்கோ ஓடும். மீண்டும் மீண்டும் நாமத்தைச் சொல்லி மலரை இட்டு மனத்தை அங்கே வைக்க வேண்டும். ஆயிரம் என்பது வெறும் எண்ணிக்கைக்கு மாத்திரம் அமைந்ததன்று; பல காலும் இந்த மனத்தைப் பழக்குவதற்காக வைத்த தந்திரம்.

மணமுள்ள மலர்களை அம்பிகையின் திருவடிக்கு அழகும் மணமும் உண்டாகும்படி இடுகிறோம் என்று எண்ணக்கூடாது. அன்னையின் திருவடியே கமலமலர்

போன்றதுதானே? அதன் அழகும் மணமும் வேறு எந்த மலருக்கும் இருப்பதில்லையே! அது பாத விரைக்கமலம் திருவடியாகிய மணம் பொருந்திய தாமரை. அந்த மலரில் நாம் மலரை இடுவது அதனை அழகு செய்வதற்கு அன்று; நம் மனம் அழகும் நல்ல மணமும் பெறுவதற்காகவே அருச்சனை செய்ய வேண்டும். குருடனுக்குத் தடியைக் கொடுத்து நடக்கச் செய்வதுபோல நம்முடைய கண்ணையும் கருத்தையும் திருவடியிலே ஈடுபடுத்துவதற்கு மலரை இட்டு அருச்சனை செய்யவேண்டும்.

அன்பர்கள் மிக்க அன்போடு அன்னைக்கு அருச்சனை செய்வார்கள். பல வகையான மணமும் நிறமும் உள்ள புதிய மலர்களைக் கொய்துவந்து பூஜை செய்வார்கள். "நகமெலாம் தேயக் கையால் நாண்மலர் கொய்து" என்று அப்பர் சொல்வார். "பூநாளும் தலைசுமப்ப" என்று ஞானசம்பந்தர் பாடுவார். அன்பர்களுக்கு இறைவனைக் கூடை கூடையாக மலரிட்டுப் பூஜிப்பதில் அவ்வளவு ஆசை.

கோவிலில் ஆறு காலம் பூஜை செய்கிறார்கள். பகலும் இரவும் பூஜை நடைபெறுகிறது. அன்பர்களும் இரவும் பகலும் அன்னையை ஆர்வத்துடன் பூஜித்து வழிபடுகிறார்கள்.

"எழுதரு மறைகள் தேரா
இறைவனை எல்லிற் கங்குற்
பொழுதறு காலத்து என்றும்
பூசனை விடாது செய்து"

என்று இரவும் பகலும் பூஜை செய்வதைத் திருவிளையாடற் புராணத்தில் பரஞ்சோதி முனிவர் சொல்கிறார்.

அபிராமிபட்டர் அத்தகைய பக்தர்களை நினைக்கிறார்; 'தாயே, உன்னுடைய திருவடியாகிய மணம் பொருந்திய தாமரை மலரில் பலவகை மணமும் வண்ணமும் விரவிய

புதிய மலர்களை அருச்சித்து இரவிலும் பகலிலும் வழிபடும் வன்மையுடைய பக்தர்கள்' என்று அவர்களைச் சொல்கிருர். இப்படி இரவும் பகலும் செய்வதில் சலிப்பில்லாமல் இருக்க வேண்டுமானல் மன வலிமை இருக்கவேண்டும் அல்லவா?

விரவும் புதுமலர் இட்டு நின்
பாத விரைக்கமலம்
இரவும் பகலும் இறைஞ்ச வல்லார்.

அவர்கள் என்ன பேறு பெறுவார்கள்? இந்த உலகத்தில் எத்தகைய நிலையில் அவர்கள் இருந்தாலும் இந்த வாழ்வை நீத்தபிறகு அவர்கள் மிகச் சிறந்த பதவியையே அடைந்து இன்புறுவார்கள்; இந்திர பதவியையே அடைவார்கள்.

தேவராசனாகிய இந்திரன் தன் சிங்காதனத்தில் வீற்றிருக்கிருன், முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும் அரசன் அவன். தேவர்கள் எல்லாம் வந்து அவனைப் புகழ் கிருர்கள். வருணன், வாயு, அக்கினி முதலிய தேவர்களை நாம் புகழ்ந்து பிரார்த்திக்கிரும். அத்தகைய பெரிய தேவர்கள் யாவரும் இந்திரனைப் புகழ்கிருர்கள்; அவன் ஏவலின் படி நடக்கிருர்கள்; என்ருல், அவன் பதவி எவ்வளவு உயர்ந்தது!

இமையோர் எவரும் பரவும் பதமும்.

அவனுடைய பதவிக்கு எத்தனை விதமான அடையாளங்கள்! குதிரையின் மேலும் வேறு வாகனங்களின் மேலும் தேவர்கள் வருகிருர்கள். எல்லா வாகனங்களிலும் பெரிது யானை. அது உயர்ந்தது; சிறப்புடையது. உலகிலுள்ள யானைக்கே பெருமை உண்டு. யானையை வைத்திருப்பவனைப் பெரிய செல்வன் என்பார்கள்; 'கஜாந்த ஐச்வர்யம்' என்பார்கள். உடம்பு முழுவதும் பளபள வென்று வெண்ணிறம் வாய்ந்த யானை மிக அருமையானது. அயிராவதம் என்பது அதன் பெயர். அதற்கு நான்கு

தந்தங்கள் இருக்கும். அது நடந்து வந்தால் கைலாச பர்வதமே கால் பெற்று நடப்பதுபோல இருக்கும்.

"வெள்ளிமலை எனவே, கால்வாங்கி நிற்கும் களிற்ருன்" என்று அருணகிரிநாதர் கந்தர் அலங்காரத்தில் பாடுவார். அந்த அயிராவதம் இந்திரனுக்கு வாகனம்,

ஆறுகளில் சிறந்தது கங்கை. ஆற்றின் பெருமை அதன் அகல நீளத்தால் உண்டாவதில்லை; அதனுடைய நீரின் சிறப்பால் உண்டாகும். உலகிலுள்ள எந்த நீரும் ஒரு பாத்திரத்தில் எடுத்து வைத்தால் சில நாட்களில் நாற்ற மெடுத்துவிடும். புழுத்துவிடும். ஆனுல் கங்கை நீர் அப்படி ஆவதில்லை. அது புனிதமுடையது. அதனுல்தான் பாரதியார் அதை, "இன்னறு நீர்க்கங்கை யாறு" என்ருர்.

வானுலகத்தில் ஒரு கங்கை இருக்கிறது. அதிலிருந்து வந்ததுதான் இந்தக் கங்கை, பூவுலகக் கங்கைக்கே இத்தனை சிறப்பானுல் வானுலகக் கங்கைக்கு எவ்வளவு மதிப்பு இருக்க வேண்டும்! தேவமகளிர் நீராடும் புனிதம் உடையது அது. அந்த ஆறு இந்திரனுக்குச் சொந்த மானது.

இந்திரனுடைய வலிமை மிகப் பெரிது. எல்லோரையும் விடத் தேவர்கள் வலிமை உடையவர்கள். உலகிலுள்ள மக்களுக்கு உடல் வலிமையையும், உள்ள வலிமையையும் தருகிறவர்கள் தேவர்கள். அவர்களுடைய தலைவனுகிய இந்திரனுக்கு அவர்கள் எல்லோரையும்விட மிகுதியான வலிமை உண்டு என்று சொல்ல வேண்டியதில்லை.

தேவர்களில் ஒவ்வொருவருக்கும் ஓர் ஆயுதம் உண்டு. இந்திரனுடைய ஆயுதம் வஜ்ரம். வஜ்ரத்தினுல் எல்லா வகையான உலோகங்களையும் அறுத்துவிடலாம். இரும்பை யும் அறுக்கும் ஆற்றலுடையது அது. வஜ்ரத்தால்

ஆயுதம் என்றால் அது வேறு ஆயுதங்களையெல்லாம் அறுத்து அழிக்கும் ஆற்றலுடையதாக இருக்குமல்லவா? அந்த வஜ்ராயுதத்தை உடையவன் இந்திரன்.

அவன் கற்பக விருட்சத்தை உடையவன். கற்பக மரங்கள் ஐந்து என்று சொல்வார்கள். எது வேண்டு மானாலும் தருவது கற்பகம். அப்படி ஒன்று கிடைத்தால் அதைப் பெற்றவர்களுக்கு எந்தக் குறையும் இருக்க நியாயமில்லையே! எல்லாப் பண்டங்களையும் சிரமப்பட்டு ஈட்டிப் பாதுகாத்து வைப்பது எளிதன்று. இந்திரனுக்கு அந்தத் தொல்லை வேண்டாம். எந்த விதமான பொருளையும் எந்தச் சமயத்தில் கேட்டாலும் உதவும் கற்பகம் இருக்கும் போது, பண்டங்களைச் சேமிக்கும் கவலை அவனுக்கு ஏது? இதைவிடப் பெரிய செல்வ நிலை வேறு உண்டா?

அயிராவதமாகிய வாகனமும், ஆகாய கங்கையும், வலிமையும், வஜ்ராயுதமும், கற்பக மரங்கள் அடர்ந்த சோலையும் உடையது இந்திர பதவி. அம்பிகையை மலரிட்டு வழிபடுகிறவர்கள் அந்தப் பதவியைப் பெறுவார்கள்.

அயிராவதமும் பகீரதியும்
உரவும் குலிசமும் கற்பகக் காடும் உடையவரே.

'இந்திரராக வாழ்வார்' என்று சொன்னால் இந்திரனைப் பற்றித் தெரியாதவர்களுக்கு அந்தப் பதவியின் பெருமை தெரியாது. அதனால் அதன் சிறப்பைச் சொல்கிறார். முப்பத்து முக்கோடி தேவர்களும் அவனிடம் வந்து புகழ்ந்து வழிபடுகிறார்கள். எங்கேனும் புறப்பட வேண்டு மானால் நான்கு கொம்புகளையுடைய வெள்ளை யானை வந்து நிற்கிறது. அவன் நீராட வேண்டுமானால் வானுலகக் கங்கை யின் நீர் இருக்கிறது. அவன் எவ்வளவு போர்களில் பெரிய பகைவர்களை வென்றிருக்கிறான்! வஜ்ராயுதத்தை அவன் ஏந்தியிருக்கிறான். எந்தச் சமயத்தில் எதைக் கேட்டாலும்

உடனே கற்பகம் தருகிறது. ஒரு கற்பகமா? ஐந்து மரங்கள் சோலையாக அடர்ந்து வளர்ந்து நிற்கின்றன. 'ஒரே சமயத்தில் பல பொருள்களை அவன் பெறுகிறான்' என்று விரித்துக் கற்பனை செய்யும்படி பாடுகிறார் அபிராமி பட்டர்.

விரவும் புதுமலர் இட்டுநின் பாத விரைக்கமலம்
இரவும் பகலும் இறைஞ்சவல் லார்இமை யோர்எவரும்
பரவும் பதமும், அயிரா வதமும், பகீர தியும்,
உரவும், குலிசமும், கற்பகக் காவும் உடையவரே.

[தாயே, பலவகை வண்ணமும் வடிவும் மணமுமுடைய புதிய மலர்களை அருச்சனை செய்து நின்னுடைய திருவடியாகிய மணத்தையுடைய தாமரைகளை இரவும் பகலும் வணங்கும் வன்மையையுடைய அன்பர்கள், இப்பிறவிக்குப் பின், தேவர்கள் யாவரும் புகழும் பதவியையும், அயிராவதமான வாகனத்தையும், ஆகாய கங்கையையும், வலிமையையும், வஜ்ராயுதத்தையும், கற்பகச் சோலையையும் உடைய இந்திரராக ஆவார்கள்.

விரவும்-பல வகையாக உள்ள. விரை-நறுமணம். இறைஞ்ச-வணங்க. பதம்-பதவி. பகீரதி-கங்கை. உரவு-வலிமை. குலிசம்-வஜ்ராயுதம். கா-சோலை.]

அன்னையின் அன்பர்கள் இந்திர பதவி பெறுவார்கள் என்று முன்னும் 74, 75-ஆம் பாடல்களில் சொல்லியிருக்கிறார்.

இது அபிராமி அந்தாதியில் 83-ஆவது பாடல்.

# பிறப்பு அறுப்பவள்

பக்தர்களுக்குத் தம்முடைய உபாசனா மூர்த்தி களிடம் உள்ள உறுதியான நம்பிக்கைக்கு ஈடும் இல்லை; எடுப்பும் இல்லை. வானம் இடிந்து விழுந்தாலும் அசையாத உறுதி உடையவர்கள் அவர்கள். அப்பர் சுவாமிகளும் பிரக லாதனும் இந்த உறுதியை உடையவர்களுக்குச் சிறந்த எடுத்துக் காட்டாக உள்ளவர்கள்.

உண்மையான அன்பர்கள் எதற்கும் அஞ்சமாட் டார்கள். இந்த உலகில் வாழும்போது உண்டாகும் துன்பங்களுக்கும், மறுமை வாழ்வில் வரும் என்று கூறும் இன்னல்களுக்கும் அவர்கள் அஞ்சாதவர்கள். "அஞ்சுவது யாதொன்றும் இல்லை, அஞ்ச வருவதும் இல்லை" என்று அப்பர் சுவாமிகள் முழங்குகிறார்.

பிறப்பு, இறப்பு என்னும் இரண்டுமே எல்லாவற் றுக்கும் மேலான துன்பங்கள். இந்த இரண்டையும் ஒன்றாகவே சொல்லிவிடலாம். இந்த இரண்டும் ஒன்றோடு ஒன்று தொடர்புடையவை. ஒன்று இல்லாவிட்டால் மற்றொன்று இல்லை. பிறப்பு இருந்தால் நிச்சயமாக இறப்பு உண்டு. "தோற்றம் உண்டேல் மரணம் உண்டு" என்பது சுந்தரர் திருவாக்கு. உடம்பினாலும் உள்ளத்தாலும் படு கின்ற துன்பங்கள் அத்தனையும் பிறவி எடுத்ததனால் உண்டானவை. பிறவி இல்லாமல் இருந்தால் எந்தத் துன்பமும் இல்லை.

"பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம்
பிறவா ருறுவது பெரும்பே ரின்பம்"

என்று மணிமேகலை கூறுகிறது. அதனால்தான் திருவள்ளுவர், "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை" என்றார். இறைவனை வழிபட்டு அன்பு செய்து நிற்பதன் முடிந்த பயனே பிறவியை ஒழிப்பதுதான்.

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர், நீந்தார்
இறைவன் அடிசேரா தார்"

என்று திருக்குறள் கூறுகிறது.

அம்பிகையைச் சரணம் என்று புகுந்தவர்கள் இந்திர பதவியைப் பெறுவார்கள் என்று முன்பு சொன்னேர். அந்தப் பதவியும் ஒரு காலத்தில் அழிந்துவிடும். ஆகையால் மேற் கொண்டு பிறவாத நிலையையும் அடைவார்கள். அந்த நிலைதான் முத்தி.

இந்த உலகில் வாழும்பொழுதே இறைவியின் திரு வருளுக்குப் பாத்திரமானவர்கள் இனிப் பிறவியை அடைய மாட்டார்கள். 'நமக்கு இனிப் பிறவி இல்லை' என்ற உறுதி யான உணர்வு அவர்களுக்கு உண்டாகும்.

"இனிப் பிறவாத தன்மை வந்து எய்தினேன்"

என்று சுந்தரரும்,

"யானேதும் பிறப்பஞ்சேன்"

என்று மணிவாசகரும் கூறுவதை இங்கே நினைத்துப் பார்க்க வேண்டும். முன்கூட்டியே ஆயுட் பாதுகாப்புக்குரிய பணத்தைச் செலுத்தியவர்கள் உரிய காலத்தில் தமக்குப் பெருந்தொகை கிடைக்கும் என்ற உறுதிப்பாட்டோடு இருப்பதைப் போலப் பக்தர்கள் இருப்பார்கள்.

அபிராமிபட்டர் அம்பிகையின் அருளை முற்றப் பெற் றவர்; 'இனி நமக்குப் பிறவி இல்லை' என்ற உறுதி படைத்த

உள்ளம் உடையவர். "பிறப்பறுக்க முன்னே தவங்கள் முயன்று கொண்டேன்" (25) என்றும், "உடைத்தனை வஞ்சப் பிறவியை" (27) என்றும், "ஈன்றெடுப்பாள் ஒரு தாயும் இல்லை" (31) என்றும் முன்பு கூறியதைப் பார்த்தோம். 'இனிமேல் எனக்குப் பிறவி இல்லை. உங்களுக்கும் பிறவி இல்லாமற் போகும் வழியைச் சொல்கிறேன்; அன்னையை வழிபட்டுத் தரிசனம் செய்யுங்கள்' என்று இப்போது யாவருக்கும் உபதேசம் செய்யப் புகுகிறார். 'அம்பிகையைப் புறத்தே தரிசித்து உண்முகத்தும் கண்டு அமைதி பெற்று இருங்கள். இனி அவள் உங்களைப் படைக்கமாட்டாள்' என்று வழி சொல்லித் தருகிறார். அம்பிகையைத் தரிசனம் செய்கையில் அவள் திருவுருவம் நம் கண்ணில் படும் அல்லவா? அந்தத் திருவுருவத்தை நமக்குச் சொல்லினால் கோலம் செய்து காட்டுகிறார்.

முதலில் அவளே நமக்கு உரிய கடவுள் என்று தொடங்குகிறார். எல்லாரையும் தன் உடைமையாக உடையவனாதலின் இறைவனுக்கு 'ஸ்வாமி' என்று பெயர். அதைத் தமிழில் உடையான் என்பார்கள். அம்பிகை எல்லாரையும் உடையவள்; ஆதலின் அவளை 'ஸ்வாமினி' என்பர்; தமிழில் 'உடையாள்' என்று கூறுவர்.

"உடையாள் உன்றன் நடுவிருக்கும்"

என்பது திருவாசகம்.

நம்மையெல்லாம் உடையவள், நமக்கு உரியவற்றையெல்லாம் தரும் தலைவி, நம் நன்மையையே விரும்பும் தாய் அபிராமி. ஆதலின்,

உடையாளை

என்று தொடங்குகிறார். அவளுடைய திருவுருவ வருணனையைத் தொடர்ந்து கூறுகிறார்.

அம்பிகை செந்நிறம் உடையவள்; அவள் பூணும் உடை, அணி யாவும் சிவப்பாக இருக்கும். "ஸர்வாருணா" (37) என்று லலிதா சகசிர நாமம் கூறும்.

ஒல்கு செம்பட்டு உடையாளை

என்று அந்தச் செம்பட்டாடையை நினைவுறுத்துகிறார். "அரவின் பைக்கே அணிவது பன்மணிக் கோவையும் பட்டும்" (37), "சின்னஞ் சிறிய மருங்கினிற் சாத்திய செய்யபட்டும்" (53) என்று முன்னும் சொல்லியிருக்கிறார். "செம்பட்டுக் கட்டும் நுசுப்பின் திரு" என்று திருப்புகழிலும் வருகிறது.

சிவந்த பட்டைச் சொன்னவுடனே மற்றொரு சிவந்த பொருள் நினைவுக்கு வருகிறது. அம்பிகை பல வகையான கோலங்களைக் கொள்பவள். சில சமயங்களில் பூதங்களுக்குத் தலைவியாக நிற்கும்போது சிவபெருமானைப் போலச் சிவந்த சடையை உடையவளாகத் தோன்றுவாள். அங்கே சந்திரனை அணிந்திருப்பாள்; செஞ்சடையில் வெள்ளைப் பிறை பளிச்சென்று தோன்றும்.

ஒளிர் மதிச் செஞ்சடையாளை,

சாரு சந்த்ர கலாதரா (243) என்ற திருநாமம் உடையவள் அன்னை. "தனிக்கண் விளங்கும் நுகற்பிறை மேலோர், மிகைப்பிறை கதுப்பிற் சூடி" என்று ஆசிரிய மாலை என்ற நூல் இந்தச் செய்தியைக் கூறுகிறது. "பனிமா மதியின், குழவித் திருமுடிக் கோமள யாமளைக் கொம்பு" (71) என்று முன்பு இவ்வாசிரியரே பாடியுள்ளார்.

அம்பிகை மதி புனைந்த சடாபாரம் உடையவள் என்பதை, "சடையும் பிறையும் தாழ்ந்த சென்னிக், குவளை யுண்கண் பவளவாண் முகத்தி" (சிலப்பதிகாரம், 23: 1-2)

"தருண வாணிலா வீசு சடிலமோலி மாகாளி" (தக்கயாகப் பரணி, 107) என்பவற்றாலும் அறியலாம்.

சிவபெருமானுக்கு உள்ள இலக்கணங்களை எல்லாம் அம்பிகையினிடமும் காணலாம், சிவமும் சக்தியும் வேறல்லர் ஆகையினால்.

அம்பிகையைத் தியானிக்கும்படி சொல்ல வந்த அபிராமிபட்டர் எப்படித் தியானிக்க வேண்டும் என்பதைக் குறிப்பினால் புலப்படுத்துகிறார். வஞ்சகம் இல்லாமல் தூய்மையை உடைய நெஞ்சோடு இருந்து தியானிக்க வேண்டும். அடியவர்களை, "நெஞ்சில் வஞ்சம் இல்லா இனம்" (69) என்று இந்த ஆசிரியரே முன்பு குறிப்பிட்டுள்ளார். "நெஞ்சில் வஞ்சகரோ டிணங்கேன்" (81) என்று சொன்னவர் இவர். வஞ்சகர் நெஞ்சில் அம்பிகை எழுந்தருளி நலம் புரிய மாட்டாள்.

வஞ்சகர் நெஞ்சு அடையாளை.

இவ்வாறு அம்பிகையின் இயல்பைச் சொல்லும் வாயிலாக வஞ்சகம் இல்லாத நெஞ்சத்தோடு அவளை வழிபட வேண்டும் என்ற அறிவுரையை மறைமுகமாகச் சொல்கிறார்.

அம்பிகையின் இடை மிக மென்மையானது; நுட்பமான நூலைப் போன்றது.

தயங்கும் நுண் நூல் இடையாளை.

அன்னை எம்பெருமானுடைய ஒருபாகத்தில் எழுந்தருளியிருக்கிறவள்; அவனை என்றும் பிரியாமல் உறைபவள்.

எங்கள் பெம்மானிடையாளை.

அம்பிகையை வழிபடுகிறவர்களுக்குச் சிவபெருமானை அயலாகப் பார்க்கும் எண்ணம் வராது. ஆதலின், 'எங்கள் பெம்மான்' என்றார்.

இவ்வளவும் சொல்லி, அன்னையின் அருளால் தாம் பெற்ற பேற்றைச் சொல்கிறார்; அதையும் அம்பிகையின் இயல்பைச் சொல்பவரைப்போல வைத்துச் சொல்கிறார்.

இங்கு என்னை இனிப் படையாளை,

'இனிமேல் இந்த உலகில் வந்து பிறக்கும்படியாக என்னைப் படைக்காதவளை' என்று சொல்வதில் அவருடைய உறுதிப்பாடு தெரிகிறது.

'இந்தப் பெரும்பேறு எனக்குக் கிடைத்தது; பிறருக்கும் இது கிடைக்கும். அம்பிகை தன்னை அண்டி வழிபடுகிறவர்கள் எல்லாரையும் பிறவிப் பிணியினின்றும் நீக்கும் பேரருள் உடையவள். ஆதலால் நீங்களும் அந்த நிலையை அடையலாம். அதற்கு வழி சொல்கிறேன். அவளைத் தரிசனம் செய்து அமைதியாகக் கவலையற்று இருங்கள்' என்று தாம் பெற்ற இன்பத்தை மற்றவரும் பெறவேண்டும் என்ற எண்ணத்தால் சொல்கிறார்.

உங்களையும் படையாவண்ணம் பார்த்து இருமே

'பார்த்து இரும்' என்று உபதேசிக்கிறார். பார்ப்பது இருவகை. முகக்கண் கொண்டு பார்ப்பது புறப்பார்வை; அகக்கண் கொண்டு பார்ப்பது அகப்பார்வை. முதலில் புறக்கண் கொண்டு அம்பிகையின் திருவுருவத்தைத் தரிசித்து, பின்பு அந்த வடிவை உள்ளத்துள்ளே நிறுத்தித் தியானம் செய்ய வேண்டும்; அந்த உண்முகப் பார்வையிலே ஆனந்தம் உண்டாகும்.

"முகத்திற் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு பார்ப்பதே ஆனந்தம்"

என்று திருமூலர் சொல்வார். அகத்திலே அம்பிகையின் திருவுருவத்தை நிறுத்தப் பல நாள் பயிற்சி வேண்டும்.

அந்தப் பயிற்சி முற்ற முற்ற அன்னையின் வடிவம் அகத்தே நிற்கத் தொடங்கும். அப்போது உடம்பெல்லாம் புல்லரிக்கும்; உடலில் கனம் தெரியாது; ஆகாசத்தில் பறப்பதுபோல இருக்கும்; வெப்பமும் தட்பமும் உடம்புக்குத் தெரியா. உடம்பெல்லாம் அமுதம் பாய்ந்தது போல இருக்கும்; மூச்சு மிகமிக மென்மையாக இழையும். அப்போது மனம் ஒன்றையே நோக்கும். இந்த நிலையில் தான் சலனமற்ற இருப்பு உண்டாகும். அதைத்தான், 'இரும்' என்றார்.

அம்பிகையை வெளியிலே கண்ணாரக் கண்டு கண்டு, அவளுடைய அழகிய வடிவத்தை உள்ளத்திலே மீட்டும் மீட்டும் பதித்துப் பழகினால் அமைதியான நிலை உண்டாகும். அந்த நிலையில் இருந்தால் மனம் அலையடங்கிய கடல்போல இருக்கும்.

அத்தகைய நிலை வந்த பிறகு நிச்சயமாக அன்னையின் அருளமுத அநுபவம் கிடைக்கும். அந்த அநுபவம் பெற்றவர்களுக்கு இனிப் பிறப்பு இல்லை; அன்னை அவர்களை இனிமேல் இந்த உலகில் பிறக்கும்படி செய்யமாட்டாள்.

'பார்த்திருமே' என்பதற்கு, மற்றப் பொருள்களைக் காணுவதுபோலப் பார்த்துக் கொண்டிருங்கள் என்று பொருள் செய்யக் கூடாது. பார்ப்பது வேறு; இருப்பது வேறு. பார்ப்பதிலும் இரண்டு வகை. அந்த இருவகைப் பார்வையும் கைகூடியவர்களுக்கு, சும்மா இருக்கும் நிலை உண்டாகும். அதுதான் மஹா மௌனம்.

உடையாளை, ஒல்குசெம் பட்டுடை
யாளை, ஒளிர்மதிச்செஞ்
சடையாளை, வஞ்சகர் நெஞ்சடை
யாளைத் தயங்குநுண்ணூல்

இடையாளை, எங்கள்பெம் மானிடை
யாளை, இங்கு என்னை இனிப்
படையாளை, உங்களை யும்படை
யாவண்ணம் பார்த்திருமே.

[நம்மவர்களே, எல்லாவற்றையும் தன் உடைமை யாகக்கொண்ட பரமேசுவரியை, தளர்ந்து அசையும் செந் நிறமுள்ள பட்டாடையை அணிந்தவளை, விளங்குகின்ற சந்திரனை அணிந்த செம்மையான சடை உடையவளை, விளங்கும் நுண்ணிய நூல்போன்ற இடுப்பை உடையவளை, எங்கள் பரமேசுவரனிடமாகிய வாமபாகத்தில் இருப்பவளை, இவ்வுலகில் என்னை இனிமேல் உடலெடுத்து வரும்படி படை யாதவளை, உங்களையும் படையாத வண்ணம் அவள் திவ்ய தரிசனத்தை உள்ளும் புறமும் கண்டு, அமைதியாக இருங்கள்.

ஒல்குதல்-அசைதல், தளர்தல், பெம்மான் இடை யாள்: இடை-இடம். இங்கு-இவ்வுலகத்தில். இனி என்பது 'இப்போது' என்ற பொருளில் பழைய இலக்கியங்களில் வழங்கும்; இங்கு 'இனிமேல்' என்று பொருள் கொள்ள வேண்டும்.]

இந்தப் பாட்டில் அடிதோறும் மடக்கு வந்தது.

அம்பிகையைத் தியானம் செய்கிறவர்கள் பிறவித் துன்பத்தை அடைய மாட்டார்கள் என்பது கருத்து.

இது அபிராமி அந்தாதியில் 84-ஆம் பாட்டு.

# எங்கும் அவள் காட்சி

இறைவனிடம் பக்தி செய்து அவனுடைய வடிவத்தை உள்ளத்தே வைத்துத் தியானித்து ஈடுபட்டால் உள்ளம் எப்போதும் அவனையே நினைக்கும். இந்த அன்பு முறுகினால் எந்த ஒலி கேட்டாலும் அவனோடு சம்பந்தமான ஒலியாகவே தோன்றும். எங்கே பார்த்தாலும் அவனுடைய வடிவம் தோன்றும். உண்முகத்திலே செய்த தியானத்தின் உறைப்பினாலே அமைகின்ற அநுபவம் இது.

காதல் உலகத்திலும் இப்படி ஓர் அநுபவம் உண்டு. ஒரு பெண்ணினிடத்தில் முறுகிய காதல் கொண்டவன் அவளைப் பிரிந்திருக்கும் சமயத்தில், அவன் உள்ளம் அவள் வடிவழகிலே ஈடுபட்டு இருத்தலால், புறத்தே வெளியில் அவளுடைய வடிவம் தோன்றுமாம். இதை உருவெளித் தோற்றம் என்று சொல்வார்கள். கோவையில் வரும் துறைகளில் ஒன்று அது. கம்பராமாயணத்தில் இப்படி ஒரு காட்சி வருகிறது. சீதா பிராட்டியைப்பற்றிச் சூர்ப்பணகை சொல்லக் கேட்ட இராவணன் அவளைப்பற்றியே சிந்தனை செய்து கொண்டிருந்தான். அப்போது ஓர் அழகிய மங்கை உருவெளித் தோற்றமாக அவன் கண்முன் தோன்றினாள். அவன் சீதையைக் கண்டதில்லை. ஆகையால் தன் கண்முன் தோன்றும் வடிவு அவள் வடிவுதானா என்று தெரிந்து கொள்ள எண்ணிச் சூர்ப்பணகையை அழைத்து வரச் செய்து, "இதோ தெரிகிறாளே; இவளா சீதை?" என்று

கேட்டான். அவளோ எப்போதும் இராமனையே எண்ணிக் கொண்டு அவன் வடிவழகிலே தன் உள்ளத்தைப் பதித்தவள். அவள் வெட்டவெளியைப் பார்த்தபோது அவளுக்கு இராமனுடைய வடிவமே தோன்றியதாம். அதனால், "இவன்தான் அந்த வல்வில் இராமன்" என்றாளாம்.

சிற்றின்ப நோக்கால்காதல் முறுகியவர்களுக்கே இப்படி உருவெளித்தோற்றம் உண்டாகுமானால், உண்மையான பக்தர்களுக்குப் பார்க்கும் இடங்களில் இறைவனுடைய வடிவம் தோன்றுவது ஆச்சரியம் அன்று.

அருணகிரிநாதப் பெருமான் முருகனிடம் அளவற்ற பக்தியை உடையவர். அவனை உள்முகத்தே நன்றாகத் தரிசித்தவர். அந்த அநுபவம் முதிர்ந்து வெளியிலும் அந்தக் காட்சியைக் காணும் சிறந்த நிலை அவருக்கு உண்டாயிற்று. அந்த அநுபவத்தைச் சொல்கிறார்.

"செங்கேழ் அடுத்த சினவடி வேலும்
திருமுகமும்
பங்கே நிறைந்தநற் பன்னிரு தோளும்
பதுமமலர்க்
கொங்கே தரளம் சொரியுஞ்செங் கோடைக்
குமரன் என
எங்கே நினைக்கினும் அங்கேவந் தென்முன்
எதிர்நிற்பனே"

என்ற கந்தர் அலங்காரப் பாட்டில் அந்த அநுபவத்தை வெளியிடுகிறார்.

உள்முகத் தியானத்தில் ஈடுபட்டவர்கள், தியானத்தி லிருந்து விழித்தால் சிறிது நேரம் தியானத்தில் இருந்த நிலையின் அநுபவம் இருக்கும். சினிமாவைப் பார்த்துவிட்டு வந்தால் எங்கோ கனவில் நடப்பதுபோன்ற பிரமை தட்டும்.

அத்தகையது அந்த நிலை. முறுகின பக்தியினுல் உள்முகத்தே தெளிவாக அம்பிகையின் தரிசனத்தைக் கண்டவர்களுக்குப் புறத்திலும் அந்தத் தரிசனம் கிட்டும். இராமகிருஷ்ண பரமஹம்சர் அப்படி அன்னையின் தரிசனத்தைப் பெற்றவர். அபிராமிபட்டரும் அத்தகைய நிலையில் இருந்தவரே. அவர் தம்முடைய அநுபவத்தைச் சொல்ல வருகிறுர்.

போன பாட்டில், "என்னை இனிப் படையாளை உங்களை யும் படையாவண்ணம் பார்த்து இருமே" என்றுர். அவர் அவ்வாறு பார்த்து இருந்தவர். எப்படிப் பார்த்தார் என்பதை இந்தப் பாட்டில் சொல்கிறுர்.

முதலில் புறத்தே விக்கிரக வடிவத்தில் கண்டு, பிறகு உள்ளே நிறுத்தித் தியானம் செய்தால் அந்த விக்கிரகம் உயிர்பெற்று நிலவும். கண் பார்க்கும்; வாய் பேசும்; உடம்பு அசையும்; கால் நடக்கும்; ஆனந்தக் கூத்தாடும். இதற்கு அடுத்த நிலை, அவ்வாறு கண்ட கோலத்தைப் புறத்திலும் காணுதல். குழந்தையை இழந்த தாய் அந்தச் சோகத்தால் பைத்தியம் பிடித்து, எதைக் கண்டாலும் அதைத் தன் குழந்தையென்று கட்டிக்கொள்வாள். குழந்தைப் பாசத் தால் விளைந்த உன்மத்த நிலை அது. பக்தர்களும் ஞானிகளும் ஒரு வகையில் உன்மத்த நிலையில் உள்ளவர்களே. ஆகையால் அவர்களுக்கு உள்ளே கண்ட தெய்வத்தைப் புறத்திலும் காணும் அநுபவம் ஏற்படும். அபிராமிபட்டர் சொல்வதைக் கேட்கலாம்.

பார்க்கும் திசைகளில் எல்லாம் அம்பிகையின் தரிசனம் கிடைக்கிறது. ஏதோ மங்கலான பிழம்பாக அன்று; மிகத் தெளிவாக அங்க அடையாளங்களுடன் அம்பிகையைத் தரிசிக்கிறுர். இதோ அவள் திருக்கரத்தில் ஏந்திய பாசம் தெரிகிறது; அங்குசம் தெரிகிறது. மற்ற இரண்டு கைகளும் தோன்றுகின்றன; வண்டுகள் ஊதும் மலர்ப்

பாணங்கள் ஐந்தும் காட்சி தருகின்றன; கரும்பு வில்லும் கூடத்தான். இவை அம்பிகை திருக்கரங்களில் ஏந்திய பொருள்கள்.

அவை மட்டுமா? திரிபுரசுந்தரியின் திருமேனி விளக்கமாகத் தெரிகிறது. தெரியாமல் ஒடுங்கியிருக்கும் சிற்றிடையும் தெரிகிறது. அவளுடைய பெரிய தன பாரங்களைப் பார்க்கும்போது சிறிய இடை தெளிவாகத் தெரிகிறது. தனபாரங்களின்மேல் முத்துமாலையும் தெரிகிறது.

உள்ளே தியானிக்கும்போது தன் உருவைக் காட்டியருளும் அன்னை அவருக்கு மன அமைதியையும் இன்பத்தையும் தருகிருள். புறத்திலும் இந்தக் காட்சியைக் காட்டி, துணையாக இருந்து, எல்லா வகையான அல்லல்களையும் அவள் தீர்க்கிருள். 'என் அல்லல் எல்லாம் தீர்க்கும் திரிபுரையாள்' என்று மன நிறைவோடு அம்பிகையைக் குறிப்பிடுகிருர்.

பார்க்கும் திசைதொறும் பாசாங்
குசமும், பனிச்சிறைவண்டு
ஆர்க்கும் புதுமலர் ஐந்தும்,
கரும்பும், என் அல்லல்எல்லாம்
தீர்க்கும் திரிபுரை யாள்திரு
மேனியும், சிற்றிடையும்,
வார்க்குங் குமமுலை யும், முலை
மேல்முத்து மாலையுமே.

[அடியேனுடைய இன்னல்களையெல்லாம் போக்குகின்ற திரிபுரசுந்தரியின் திருக்கையில் உள்ள பாசமும், அங்குசமும், குளிர்ச்சியையுடைய சிறகைப் பெற்ற வண்டுகள் முரலுகின்ற புது மலர்களாகிய ஐந்து அம்புகளும், கரும்பாகிய வில்லும், அவள் அழகிய மேனியும், சிறிய திரு இடையும், கச்சையுடைய, குங்குமக் குழம்பு பூசிய நகில்

களும், அவற்றின்மேல் அணிந்த முத்துமாலையும் பார்க்கும் திசைதோறும் தோன்றும்.]

தோன்றும் என்ற சொல்லை அவாய் நிலையால் வருவித்து முடிக்க வேண்டும்.

அம்பிகையின் திருக்கரங்களில் உள்ளவற்றைப் பல இடங்களில் இவ்வாசிரியர் எடுத்துச் சொல்வார். அம்பிகையை இனங்கண்டு கொள்வதற்கு அவை அடையாளங்களாக உதவுகின்றன. 'பனிச்சிறை வண்டு ஆர்க்கும் புதுமலர் ஐந்தும்' என்றார். அந்த அம்புகளுக்கு இப்போது வேலை இல்லை. அசுரர்களை அழித்து வெற்றி மிடுக்குடன் அம்பிகை வீற்றிருக்கிறாள். ஆதலின் அவை இப்போது பாணங்களாக இல்லை; வெறும் மலர்களாக இருக்கின்றன. கருணையினால் அந்த மலர்களில் வண்டுகளை மொய்க்கச் செய்திருக்கிறாள். தேவலோகத்து மலர்களில் வண்டு மொய்ப்பதில்லை. என்றாலும் அம்பிகையின் பேரருள் இந்தப் பொது விதியை நீக்கிவிட்டது. "சூழ்த்த மதுகரம் முரலும் தாரோயை" என்று மணிவாசகரும் இவ்வாறு சிவபெருமானுடைய கருணையை எடுத்துக்காட்டுவார். என்றும் வாடா மலர்களாதலின் புது மலர் என்றார்.

திரிபுரா என்பது அம்பிகையின் திருநாமங்களில் ஒன்று. அது திரிபுரை என்று தமிழில் வந்தது. மூன்று மூன்றாக இருக்கும் எல்லாவற்றுக்கும் தலைவி அவள். என் அல்லல் எல்லாம் என்றது, இம்மை மறுமை என்னும் இரண்டிடத்தும் உண்டாகும் துன்பங்களைக் குறித்தது. இம்மையில் வறுமை, பசி, நோய், பகை ஆகியவற்றையும், மறுமையில் பிறப்பு இறப்பு என்பவற்றையும் போக்குபவள் அன்னை.

பெரியதும் சிறியதும் அடுத்தடுத்து இருந்தால் எடுப்பாகத் தெரியுமாதலால் இடையையும் நகிலையும்

கூறினர். திருமேனி என்றது திருவுருவத் தேசைச் சுட்டியது. அம்பிகையின் தனபாரங்களையும் அவற்றின்மேல் அணிந்த முத்துமாலையையும், "திருத்தன பாரமும் ஆரமும்" (9), "முத்து வடம்கொண்ட கொங்கை" (42), "பென்னம் பெரிய முலையும் முத்தாரமும்" (53) என்று முன்பும் கூறியுள்ளார்.

அம்பிகையின் திருவுருவத்தைப் பார்க்கும் திசைகளில் எல்லாம் தரிசித்த ஆனந்த அதிசயத்தாலே, "தோன்றும்" என்ற பயனிலையைச் சொல்லாமல் இருந்து விட்டார்.

இது அபிராமி அந்தாதியில் 85-ஆவது பாடல்.

# கால ஜயம்

உலகில் பிறந்தவர்கள் யாவராயினும் ஒரு நாள் இறந்து போவார்கள். பிறப்பு, இறப்பு என்னும் இரண்டும் ஒரே தாளில் உள்ள இரண்டு பக்கங்களைப் போன்றவை.

மரணத் துன்பம் எல்லாத் துன்பங்களையும்விடக் கொடுமையானது.

"சாதலின் இன்னாத தில்லை"

என்று திருக்குறளில் வருகிறது. மிகப் பெரியவர்கள்கூட மரணத்தை எண்ணி அஞ்சுவார்கள்; 'மரணம் வரும்போது என்னைக் காப்பாற்றவேண்டும்' என்று இறைவனிடம் முறை இடுவார்கள்.

எல்லோருக்கும் மரணம் வந்தாலும், ஞானிகள் பெறும் மரணத்துக்கும் மற்றவர்கள் பெறும் மரணத்துக்கும் வேறுபாடு உண்டு. ஞானிகளின் மரணம் விடுதலையைப் போன்றது. மற்றவர்களின் மரணம் சிறை மாற்றத்தைப் போன்றது. அதாவது, ஞானிகள் இந்த உடம்பை விட்டுப் பிரிந்தால் மீண்டும் பிறவியை எடுக்கமாட்டார்கள்; பிறவிப் பெருங்கடலைக் கடந்து விடுவார்கள். மற்றவர்களோ, இந்த உடம்பை விட்டுப் பிரிந்தாலும் வேறு ஒரு சரீரத்தை எடுத்து மீண்டும் பிறப்பார்கள். அவர்களுடைய ஜீவ யாத்திரை தொடர்ந்து கொண்டே இருக்கும். அதனால் துன்பங்களும் தொடர்ந்து அநுபவிக்கவேண்டிவரும். ஞானிகளோ இந்தப்

பிறவியையே கடைசிப் பிறவியாகச் செய்துவிடுவார்கள். இந்த உடம்பை விட்டால் பந்தபாசத்தினின்றும் விடுபட்டு இறைவனோடு ஒன்றிவிடுவார்கள். அவர்கள் மரணத்தைக் கண்டு அஞ்ச மாட்டார்கள். இறைவன் திருவருள் நிச்சயம் கிடைக்கும் என்ற உறுதி இருப்பதனால் அவர்கள் மரணத்தை வரவேற்பார்கள்.

''சந்ததமும் வேதமொழி யாதொன்று பற்றினது
தான்வந்து முற்றும் எனலால்
சகமீது இருந்தாலும் மரணம்உண்டு என்பதைச்
சதா நிஷ்டர் நினைவ தில்லை''

என்ற தாயுமானவர் பாடல் இந்த உண்மையைப் புலப்படுத்தும். அவர்கள் மற்றவர்கள் செல்லும் வழியில் போகாமல், இறைவனை அடையும் நேர்வழியில் செல்வார்கள்.

புராணங்களில், நல்லவர்கள் மரணம் அடையும்போது சிவகணங்கள் வந்து அழைத்துச் செல்வார்கள் என்றும், அல்லாதவர்களை யமதூதர்கள் அழைத்துச் செல்வார்கள் என்றும் கூறி இருப்பதைக் காணலாம். தேச சுதந்தரப் போரில் ஈடுபட்டுச் சிறை சென்றவர்கள் சிறையிலிருந்து விடுதலை பெற்று வெளிவந்தால் தேசத்தொண்டர்கள் அவர்களுக்கு மாலை சூட்டி அழைத்துக்கொண்டு வீட்டுக்குச் செல்வார்கள். சிறை மாறும் குற்றவாளிகளைக் கையில் விலங்கிட்டுக் காவலாளர்கள் அழைத்துக்கொண்டு சென்று வேறு சிறையில் அடைப்பார்கள். ஞானிகளும் அஞ்ஞானிகளும் மரணம் அடையும்போது நிகழ்வதாகப் புராணங்கள் சொல்லும் செய்திகள் இவற்றைப் போன்றனவே.

பற்றுள்ளவர்கள் இறந்தால் மறுபடியும் பிறவியை அடைவார்கள். பற்றற்றவர்களோ பிறவாத இன்ப நிலையை அடைவார்கள். இந்தக் கருத்தையே புராணங்கள் அவ்வாறு காட்டுகின்றன.

அன்பர்கள், மரணம் அடையும்போது யமபடர்கள் தம்மை அழைத்துச் செல்லும்படி இருக்கக்கூடாது என்று இறைவனை வேண்டிக்கொள்வார்கள்; ஒருகால் யம தூதர் வந்தாலும் தம்மை அவரிடமிருந்து காப்பாற்றி முத்தியின்பத்தை நல்க வேண்டும் என்று விண்ணப்பிப் பார்கள்.

புராணக் கதைகளில் சிலரைப்பற்றிய வரலாறுகள் விநோதமாக இருக்கும். பாவியாக இருந்த ஒருவன் இறந்து போகிறான். அப்போது அவன் உயிரைக் கட்டிக்கொண்டு போக யமபடர்கள் வருகிறார்கள். அவனைப் பாசத்தால் கட்டுகிறார்கள். அப்போது சிவகணங்கள் வருகின்றன. "இவனை நீங்கள் ஏன் கட்டிக்கொண்டு போகிறீர்கள்?" என்று கணங்கள் கேட்கின்றன. "இவன் பல பாவங்களைச் செய்தவன். ஆகையால் அவற்றுக்குரிய தண்டனையை அநுபவிக்கவேண்டும். அதற்காக இவனை யமபுரத்துக்கு இழுத்துச் செல்கிறோம்" என்கிறார்கள். அது கேட்ட சிவகணங்கள், "இவன் சிவநாமத்தைச் சிவராத்திரியில் ஒரு மணி சொன்னவன். ஆகையால் இவனைச் சிவலோகத் துக்கு அழைத்துச் செல்ல வந்திருக்கிறோம். இவனை விட்டு விடுங்கள்" என்று சொல்கின்றன. யமபடர்கள் கேட்க வில்லை. இருசாராருக்கும் போர் மூளுகிறது. யமபடர்கள் தோற்றுப்போகச் சிவகணங்கள் அவனை அழைத்துக் கொண்டு சிவலோகம் செல்கிறார்கள். இப்படிக் கதைகள் இருக்கும்.

நல்ல காரியம் செய்தவர்கள், இறைவனிடம் பக்தி செய்தவர்கள், நல்ல கதியையே அடைவார்கள். ஆண்ட வன் அவர்களை யமனுடைய கொடுமையினின்றும், மீண்டும் பிறப்பதற்கு ஏதுவாகிய மரணத்துன்பத்தினின்றும், காப் பாற்றுவான் என்பதையே இப்படிக் கதையாகப் புரா ணங்கள் சொல்கின்றன.

அருளாளர்கள் தம்முடைய உபாசனு மூர்த்தியிடம், "கடைசிக்காலத்தில் யமதூதர்களிடம் என்னைக் காட்டிக் கொடுக்காமல் நீ வந்து என்னை ஆட்கொண்டருள வேண்டும்" என்று பாடியிருக்கிருர்கள். அருணகிரிநாதர், "மாகத்தை முட்டி வரும் நெடும் கூற்றன் வந்தால் என் முன்னே, தோகைப் புரவியில் தோன்றி நிற்பாய்" என்று கந்தர் அலங்காரத்திலும், "கார்மாமிசை காலன் வரிற் கலபத்து, ஏர்மாமிசை வந்து எதிரப்படுவாய்" என்று கந்தர் அநுபூதியிலும் பாடுகிருர்.

அன்னையிடம் முறுகிய பக்தி பூண்ட அபிராமிபட்டரும் அப்படிச் சொல்கிருர். அதை இப்போது பார்க்கலாம்.

அபிராமி அம்மை காலனைத் தன் காலால் உதைத்தவள். திருக்கடவூரில் எழுந்தருளியிருக்கும் அமிர்தகடேசுவரரே காலசங்காரம் செய்தார் என்று புராணம் சொன்னுலும், அப்பெருமான் தம் இடக்காலால்தான் காலனை உதைத்து வீழச் செய்தார். அந்த இடக்கால் அம்பிகைக்குரியது. ஆகவே அம்பிகைதான் காலனை உதைத்து வீழ்த்திருள் என்பதில் தவறு ஒன்றும் இல்லை.

"இறுகிய சிறுபிறை எயிறுடை யமபடர் எனதுயிர் கொளவரின் யானேங்குதல் கண்டெதிர் தான் ஏன்று கொளுங்குயில்" என்று திருவகுப்பில்அருணகிரிநாதர் பாடுகிருர். அம்பிகை யமபயம் போக்குபவள் என்பதை அந்த அடிகளில் காண்கிறேம். அம்பிகை மரணபயத்தைப் போக்குபவள் என்பதை லலிதா சகசிரநாமத்திலுள்ள பல திருநாமங்கள் விளக்குகின்றன. மரணத்தை ஒழிப்பவள் என்ற பொருளில் 'ம்ருத்யு மதனி' என்ற திருநாமம் (181) இருக்கிறது. மரணம் என்னும் மரத்தைத் தறிக்கும் கோடரி போன்றவள் அவள் என்பதை, 'ம்ருத்யு தாரு குடாரிகா' (749) என்ற திருநாமம் சுட்டுகிறது. பிறப்பு, இறப்பு,

மூப்பு ஆகியவற்றால் துன்புறும் மக்களை அவற்றினின்றும் மீட்டு அமைதியைத் தருபவள் என்பதை, 'ஜந்ம ம்ருத்யு ஜராதப்த ஜன விச்ராந்தி தாயினி' (951) என்ற பெயர் விளக்குகிறது. எல்லா வகையான மரணங்களையும் போக்கு பவள் என்ற பொருளை உடையது, 'ஸர்வ ம்ருத்யு நிவாரிணி' (552) என்னும் திருப்பெயர்.

அம்பிகையின் திருவடி கால ஜயத்துக்கு உதவுவது. அம்பிகையின் திருக்கரம் வரதமும் அபயமும் காட்டி அருளின்பத்தைப் பெற உதவுகின்றன. அவளுடைய இனிய மொழியோ அஞ்சுகின்ற உயிர்களுக்கு அமுதத்தைப் பெய்வதுபோல இனிமையாக இருக்கிறது.

இவற்றையெல்லாம் எண்ணிப் பார்த்த அபிராமி பட்டர், அன்னையை நோக்கி விண்ணப்பம் செய்துகொள்ள முற்படுகிறார்.

'தாயே, என்னுடைய வாழ்நாள் தீர்ந்து விட்டால் உயிரைக் கொண்டுபோகக் காலன் வருவான். என் வாழ் நாளாகிய காலம் முடிந்துவிட்டது என்பதை நான் அறியாமல் போனாலும், அதைக் கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்து, காலம் முடிந்துவிடும்போது வருவதனால் தானே அவனுக்குக் காலன் என்னும் பெயர் அமைந்திருக் கிறது? அவன் பயங்கரமான வடிவத்துடன் கையில் மூன்று கப்புகளை உடைய சூலத்தோடு வருவான். அந்தச் சூலாயுதத் தால் என்னைக் குத்திக் கொண்டுபோக வருவான். அதை என் மேலே விடுவான். அப்போது நான் மிகவும் துடிதுடித்துப் போவேன். அந்தச் சமயத்தில் நீ வந்து என்னைக் காப்பாற்றவேண்டும்' என்று சொல்கிறார். 'மற்றச் சமயங்களில் நீ என் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து நின்றாலும் அந்தச் சமயத்தில் என் கண்காண நின்றால் அச்சம் நீங்கி நிற்பேன். காலன் கண்காணவும் நீ நிற்க வேண்டும். அப்போது என்னைத் துன்புறுத்தாமல் அவன்

அஞ்சி ஓடிவிடுவான். ஆகையால் நீ அவன் வரும்போது வெளிப்படையாக வந்து முன்னே நின்று சேவை சாதிக்க வேண்டும்' என்கிருர்.

கதித்த கப்பு
வேலை வெம் காலன் என்மேல்
விடும்போது வெளிநில் கண்டாய்.

'எப்படி நீ தரிசனம் தரவேண்டும் தெரியுமா? உன் காலையும் கையையும் காட்டிக் கொண்டு நிற்கவேண்டும். உன் திருவடியைக் கண்டு யமன் முன் பட்ட பாட்டை எண்ணி அஞ்சி ஓடிவிடுவான். உன் கையைக் கண்டு நான் அச்சம் நீங்கி உன் அருள் கிடைத்ததென்று மகிழ்வேன்.'

காலையும்....கையையும் கொண்டு
வெளி நில்.

அந்தத் திருவடியின் பெருமையைச் சொல்ல வருகிருர். 'உன்னுடைய திருவடி அவ்வளவு எளிதில் கண்டுகொள்வதற்கு உரியதன்று. மிகப் பெரியவர்களெல்லாம் அந்தத் திருவடியைத் தரிசிக்க வேண்டுமென்று தேடிக்கொண்டிருக்கிருர்கள். திருமால் தேடுகிருன்; பிரமன் தேடுகிருன்; வேதங்கள் இன்னும் கண்டிலோம் என்று சொல்லித் தேடுகின்றன; தேவர்களெல்லாம் தேடுகின்றனர். அவர்களெல்லாம் தேடியும் காண முடியாமல் நின்ற திருவடி உன் பாதாம்புயம். ஆனாலும் பக்தர்களுக்கு எளியது அது. ஆதலால் நான் வேண்டிக் கொள்கிறேன். என் ஆபத்தைப் போக்க அந்தத் திருவடியைக் காலனும் நானும் காணும்படி வந்து நிற்கவேண்டும்.'

மால் அயன் தேட மறை தேட
வானவர் தேட நின்ற
காலையும்....கொண்டு
வெளிநில் கண்டாய்.

அடுத்தபடி கையைப் பற்றிச் சொல்கிறார், 'உன்னுடைய அபயகரத்தைக் கண்டால் என் அச்சம் போய்விடும்; வரதத் திருக்கரத்தைக் கண்டால் அருள் கிடைக்கும் என்ற உறுதி உண்டாகும். அந்தக் கைகள் வளைகளை அணிந்திருக்கின்றன. நீ எழுந்தருளும்போது அந்த வளைகள் கலகலக்கும். அந்த ஒலியே உன் வருகையைத் தெரிவிக்கும். அந்த ஒலியைக் கேட்டு உன் திருக்கரங்களைப் பார்த்து மகிழ்வேன். எங்கே எனக்கு அபயம் ஈந்து அருள் செய்யும் கரங்கள் என்று கிடந்து தடுமாருத வண்ணம், அந்த வளைகள் ஒலித்து, இங்கே பார் என்று சொல்லாமல் சொல்லும். ஆதலால் வளையல் அணிந்த கைகளையும் கொண்டு பிரசன்னமாகவேண்டும்' என்கிறார்.

சூடகக் கையையும் கொண்டு
....வெளிநில் கண்டாய்.

அம்பிகையின் இனிய மொழியை நினைத்துப் பார்க்கிறார். அது பாலைப்போலவும் தேனைப் போலவும் பாகைப்போலவும் இனிமையாகவும் மென்மையாகவும் இருக்கிறது. மொழியின் ஒலியைக் கேட்டாலே இனிமையாக இருக்கிறது. பாலை உண்டு இன்பம் பெறுவது போல அந்த ஒலியையே கேட்டுக்கொண்டு இருக்கலாம், பொருளை நோக்காமல். மருந்தானாலும் தேனோடு குழைத்து உண்டால் இனிமையாக இருக்கும்; அம்பிகை நம்முடைய நோய்க்கு மருந்து போன்ற சொற்களைச் சொல்பவள். ஆனால் அது மிகவும் இனிமையாக இருக்கும். பாகு மற்றப் பண்டங்களை இனிப்புடையவை யாக்கும். அம்பிகையின் திருவாய்மொழி எல்லாப் பொருள்களுக்கும் இனிமை தந்து இணைக்கும். மிகவும் மென்மையாக உள்ள பணி மொழியை உடையவள் எம்பெருமாட்டி.

பாலையும் தேனையும் பாகையும்
போலும் பணிமொழியே!

என்று அம்பிகையை, அவளுடைய இன் மொழியின் சிறப்பைச் சொல்லி விளிக்கிறார்.

மால்அயன் தேட மறைதேட
  வானவர் தேட நின்ற
காலையும் சூடகக் கையையும்
  கொண்டு கதித்தகப்பு
வேலைவெங் காலன்என் மேல்விடும்
  போது வெளிநில்கண்டாய்,
பாலையும் தேனையும் பாகையும்
  போலும் பணிமொழியே!

[திருமாலும் பிரமதேவனும் தேடவும், வேதம் தேடவும், தேவர்கள் தேடவும் அவர்களுக்குப் புலப்படாமல் நிற்கின்ற திருவடிகளையும் வளையலை அணிந்த திருக்கைகளையும் தாங்கி, மேல் எழுந்த மூன்று கிளைகளை உடைய சூலத்தைக் கொடிய யமன் என்னைக் கொத்திக்கொண்டு போவதற்காக என்மேல் வீசும்போது, என் முன்னே நான் காணும்படி வெளிப்படையாக வந்து நின்று சேவை சாதித்தருள்வாயாக, பாலையும் தேனையும் சர்க்கரைப் பாகையும் போன்ற மென்மையான மொழியை உடைய அபிராமி அம்பிகையே!

மால் முதலியவர்கள் தேட அவர்களுக்கு அரியதாக இருந்தாலும் எனக்கு எளிவந்து காட்சி தரவேண்டும் என்றபடி. சூடகம்-வளையல். கால் காலன் கண்டு அஞ்சி ஓடச் செய்வது. கைகள் அச்சம் நீக்கி அருள்புரியவை. கதித்த-எழுந்த. கப்பு-கிளை. இங்கே, வேலென்றது சூலத்தை. யமன் கையில் சூலத்தை ஏந்தியிருப்பான். "சூலம் பிடித்தெம பாசம் சுழற்றித் தொடர்ந்துவரும் காலன்" என்பது கந்தர் அலங்காரம். கண்டாய்: அசைநிலை. பணிமொழி-மென்மையை உடைய மொழி. "பணிமொழி வாலெயிறூறிய நீர்" என்ற குறளுக்கு உரை எழுதுகையில் பணிமொழி என்பதற்கு மென்மையான மொழி என்று பரிமேலழகர் எழுதினார்.]

அம்பிகை காலபயத்தைப் போக்கி அருளுபவள் என்பது கருத்து.

இது அபிராமி அந்தாதியில் 86-ஆம் பாட்டு.

# அம்பிகையின் ஆற்றலும் கருணையும்

சிவபெருமான் தட்சிணமூர்த்தியாக எழுந்தருளியிருந்தான்; கல்லாலின் கீழ் மௌன முத்திரையுடன் வீற்றிருந்தான். எங்கும் மௌனம் நிலவியது. உயிர்கள் யாவும் விரதம் பூண்டவற்றைப்போல் காம உணர்ச்சியின்றி இருந்தன. ஆண் பெண் உறவே இல்லாமல், சந்ததி வளர்ச்சியும் இல்லாமல் எங்கும் ஓர் அமைதி நிலவியது. அதைக் கண்டு தேவர்களுக்கு அச்சம் உண்டாயிற்று. சிவபெருமானை மௌனத்திலிருந்து கலைத்துப் பார்வதி தேவியைத் திருமணம் செய்துகொள்ளும்படி செய்ய வேண்டும். அப்போதுதான் அவர்களுக்கு ஒரு மகன் அவதாரம் செய்வான். தேவர்கள் வாழ்வைப் பறித்துக் கொண்ட சூரபத்மனுடைய ஆட்சிக்கு ஒரு முடிவு கட்ட வேண்டும். சிவபெருமானே, "என்னுடைய சக்தியினாலன்றி வேறு யாராலும் உன்னை அழிக்க முடியாது" என்று அந்த அசுரனுக்கு வரம் கொடுத்து விட்டான். அந்த வரபலத்தினால் சூரன் தேவர்களை அடிமைகொண்டு தான் நினைத்தபடியெல்லாம் அவர்களை ஆட்டிவைத்தான்.

சிவபெருமானோ எதைப்பற்றியும் கவலைப்படாமல் மௌன விரதத்தை மேற்கொண்டு அமர்ந்திருந்தான். இன்னும் எவ்வளவு காலம் இந்த மோன ஞானத்தவம் தொடருமோ தெரியவில்லை. அதுவரையில் தேவர்கள் நிலை என்னவது? உலகம் என்னவது?

தேவர்களெல்லாம் கூடி ஆலோசனை செய்தார்கள். தட்சிணாமூர்த்தியை எழுப்புவதற்கு வழி என்ன என்று ஆராய்ந்தார்கள். யோகியாக இருக்கும் இறைவனைப் போகி ஆக்க வேண்டும். அம்பிகை இமாசல அரனுடைய மகளாக அவதாரம் செய்து இறைவனையே நாயகனாகப் பெறவேண்டுமென்று தவம் செய்தாள். இருவருடைய தவத்துக்கும் ஒரு முடிவு கட்டி, அம்மையையும் அப்பனையும் ஒன்றுபடச் செய்தால்தான் உலகம் உய்யும்; மக்களின் சந்ததி வளர்ச்சி அடையும். குமாரன் உதயமானால் சூரன் கொடுமை மாயும்; சூரனை அந்தக் குமாரன் அழித்துத் தேவர்கள் பழையபடி வாழும்வண்ணம் செய்வான்.

எப்படி இறைவனுடைய தவத்தைக் கலைப்பது என்பது தான் இப்போதுள்ள பெரிய கேள்வி. இந்திரன் முதலிய தேவர்களெல்லாம் என்ன என்னவோ எண்ணிப் பார்த்தார்கள். தவம் செய்பவர்களுடைய தவத்தைக் குலைக்க இந்திரன் தேவலோகத்து ஆரணங்குகளை அனுப்புவது வழக்கம். அப்படி அனுப்பிப் பலருடைய தவத்தைக் கலைத்திருக்கிறான். இறைவனிடம் யாரை அனுப்புவது? தெய்வப் பெண்களுக்குத் தகப்பனைப் போன்றவன் சிவபிரான். அவர்களால் என்ன செய்யமுடியும்?

பெண்களால் மக்கள் உள்ளத்தில் ஆசை எழுகிறது. அந்த ஆசையை உண்டாக்குபவன் காமன். பெண்களைப் படைகளாகக் கொண்டு அவன் தன் போரை நடத்துகிறான். அவனையே அனுப்பினால் என்ன? அவன் தன் மலரம்புகளை இறைவன்மேல் விட்டால் அவை யோகத்துயிலினின்றும் இறைவனை எழுப்பினாலும் எழுப்பலாம்.

கடைசியில் மன்மதனை அனுப்புவது என்று தீர்மானித்தார்கள். இந்த எண்ணத்தை மன்மதனிடம் சொன்ன போது அவன் முதலில் மறுத்தான்; ''என் அம்பினால்

அந்த ஞானமூர்த்தியை ஒன்றும் செய்ய முடியாது'' என்றான். நயத்தாலும் பயத்தாலும் அவனை வழிக்குக் கொண்டு வந்தார்கள் அமரர்கள்.

மன்மதன் போனான். அம்பு விட்டான். என்ன ஆயிற்று? இறைவன் தன் நெற்றிக் கண்ணைத் திறந்து பார்த்தான். மன்மதன் பொடிசாம்பலாகி விட்டான். முதலுக்கே மோசம் வந்து விட்டது. இரதிதேவி வந்து அழுதாள். "பார்வதி கல்யாணத்தின்போது வா; உனக்கு அருள் புரிகிறேன்'' என்று திருவாய் மலர்ந்தருளினான் இறைவன். மன்மதன் இறந்து கிடந்தான்.

தேவர்கள் பிறகு இறைவனிடம் நேரே விண்ணப்பம் செய்து கொண்டார்கள். அவன் பார்வதியைத் திருமணம் செய்து கொள்ளுவதாகத் திருவாய் மலர்ந்தருளினான். மன்மதன் இல்லாத காலத்தில்தான் பார்வதி பரமசிவனுடைய திருமணம் நடைபெற்றது. உலகில் மன்மதன் அம்பைப் பிரயோகம் செய்ய, அதனால் காமமும் கல்யாணமும் நிகழ்கின்றன. இங்கே பரமேசுவரனுடைய திருமணம் காமத்தின் நிழலே படாத திருமணம்.

"காமம் அகற்றிய தூயனடி—சிவ
காம சுந்தரி நேயனடி''

என்று இராமலிங்க சுவாமிகள் பாடுகிறார். இறைவன் காமத்தால் திருமணம் செய்துகொள்ளவில்லை. உலகமெல்லாம் ஆண் பெண் உறவை ஏற்று வளர்ச்சி பெற வேண்டும் என்பதற்காகத் திருமணம் செய்துகொண்டான்.

அவன் எத்தனையோ காலம் மௌனமாக யோகத்தில் வீற்றிருந்தான். அந்தப் பெருமானைத் திருமணம் செய்து கொள்ளும்படி அம்பிகை செய்தாள்.

எல்லோரும் யோகம் செய்யும்போது தம்முடைய உபாசனா தெய்வத்தைத் தியானம் பண்ணுவார்கள்.

சிவபக்தர்கள் சிவபெருமானை உள்ளத்திலே தியானித்துச் சமாதி நிலையை அடைவார்கள். எல்லோருடைய தியானத்துக்கும் உரிய பரம்பொருளாக இருக்கும் இறைவன் யாரைத் தியானம் பண்ணித் தவம் செய்தான்? அவனுக்கு மேலே ஒரு தெய்வம் இருந்தால்தானே அவன் தியானம் பண்ண முடியும்? அப்படி இல்லையே!

அவன் ஒரு மூர்த்தியை உள்ளத்துள்ளே நிறுவித் தியானம் பண்ணினனும். இந்த இரகசியத்தைக் குமரகுருபர முனிவர் சொல்கிறார்; மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் பாடுகிறார்.

தியானம் பண்ணுகிறவர்கள் தம்முடைய உள்ளத்தில் இறைவனுடைய வடிவத்தை நிறுத்திப் பழகுவார்கள்; மூச்சுக்கூட விடாமல் தம் உள்ளமென்னும் கிழியில் இறைவனுடைய திருவுருவத்தை எழுதிக்கொண்டு அதையே பார்த்துமனேலயம் அடைவார்கள். இதைத் திருநாவுக்கரசு சுவாமிகள் சொல்கிறார்.

"உயிரா வணம்இருந்து உற்று நோக்கி
உள்ளக் கிழியின் உருவெழுதி."

இப்படிச் சிவபெருமான் மூச்சுக்கூட விடாமல் யோகத்தில் இருந்து தன் உள்ளத்தில் ஒருவருடைய ஓவியத்தை எழுதிக் கொண்டு அதையே உற்றுநோக்கித் தவம் கிடந்தானும்! அந்த மூர்த்தி யார்? அம்பிகைதான்!

"...........எறிதரங்கம்
உடுக்கும் புவனம் கடந்துநின்ற
ஒருவன், திருவுள் ளத்தில் அழகு
ஒழுக எழுதிப் பார்த்திருக்கும்
உயிர் ஓவியமே"

என்று மீனாட்சியம்மையைப் பாடுகிறார், குமரகுருபரர். புவனங்களையெல்லாம் கடந்து நிற்கின்ற எம்பெருமான் தன்

திருவுள்ளத்தில் அம்பிகையின் வடிவை அழகு ஒழுகும்படி மெல்ல மெல்ல எழுதி முழுவடிவத்தையும் அங்கே தாரணை செய்து, அதையே உண் முகத்தே பார்த்துத் தவத்தில் இருக்கிறான். அப்படி இருக்கும்போது அவன் உள்ளத்தில் உயிருள்ள சித்திரமாக அம்பிகை நிற்கிறாள்.

ஆகவே, அவன் புறத்தோற்றத்தில் எல்லாம் அடங்கிய யோகியாக இருந்தாலும், அம்பிகையையே நினைத்திருந் தான். அதன் விளைவாகத்தானே தன் தவ விரதத்தைக் கலைத்துக் கொண்டு இமயமலையை நோக்கிப் புறப்பட்டு விட்டான்? பார்வதியின் தவத்தைச் சோதித்துத் தன் காட்சியைக் காட்டி, "நாளைக்கு உன்னை மணம் புரிந்து கொள்கிறேன்" என்று வாக்கு அளித்தான். அதன்படியே பார்வதி திருமணம் நிகழ்ந்தது.

அதோடு நின்றாளா? அம்பிகையைத் தனியாக அருகில் இருத்திக்கொண்டு இடபாரூடனாக எழுந்தருளும் ஐயன், அப்பெருமாட்டியோடு பின்னும் நெருக்கமாக இருக்க எண்ணினான். அப்படிச் சொல்வதைவிட, தவயோகத்தில் இருந்த இறைவன் உள்ளத்திலே தன் உருவைக் காட்டி, பிறகு தன்னை மணம் செய்துகொள்ளச் செய்தாள் அம்பிகை என்றுசொல்வதுதான் பொருத்தம். பிறகு, அதற்கு மேலும் அந்தப் பெருமானின் ஒரு பாதியையே ஆக்கிரமித்துக் கொண்டாள்.

அம்பிகையைத் தன் ஒரு பாகத்தில் இறைவன் வைத்துக் கொண்டான் என்று சிவபக்தர்கள் சொல்வார்கள். அதனால் அப்பெருமானுக்கு அர்த்தநாரீசுவரன் என்ற திருநாமம் அமைந்தது. ஆனால் அம்பிகையின் பக்தர்கள் அப்படிச் சொல்லமாட்டார்கள். அம்பிகையே அந்தப் பாகத்தை உரிமையோடு பெற்றுக் கொண்டாள் என்பார்கள். அருண கிரிநாதர், அம்பிகை தன் வலப்பாகத்தில் இறைவனை ஏற்றுக்கொண்டிருக்கிறாள் என்பார்.

"ஒருவரைப் பங்கில் உடையாள்"
"சுத்த நித்தமுத்தித்
தியாகப் பொருப்பை த்ரிபுராந் தகனை
த்ரயம்பகனைப்
பாகத்தில் வைக்கும் பரமகல்யாணி"

என்று கந்தர் அலங்காரத்தில் பாடுகிறார். சைவர்கள் அர்த்தநாரீசுவரனாக அந்தக் கோலத்தைக் கண்டார்கள்; அருணகிரிநாதரோ அர்த்தேசுவர நாரியாகக் கண்டார்! அம்பிகையின் பக்தர்களும் அப்படித்தான் காண்பார்கள்.

அபிராமிபட்டர் அப்படியே காண்கிறார். அம்பிகை தலைவனுடைய ஒரு பாகத்தை எடுத்துக்கொண்டு ஆட்சி நடத்துகிறாளாம். பெண்ணை வெறுத்து ஒதுக்கியவனைப்போலத் தவவிரதம் பூண்டிருந்த சிவபிரானை மயக்கி, உலகமெல்லாம், "இவர் விரதம் போனபடியைப் பாருங்கள்!" என்று பழிக்கும்படி அவனுடைய இடப்பாகமாகிய ஒரு பாதியை ஆக்கிரமித்துக்கொண்டு ஆட்சி செலுத்தும் பராபரையாக இருக்கிறாளாம்.

சிவபெருமான் காமனைத் தன் கண்ணால் அழித்தவன். தவவிரதம் பூண்டவன். அவனை மயக்கி ஒரு பாகத்தைப் பறித்துக் குடிகொண்டு ஆட்சி நடத்துகிறாள் அன்னை.

விழியால் மதனை
அழிக்கும் தலைவர் அழியா
விரதத்தை அண்டம் எல்லாம்
பழிக்கும்படி ஒரு பாகம் கொண்டு
ஆளும் பராபரையே!

அவன் விரதத்தை அழிக்க வந்தான் மன்மதன். அவனால் சிவபிரானுடைய விரதத்தை அழிக்க முடியவில்லை. அவனே அழிந்து போனான். அத்தகைய அழியாத விரதம் அது. அதை மாற்றி அவனை மயக்கி உடம்பில் ஒரு பாதி

யையும் பெற்றுக் கொண்டாள் அன்னை. அவள் ஆற்றல் எவ்வளவு பெரிது!

எல்லோருக்கும் மேலானவர் என்று சொல்பவர்களுக்கும் மேலாக இருப்பவள் அன்னை; பராபரை. பராத்பரா என்பது தமிழில் பராபரை என வந்தது. பரமேசுவரனையும் அடக்கி ஆளுகிறவள் அவள். பரன் அவன்; அவனுக்கு மேற்பட்ட பராபரை அவள்.

அத்தகைய பெருமாட்டியினால் தமக்குக் கிடைத்த அநுபவத்தைச் சொல்கிறார் ஆசிரியர். அம்பிகை நம்முடைய வாயினால் புகழ்ந்து எல்லை காட்டும் அளவுக்குள் அடங்காதவள். மனத்தினால் நினைத்துப் பார்த்து எல்லை தெரிந்து கொள்ளுவதும் இயலாது. மொழிக்கும் நினைவுக்கும் எட்டாத வடிவம் அவள் அழகிய மூர்த்தி. 'மனோவாசாம் அகோசரா' (415) என்று லலிதா சகசிர நாமம் கூறும்.

அப்படி உள்ளவள் தன்னுடைய அளவற்ற கருணையினால் தன் பக்தர்களுக்குத் தரிசனம் தருவாள். உண்முகத்தும் புறத்தும் தரிசிக்கும்படி தன் திருவுருவத்தைக் காட்டுவாள். அன்பர்கள் செய்யும் பூஜைக்கு மகிழ்ந்து தரிசனம் அளிப்பாள். அன்பர்கள் எப்போதுமே அவளுடைய திருவாராதனத்தில் ஈடுபட்டிருப்பார்கள். பல வகையான கிரியாகலாபங்களை உடையது தேவி பூஜை. அந்தக் கிரியைகளையெல்லாம் ஏற்று மனமகிழ்ந்து அவர்களுக்கு வெளிப்படையாகக் காட்சி தருவாள்.

இந்தத் திவ்ய தரிசனத்தைப் பெற்று இன்புற்றவர் அபிராமிபட்டர். இறைவனை மயக்கி அவனுடைய ஒரு பாதியைத் தன்னுடையதாக்கிக்கொண்ட மகா சக்தியாகிய அன்னை, தன் இணையற்ற கருணையால் தன் குழந்தையாகிய அபிராமிபட்டருக்குக் கண்ணுக்கும் கருத்துக்கும் வாக்குக்

கும் எட்டாத தன் அழகு வடிவத்தைக் காட்டியருளினுள். இந்தப் பேரருளை நினைத்துப் பார்க்கிருர் அவர்.

மொழிக்கும் நினைவுக்கும் எட்டாத
நின் திரு மூர்த்தி என்றன்
விழிக்கும் வினைக்கும் வெளிநின்றதால்

என்று வியந்து நின்ருர். வினை என்றது அவர் செய்த கிரியைகளை; பூஜையில் செய்யும் கிரியா கலாபங்களை. அவர் செய்த பூஜையால் அவருடைய விழிக்கு எதிரே வெளிப் படையாக அம்பிகையின் வடிவம் நின்றதாம்!

மொழிக்கும் நினைவுக்கும் எட்டாத
நின்திரு மூர்த்திஎன்றன்
விழிக்கும் வினைக்கும் வெளிநின்ற
தால், விழி யால்மதனை
அழிக்கும் தலைவர் அழியா
விரதத்தை அண்டம்எல்லாம்
பழிக்கும் படிஒரு பாகம்கொண்டு
ஆளும் பராபரையே!

[தம்முடைய நெற்றிக்கண்ணுல் மன்மதனை அழிக்கும் தலைவராகிய சிவபெருமானுடைய, அந்த மன்மதனுலும் அழியாத தவவிரதத்தின் தன்மையை எல்லா உலகத்தில் உள்ளவரும் பழிக்கும்படியாக அவருடைய ஒரு பாதியைப் பறித்துக் கொண்டு ஆட்சி செய்யும் மேலான பொருளுக்கும் மேலான பொருளாய் நிற்பவளே, வாக்கால் சொல்லும் சொல்லுக்கும் மனத்தால் நினைக்கும் நினைப்புக்கும் எட்டாமல் உள்ள நின்னுடைய அழகிய தெய்வத் திரு வடிவம், அடியேனுடைய கண்களுக்கும் அடியேன் செய்த பூஜையாகிய கிரியைக்கும் வெளிப்படையாகத் தோன்றி நின்றது. (இது நின் பெருங் கருணையால் நிகழ்ந்தது.)

மூர்த்தி-வடிவம்; அது விழிக்குவெளிப்பட்டுநின்றது; அடியேன் செய்த பூஜைக்குரிய பயனுக வெளிப்பட்டு நின்றது.

வெளி நின்றது-புறக்கண்ணிலும் தரிசிக்கும்படியாக வெளியில் நிலவியது. விரதத்தைப் பழித்தலாவது, 'இவர் தவம் இருந்து என்ன பயன்? அதை அம்பிகை கலைத்து விட்டாளே!' என்று இகழ்ந்து கூறுதல். பாகம்-பாதி, ஆளும்-தன் விருப்பப்படி ஆட்சி புரியும்.]

இதற்குமுன் 65-ஆம் பாடலில், அம்பிகை இறைவனுடைய மனத்தை மாற்றித் தன் வயப்படும்படி செய்ததை வேறு ஒரு வகையில் சொன்னார். இங்கே அப்பாடல் ஒப்பு நோக்குவதற்குரியது.

''ககனமும் வானும் புவனமும்
காணவிற் காமன்அங்கம்
தகனம்முன் செய்த தவப்பெரு
மாற்குத் தடக்கையும்செம்
முகனும்முந் நான்கிரு மூன்றெனத்
தோன்றிய மூதறிவின்
மகனும்உண் டாயதன் றோவல்லி
நீசெய்த வல்லபமே!''

அம்பிகையின் ஆற்றலுக்கு அடங்காதவர் யாரும் இல்லை என்பதும், பெருங் கருணையால் அன்பர்களுக்கு அவள் காட்சி தருவாள் என்பதும் இப்போது பார்த்த பாடலின் உள்ளுறை.

இது அபிராமி அந்தாதியின் 87-ஆம் பாட்டு.

# தள்ளத் தகாது

சிவபெருமானுடைய பெருமையைச் சொல்லி, அவன் விரதத்தை அழித்து அவனுடைய வாமபாகத்தை அன்னை ஆக்கிரமித்துக்கொண்ட அற்புதத்தைச் சொன்ன அபிராமி பட்டர், இன்னும் அந்த நிலையிலேயே சொக்கிக்கிடக்கிறார். சிவபிரானுடைய இடப்பாகத்தை ஆட்சிகொண்டு, சிங்காதனத்தில் வீற்றிருந்து சிறப்புறுவதைப் போல அங்கே தேவி சிறந்து விளங்குகிறாளாம். அவன் மும்மலத்தை மாய்க்கும் வல்லமை உடையவன். அத்தகைய பெருமானுடைய வாம பாகத்தில் அம்பிகை ஆட்சி கொண்டு சிறப்புற்று விளங்குகிறாள்.

சிவபெருமான் மூன்று புரங்களைச் சிரித்து எரித்தவன். அவன் மேருமலையாகிய வில்லை வளைத்தான். அம்பு கோத்து எய்யவில்லை. அதற்குள் அம்பாக இருந்த திருமாலுக்கு அகங்காரம் வந்தது. அதை எண்ணிச் சிரிப்பது போலச் சிரித்தான். அந்தச் சிரிப்பே திரிபுரங்களை அழித்தது. வித்யுன்மாலி, தாரகாட்சன், வாணன் என்னும் மூன்று அசுரர்கள் இரும்பு, வெள்ளி, பொன் ஆகியவற்றாலான மூன்று பறக்கும் கோட்டைகளை உடையவர்களாகி மக்களுக்குத் துன்பத்தைச் செய்து வந்தார்கள். திரிபுரங்களையும் பறக்கச்செய்து எங்கேனும் இறக்கிப் படியச்செய்தார்கள். இவ்வாறு அவர்கள் தமக்குக் கிடைத்த கோட்டை

களின் வலிமையால் யாவருக்கும் துன்பம் உண்டாக்கியதை அறிந்த இறைவன் அந்தக் கோட்டைகளை அழித்தான். அசுரர்களை அழிக்கவில்லை. அவர்கள் இறைவனைப் பணிந்து தொண்டு பூண்டனர். தாரகாட்சனும் வித்யுன்மாலியும் வாயில் காவலர்களாகவும், வாணன் குடமுழவு வாசிப்ப வனாகவும் இறைவன் திருத்தொண்டில் ஈடுபட்டார்கள்.

புராணக் கதைகளுக்கு உட்பொருள் உண்டு. இறைவனுடைய திருவருட் செயல்கள் சில உண்மைகளை எடுத்துக் காட்டுபவை. மூன்று புரங்கள் ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்று மலங்களைக் குறிப்பவை. இறைவன் ஞான சொரூபி. அவன் புன்முறுவலாகிய ஞானத்தால் மும்மலங்களும் அழிந்தன. அவற்றோடிருந்த அசுரர்கள் மும்மலத்தோடு உள்ள ஆன்மாக்கள். மலம் நீங்கிய ஆன்மாக்கள் பேரின்பப் பெருவாழ்வை அடையும். அப்படி அடைந்ததைக் காட்டுவது, மூன்று அசுரர்களும் இறைவன் திருத்தொண்டில் ஈடுபட்டு இன்பத்தை அடைந்த செயல்.

“அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புரம் செற்றனன் என்பர்கள் மூடர்கள்;
முப்புர மாவது மும்மல காரியம்;
அப்புரம் எய்தமை யாரறி வாரே”

என்று இக்கருத்தைத் திருமந்திரம் கூறுகிறது.

இறைவன் செய்த மற்றொரு பராக்கிரமத்தையும் அபிராமி பட்டர் நினைவுகூர்கிறார். பிரமனுக்கு ஆதியில் ஐந்து தலைகள் இருந்தன. சிவபெருமானுக்கும் ஐந்துதலைகள்; தத்புருஷம், வாமதேவம், சத்யோஜாதம், ஈசானம், அகோரம் என்பன அவை. பிரமன், ‘எனக்கும் சிவனுக்கு உள்ள ஐந்து தலைகள் இருக்கின்றன. நானும் அவனும் சமானம்’ என்று அகந்தை கொண்டான்; அப்பொழுது சிவபெருமான் அவனுடைய நடுத்தலையைக் கிள்ளி எறிந்தான். பிரமனுடைய அகங்காரம் ஒழிந்தது. பிரமன் சிரம் கொய்த

வரலாறு, இறைவன் அகங்காரத்தை ஒழிக்கும் அருளை யுடையவன் என்பதைச் சுட்டுகிறது.

திரிபுரத்தை அழிக்கச் சென்றபோது சிவபெருமானு டைய திருக்கரம் மேருமலையை வளைத்தது; பிரமனுடைய அகங்காரத்தைப் போக்குவதற்காக அவன் தலையைக் கிள்ளியது. ஆக, இந்த இரண்டு செயல்களையும் செய்த கையை உடையவன் சிவபெருமான் என்று அடையாளம் காட்டுகிறார்.

தரியலர்தம்
புரம் அன்று எரியப் பொருப்பு வில்
வாங்கிய-போதில் அயன்
சிரம் ஒன்று செற்ற-கையான்,

[பகைவர்களுடைய மூன்று புரங்களும் அந்த நாளில் எரியும்பொருட்டு மேருமலையாகிய வில்லை வளைத்ததும், தாமரைப் பூவில் இருக்கின்ற பிரமனுடைய தலை ஒன்றைத் துணித்ததும் ஆகிய கையையுடைய சிவபெருமான். தரிய லர்-பகைவர்; இங்கே திரிபுரர்களாகிய அசுரர்கள். புரம்-முப்புரம். அன்று: பண்டறி சுட்டு. பொருப்பு-மலை; இங்கே மேருமலை. வாங்கிய-வளைத்த. போது-தாமரை மலர். செற்ற-அறுத்த.

வாங்கிய கையான், செற்ற கையான் என்று கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும்.]

இவ்வாறு இரண்டு பராக்கிரமச் செயல்களைச் செய்த திருக்கரத்தை உடைய சிவபெருமானுடைய திருமேனியில் இடப்பாகத்தில் சிறந்து விளங்குகிறவள் அம்பிகை.

தரியலர்தம்
புரம் அன்று எரியப் பொருப்பு வில்
வாங்கிய-போதில் அயன்
சிரம் ஒன்று செற்ற-கையான்
இடப்பாகம் சிறந்தவளே!

இவ்வாறு அம்பிகையை விளித்த அபிராமிபட்டர், அப் பெருமாட்டியை நோக்கி விண்ணப்பித்துக்கொள்கிறார்.

அம்பிகை எல்லோருக்கும் மேலாகிய பரதேவதை. பிடித்தாலும் புளியங்கொம்பைப் பிடிக்கவேண்டும் என்பது போல அன்னையைப் பற்றிக்கொண்டவர் இந்தப் பக்தர்.

உலகில் யாருக்கேனும் குறையிருந்தால் அவர் தம்மினும் வலியவரைச் சார்வது இயல்பு. நூறு ரூபாய் சம்பளம் வாங்குகிறவன் பணமுடை ஏற்பட்டால் இருநூறு ரூபாய் சம்பளம் வாங்கும் ஒருவனை அண்டி ஐந்தோ பத்தோ வாங்கிக்கொள்வான். இருநூறு ரூபாய் சம்பளக்காரனோ தன் கவுரவத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காகத் தன்னிடம் கடன் கேட்டவனுக்கு ஐந்தோ பத்தோ கொடுத்து விடுவான். ஆனால் அவனுக்கும் பற்றுக்குறை இருக்கும். ஆகவே, அவன் தன்னைவிட அதிகச் சம்பளம் வாங்கும் ஒருவனிடம் போய்க் கடன் கேட்டு ஐம்பது ரூபாய் வாங்கி வருவான். அந்த மூன்றாவது பேர்வழியும் தன்னை விட அதிக வருவாயுடையவனிடம் போய்க் கடன் கேட்பான். இப்படியே மேலே மேலே போய்க்கொண்டிருக்கும். குறையில்லாத மனிதனே இல்லை. இறைவன் ஒருவன்தான் குறைவிலா நிறைவாய் இருப்பவன். அவனை அண்டினவர்களுக்கு வேறு ஒருவரிடம் செல்ல வேண்டிய அவசியம் இராது. அப்போதுதான் மனக்கவலை தீரும்.

"தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது"

என்பது திருக்குறள். ஆகவே, நாம் எல்லாரினும் சிறந்த ஒருவரைப் பற்றிக்கொண்டால் வேறு ஒருவரை நாடிச் செல்ல வேண்டிய அவசியம் இல்லாமல் போய்விடும்.

இந்த உண்மையை நன்கு அறிந்த அபிராமிபட்டர் பரதேவதையாகிய அம்பிகையையே புகல் புகுந்தார். அவள்

எல்லோரினும் மேலானவள் என்பதை அறிந்து அவள் திருவடியையே சரணாக அடைந்தார். அதைச் சொல்கிறார்.

பரம் என்று உனை அடைந்தேன் தமியேனும்,

'வேறு துணை யாரும் இல்லாத தனியனாகிய அடியேனும் நீயே எல்லாரினும் சிறந்தவள் என்று தெளிந்து உன்னைச் சரணமாக அடைந்தேன்' என்கிறார். பரம்-மேலான பொருள். அம்பிகைக்குப் பரா என்ற திருநாமம் இருப்பது காண்க. பராசக்தி, பரதேவதை, பராம்பிகை, பரமேசுவரி, பராத்பரை என்றெல்லாம் அம்மையின் திருநாமங்கள் இருப்பது இந்த உண்மையை விளக்கும்.

பரம் என்பதற்குப் பாரம் என்றும் ஒரு பொருள் உண்டு. ஆகவே இங்கே, 'அடியேன் உனக்குப் பாரம் என்று உன்னை அடைந்தேன், என்னைத் தாங்குபவள் நீயே; உனக்கே நான் பாரம் என்று வந்து புகுந்தேன்' என்றும் பொருள் கொள்ளலாம். "வானமாய் நின்றின்ப மழை யாய் இறங்கிஎனை வாழ்விப்ப துன்பரங்காண்" (தாயு மானவர் பாடல்) என்பதில் பரம் என்பது இந்தப் பொருளில் வந்திருப்பதைக் காணலாம். "நீயே என்னைத் தாங்கிக் கொள்வதற்குரியவள்; ஆதலால் உனக்குப் பாரம் அடியேன் என்று அடைந்தேன்" என்றார். "தன்கடன் அடியேனையும் தாங்குதல், என் கடன் பணிசெய்து கிடப் பதே" என்று அப்பர் சுவாமிகள் இறைவனிடம் விண்ணப் பித்துக் கொண்டது போன்றது இது.

அம்பிகையால் ஆளப்பெற்ற பக்தர்கள் பலர். அவர்கள் பல வகையிலும் உயர்ந்த பக்குவத்தைப் பெற்றவர்கள். அவள் திருவடியிலே தலைவைத்து வணங்குபவர்களில் தேவர்கள் உண்டு; முனிவர்கள் இருக்கிறார்கள்; உத்தம மான மனிதர்கள் இருக்கிறார்கள். "மனிதரும் தேவரும் மாயா முனிவரும் வந்துசென்னி, குனிதரும் சேவடிக்

கோமளமே!'' என்று அம்பிகையின் பெருமையை இந்த ஆசிரியர் முன்னே எடுத்துக் காட்டியிருக்கிருர்.

அவ்வாறு அன்னையின் திருவருளுக்கு ஆளான பக்தர்களுடைய வரிசையை இப்போது ஆசிரியர் எண்ணிப் பார்க்கிருர். 'நாமும் அன்னையைச் சரண் புகுகிறேமே! இவ்வளவு பெரியவர்கள் புகும் இடம் அல்லவா அது? அவர்கள் எங்கே? நாம் எங்கே?' என்று அவர் கருதுகிருர். 'அப்படியானுல் இங்கே எனக்கு இடம் இல்லையோ! அம்பிகை மற்றவர்களுடைய தகுதியையும் என்னுடைய அபக்குவத்தையும் பார்த்து என்னைத் தள்ளிவிடுவாளோ!' என்ற ஐயப்பாடு உண்டாகிறது. ''பொல்லாத சேயெனில் தாய்தள்ளல் நீதமோ?'' என்று தாயுமானவர் கேட்கிருர். அன்னை மகா மாதா. அவளைப் புகல் அடையாதவர்களுக்கு அவளுடைய அருள் தாமதமாகக் கிடைக்கலாம். புகல் அடைந்த பிறகு அவள் தயைபுரிந்து பாதுகாப்பாள். புகல் புகுகின்றவரைக் குந்தான் வேறுபாடு. புகல் புகுந்த பிறகு ஏது வேற்றுமை? எல்லோரும் பக்தர்கள்; தாயின் குழந்தைகள்.

ரெயில் வண்டியில் ஏறுகின்றவர்கள் பல திசைகளிலிருந்தும் வருவார்கள்; நடந்து வருவார்கள்; வண்டியில் வருவார்கள். போகலாம் என்று எண்ணிப் பல நாள் தாமதம் செய்து பிறகு வருவார்கள். ஜனதா எக்ஸ்பிரஸ்ஸில் எல்லோரும் ஏறுகிருர்கள். எல்லோரும் டிக்கெட் வாங்கினவர்கள். 'நீ காரில் வந்தவன்; உனக்கு நான் அறுபது மைல் வேகத்தில் போகிறேன்' என்று வண்டி சொல்லுமா? எல்லோருக்கும் ஒரே வேகம், ஒரே நிறை. டிக்கட் வாங்கி வண்டியில் ஏறிவிட்டால் பிறகு வேறுபாடு இல்லை.

அம்பிகையைச் சரண்புகுவதற்கு முன் பல வேறு நிலைகள் இருந்திருக்கலாம். சரணம் புகுந்துவிட்டால்

பக்தர்களுக்குள் வேற்றுமை இல்லை. டிக்கட் வாங்காமல் ஏறியவர்களைப்போல், உண்மையான பக்தி இல்லாமல் போலிவேடம் போடுகிறவர்களுக்குத்தான் ஆபத்து. மற்றவர்கள் யாவரும் அன்னையின் அருளைப் பெறுவார்கள்.

இப்போது அபிராமிபட்டர் அம்பிகையைப் பார்த்துச் சொல்கிறார். அவர் பணிவுள்ளவர்; அகந்தை அழிந்தவர். 'தாயே, உன்னுடைய பக்தர்கள் மிகப் பெரியவர்கள். அவர்களுக்குமுன் நான் எம்மாத்திரம்? என்னை நீ கருணையினாலே ஆட்கொள்ளவேண்டும். மற்றவர்களோடு ஒப்பிட்டுப் பார்த்து, இவன் தகுதி உடையவன் அல்லன் என்று தள்ளுதல் நியாயம் அன்று. நான் வேறு யாரை அடைவேன்? உன்னைவிடப் புகல்புகுவதற்கு வேறு யார் இருக்கிறார்கள்? நீயே பரதேவதை என்று உன்னை அடைந்துவிட்டேன். இதைமட்டும் எண்ணி ஆட்கொள்ளவேண்டும்' என்கிறார்.

என் பத்தருக்குள்
　　தரம் அன்று இவன் என்று
தள்ளத் தகாது.

['என்னுடையசிறந்த பக்தருக்குள் இவன் அவர்களோடு சமானமாக வைத்து எண்ணத்தக்க தகுதி உடையவன் அல்லன்' என்று நினைந்து அடியேனை நீ தள்ளினால், அச்செயல் நின் பெருமைக்கு ஏற்றதாகாது. தரம்-தகுதி. தள்ள-நீ தள்ளினால்.]

'உன்னையே சரணாக அடைந்து விட்டேன். இனிப் புகல் இடம் வேறு இல்லை. நீ தள்ளினால் நான் சென்று சேரும் இடம் வேறு கிடையாது' என்கிறார்.

பெரியவர்கள் தம்மை மற்றவர்களோடு ஒப்பு நோக்கி, 'நாம் எவ்வளவு தாழ்வாக உள்ளோம்!' என்று எண்ணுவது இயல்பு. ஆனாலும் இறைவன் நம்மைக் கைவிடமாட்டான்

என்ற உறுதியோடு இருப்பார்கள். அத்தகைய மனநிலையில் இருப்பவர் அபிராமிபட்டர்.

பரம்என்று உனைஅடைந் தேன்தமி
யேனும்;என் பத்தருக்குள்
தரம்அன்று இவன்என்று தள்ளத்
தகாது; தரியலர்தம்
புரம்அன்று எரியப் பொருப்புவில்
வாங்கிய, போதில்அயன்
சிரம்ஒன்று செற்றகை யான்இடப்
பாகம் சிறந்தவளே!

இது அபிராமி அந்தாதியில் 83-ஆம் பாடல்.

# துரியம் அற்ற உறக்கம்

இவ்வுலக வாழ்க்கையில் ஈடுபட்டுப் பல வகையான செயல் செய்யும் ஒருவனுக்கு உலகத்திலுள்ள பொருள்களின்மேல் பற்று உண்டாகிறது. நாள் ஆக ஆக, அந்தப் பற்று விரிகிறது. அந்தப் பொருள்களோடு ஒட்டிக்கிடக்க வேண்டும் என்ற ஆசை உண்டாகிறது. அவற்றைப் பிரிய நேர்ந்தால் துன்பம் விளைகிறது. இவ்வாறு பற்றினைப் பெருக்கிக் கொண்டே போவதனால் துன்பம் மிகுதியாகிறதேயன்றிக் குறைவதில்லை.

எவ்வளவு நீண்ட காலம் ஒருவன் வாழ்ந்தாலும் கடைசியில் அவன் இவ்வுலக வாழ்வை விட்டு ஒருநாள் போக வேண்டியவன்தான். அப்படி நீங்கும்போது, பல பொருள்களின்மேல் பற்று உள்ளவனுக்கு உண்டாகும் துன்பம் அளவற்றதாகிறது. ஓர் ஊரில் உத்தியோகம் செய்கிறவன் வேறு ஓர் ஊருக்கு மாற்றலாகிப் போனால், அது அந்த உத்தியோக முறையென்று எண்ணி, அந்தப் புதிய ஊருக்குப் போகிறான்; 'இந்த ஊரை விட்டுப் போகிறோமே!' என்று துன்பப்படுவதில்லை. அதுபோல இந்த வாழ்வை விட்டுப் பிரியும்பொழுது உண்மையை உணர்ந்தவர்கள் துன்பப்படமாட்டார்கள். இந்த உடம்பைப் பெற்றதனால் ஆன பயனைப் பெற்றவர்கள், இறைவியின் திருவருளுக்கு ஆளானவர்கள், இந்த உடம்பை விட்டுப் போகிறோமே என்று கவலைப்படமாட்டார்கள்.

ஓர் ஊரில் இரண்டு பேர் கரும்புத் தோட்டம் போட்டார்கள். கரும்பு நன்ருக முற்றி விளைந்தது. அப்போது ஒருவன் வந்து தோட்டத்துக்குச் சொந்தக்காரர்களாகிய இருவரிடமும், "உங்கள் கரும்புத் தோட்டங்கள் எரிகின்றன" என்ருன். அதைக் கேட்ட ஒருவர், "அப்படியா? நல்ல காரியம்! நானே எரிக்க வேண்டும் என்று எண்ணினேன். எனக்கு வேலை வைக்காமல் யாரோ ஓர் உபகாரி அதைச் செய்து விட்டார்" என்று சொன்ஞர். மற்றவரோ, "ஐயோ! என் கரும்பு வீணுகிவிடுமே!" என்று ஓடினுர். காரணம் என்ன? முதல்வர் கரும்பை வெட்டி ஆலையிற் பிழிந்து சாருக்கி வெல்லம் உண்டாக்கி விற்று விட்டவர். தோட்டத்தில் கரும்பு வெட்டிய தோகைதான் இருந்தது. அதற்குத் துரும்பு என்று பெயர். மற்ருெருவரோ கரும்பை இன்னும் வெட்டாமல் இருந்தவர்; அதனுல் துன்புற்ருர்.

முதலில் உள்ளவரைப்போல, இந்தப் பிறவியில் செய்ய வேண்டியவற்றைச் செய்தவர்கள், மரணம் வருமென்று அஞ்சமாட்டார்கள். இந்தக் கருத்தை நாலடியார் சொல்கிறது.

"கரும்பாட்டிக் கட்டி சிறுகாலைக் கொண்டார்
துரும்புஎழுந்து வேங்கால் துயர்ஆண்டு உழவார்;
வருந்தி உடம்பின் பயன்கொண்டார் காலன்
வருங்கால் பரிவ திலர்."

ஓர் ஊருக்குப் பயணம் புறப்பட எண்ணினுர் ஒருவர். அங்கேயே குடியேறவும் தீர்மானித்து விட்டார். அதற்கு வேண்டிய பணத்தை ஈட்டி ஒரு முதலாளியிடம் கொடுத்திருக்கிருர். "எனக்குவேண்டிய பண்டங்களை இந்தப் பணத்தைக் கொண்டு வாங்கி வையுங்கள். நான் புறப்படும்போது உங்களிடம் கேட்டு வாங்கிக் கொள்கிறேன். அந்தச் சமயத்தில் நீங்கள் உதவி செய்ய வேண்டும்" என்று சொல்லிக் கொடுக்கிருர். அவர் பயணம் புறப்படும்போது தாம்

விரும்பியவற்றைக் கேட்கிறார். முதலாளியும் கொடுக்கிறார். முன்பே முதலாளியோடு பழகி அவரிடம் பணம் கொடுத்திருப்பதனால்தான், அந்த மனிதர் பயணம் புறப்படும்போது கேட்கிற பண்டங்களை முதலாளி தருகிறார். முன் பின் பழக்கம் இல்லாமல், பணமும் கொடுக்காமல் இருந்தால் உதவி செய்வாரா?

வாழும்பொழுது அம்பிகையை நினைந்து பக்தி பண்ணி மூன்று கரணங்களாலும் அவளை வழிபட்டுவந்தால் அந்தப் புண்ணியம் மரணத்தறுவாயில் வந்து காப்பாற்றும். வாழ் நாள் எல்லாம் எது எதற்காகவோ முயற்சிசெய்து அலைந்து திரிந்துவிட்டுக் கடைசிக்காலத்தில் நன்மை வரவேண்டு மென்றால் வராது. இறக்கும்பொழுது இறைவியின் நினைவு உண்டாவது எளிய காரியம் அன்று. காலம் எல்லாம் அவளிடம் அன்பு செய்து, அவளுடைய சரணாரவிந்தமே உண்மையான பற்றுக்கோடு என்று எண்ணி, உபாசனை செய்யவேண்டும். அப்போதுதான் மரணசமயத்தில் அவள் நினைவு உண்டாகும். "நீ வந்து காப்பாற்றவேண்டும்" என்று விண்ணப்பித்தால் அவள் உடனே எழுந்தருளி வந்து பாதுகாப்பைத் தருவாள்.

பயிரிடும் காலத்தில் செய்யவேண்டியதைச் செய்பவன், அறுவடைக்குமுன் சில காலம் சும்மா இருந்தாலும், பருவத்தில் அறுவடை செய்யப்போனால் பலன் கிடைக்கும். வாழ் நாளில் அம்பிகையிடம் ஈடுபட்டுப் பழகினால் இறுதிக் காலத்தில் அதற்குப் பயன் உண்டாகும்.

அபிராமிபட்டர் அம்பிகையை மூன்று கரணங்களாலும் வழிபட்டவர்; அவளை ஒரு கணமும் மறவாமல் வாழ்ந்தவர். அவர் அம்பிகையிடம் ஒரு விண்ணப்பத்தைச் சமர்ப்பிக்கிறார். 'நான் மரணமடையும் சமயத்தில் வந்து என்னை ஆண்டருள வேண்டும்' என்று வேண்டிக்கொள்

கிறார். அவர் உரிமையோடு அந்த வேண்டுகோளை விடுக்கிறார். இன்ஷ்யூரன்ஸ் செய்தவன் அவ்வக்காலத்தில் செலுத்த வேண்டிய பணத்தைச் செலுத்தினால் உரிய காலத்தில் பெருந்தொகை கிடைப்பதுபோல, அபிராமி பட்டருக்கு அம்பிகையின் அருள் கிடைக்கும்; அதற்காகப் பல காலமாகச் செய்யவேண்டியவற்றைச் செய்து வாழ்ந்தவர்; அந்த உரிமைபற்றி இந்த வேண்டுகோளை விடுக்கிறார்.

உடம்பிலிருந்து உயிர் பிரிவதுதான் மரணம். உடம்புக்கும் உயிருக்கும் உள்ள உறவு நிலையானதன்று. முட்டையிலிருந்து பறவைக்குஞ்சு வெளி வந்து பறந்து ஓடிப்போவது போல இந்த உடம்பிலிருந்து உயிர் பிரிந்துவிடும்:

> "குடம்பை தனித்துஒழியப் புள்பறந் தற்றே
> உடம்போ டுயிரிடை நட்பு"

என்று திருவள்ளுவர் சொல்கிறார்.

அவ்வாறு மரணம் சம்பவிப்பதற்குமுன் நம்முடைய பொறிகள் ஒவ்வொன்றாக அடங்கிவிடும். அறிவும் மயங்கிப் போகும். கண் பஞ்சடையும்; காது கேளாது; நாவிற்குச் சுவைதெரியாது; எறும்பு கடித்தாலும் சுரணை இருக்காது; நம் துர்நாற்றம் நமக்குத் தெரியாது.

> "புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
> அறிவழிந்திட்டு ஐம்மேல் உந்தி
> அலமந்த பொழுதாக"

என்று அந்த நிலையைத் திருஞானசம்பந்தப் பெருமான் பாடுகிறார். உடம்புக்கும் உயிருக்கும் உள்ள உறவு அற்றுப் போக, அறிவு மயங்கி மறக்கும் சமயந்தான் மரண நிலை. 'அந்தச் சமயத்தில் நீ எழுந்தருளி வந்து நலம் செய்ய வேண்டும்' என்று வேண்டுகிறார் ஆசிரியர்.

> உடம்போடு உயிர் உறவு அற்று அறிவு
> மறக்கும்பொழுது என்முன்னே வரல்வேண்டும்

என்பது அவர் வேண்டுகோள்.

முதலில் அன்னையை விளிக்கிறார். அவள் தாமரையின் மேல் வீற்றிருக்கும் திருமகளாக இருக்கிறாள். அன்றியும் ஆறு ஆதாரங்களாகிய கமலங்களில் வெவ்வேறு வடிவத்தில் எழுந்தருளியிருக்கிறாள். இந்த நிலையை இவ்வாசிரியர் பல இடங்களில் எடுத்துச் சொல்லியிருக்கிறார்.

"அம்புயமேல் திருந்திய சுந்தரி" (5) என்றார் ஒரு பாட்டில். "உறைகின்ற நின் திருக்கோயில்....கஞ்சமோ?" (20) என்று கேட்டிருக்கிறார். "அருணம்புயத்தும் என் சித்தாம்புயத்தும் அமர்ந்திருக்கும்" (58) தகைமையை ஒரு பாட்டில் போற்றியிருக்கிறார். "ஆடகத் தாமரை ஆரணங்கே" (80) என்று அழைத்திருக்கிறார். "அளியார் கமலத்தில் ஆரணங்கே" (82) என்றும் விளித்திருக்கிறார்.

உடம்பில் உயிர் இருக்கும்போது ஆறு ஆதார கமலங்களில் எழுந்தருளியிருக்கும் தேவிக்கு அந்த உயிர் உடம்பை விட்டுப் போகும் நேரம் தெரியுமாகையால், 'தாயே, நீ சிறப்பான ஆதார கமலங்களில் இருப்பவள் ஆயிற்றே; உடம்போடு உயிர் உறவு அறும்போது நீ உடனே வந்து அருள் செய்யலாமே!' என்று எண்ணி அந்த நிலையைக் குறித்து அம்பிகையை அழைக்கிறார்.

## சிறக்கும் கமலத் திருவே!

'என் உயிரும் உடம்பும் உறவற்றுப் போகும் சமயம் எனக்குத் தெரியாது. "அந்தச் சமயத்தில் வந்து கூப்பிடு, வருகிறேன்" என்றால் அப்போது என் அறிவு மயங்கி நிற்கும். அப்போது உன்னை அழைக்க முடியாது. ஆகையால் உடம்போடு உயிர் ஒட்டிக் கிடக்கும் இந்தச் சமயத்தில், என் அறிவு தெளிவாக உள்ள இந்த நிலையில், என் விண்ணப்பத்தைச் சமர்ப்பித்துக் கொள்கிறேன்' என்ற குறிப்போடு அம்பிகையிடம் வேண்டுகோளை விடுக்கிறார்.

'நீ மாத்திரம் வந்தால் போதாது. நின் துணைவராகிய சிவபெருமானுடன் வந்து அநுக்கிரகம் பண்ண வேண்டும்' என்று பிரார்த்திருக்கிறார். ஒருவருக்கு இருவராக வந்தால் பாதுகாப்பு உறுதிப்படும் அல்லவா? இருவரும் வேறு அல்லர். ஆனாலும் சிவமும் சக்தியுமாக இருக்கிறார்கள். அவ்விருவருமே வந்தால் நிச்சயமாக நன்மை கிடைக்கும்,

நின் துணைவரும் நீயும்....வரல் வேண்டும்.

இவ்வாறு இறைவனும் அம்பிகையும் சேர்ந்து வந்து அருள் செய்யவேண்டும் என்று பல இடங்களில் இவ்வாசிரியர் சொல்கிறார். காமேசுவரனும் காமேசுவரியுமாக என்றும் பிரியாது இணைந்திருப்பவர்களாதலின் அவர்களைப் பிரிக்காமல் இணையாகவே வர வேண்டுகிறார்.

''புனிதரும் நீயும்என் புந்திஎந் நாளும்
பொருந்துகவே'' (4)

''இறைவரும் நீயும்....வெளிநிற்கவே''(18)

''உமையும் உமையொரு பாகனும்
ஏக உருவில் வந்திங்கு
எமையும் தமக்கன்பு செய்யவைத்தார்''(31)

''பூங்குவளைக் கண்ணியும் செய்ய
கணவரும் கூடி... வந்து.''(41)

அறிவு மறந்து உயிர் பிரியும் சமயத்தில் அம்பிகை தன் திருவடியை அவர் சென்னியில் வைக்க வேண்டுமாம். பிறகு சிவானந்த அநுபவமாகிய உறக்கத்தைத் தர வேண்டுமாம், அம்பிகை மோட்ச சாம்ராஜ்யத்தைத் தருகிறவள். 'துறக்கம் தருபவளாகிய நின் சேவடியைச் சென்னியில் வைக்க உன் துணைவருடன் எழுந்தருள வேண்டும்' என்று வேண்டுகிறார்.

நின் சேவடி சென்னி வைக்கத்
துறக்கம் தரும் நின் துணைவரும்
நீயும்.......வரல் வேண்டும்.

முதலில் அம்பிகையின் திருவடி தீட்சை பெற்றால் தெளிவு பிறக்கும்; பிறகு பேரானந்தப் பெருவாழ்வு உண்டாகும்; எல்லாம் மறந்த நிலையை அடையலாம்.

அவஸ்தைகள் ஐந்து; ஜாக்கிரம், சுவப்னம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பன அவை. நாம் மூன்று அவஸ்தைகளை அடைந்து வருகிறோம். விழிப்புடன் இருக்கும் நிலை ஜாக்கிரம்; உறங்கும்போது கனவு உண்டாகும் நிலை சுவப்னம்; விழித்த நிலையில் உடம்பும் மனமும் தொழிற்படும்; கனவு நிலையில் உடம்பு தொழிற்படாது; உள்ளம் மட்டும் தொழிற்படும். மனமும் தொழிற்படாமல் உள்ளது மூன்றாவது அவஸ்தையாகிய சுஷுப்தி; அதைச் சுழுத்தி என்று தமிழ்ப்படுத்திச் சொல்வது வழக்கம். நாலாவது அவஸ்தைக்குத் துரியம் என்று பெயர். அது மயக்கம் போன்ற நிலை. அதற்கும் அப்பாற்பட்டது துரியாதீதம்.

இந்த அவஸ்தைகளில் உயர்ந்த நிலைகள் உண்டு; தாழ்ந்த நிலைகளும் உண்டு, சுத்தாவஸ்தை, அசுத்தாவஸ்தை என்று அவற்றைச் சொல்வார்கள். இறைவனிடம் ஈடு பட்டுத் தியானம் புரிந்து பயிற்சி பண்ணுகிறவர்கள் சுத்தாவஸ்தைகளை அடைவார்கள். நாம் இயற்கையாக அடைகின்ற அவஸ்தைகள் அசுத்த அவஸ்தைகள்.

அம்பிகையின் அருள் கிடைத்தால் எல்லாவற்றுக்கும் மேலானதும் எல்லாம் ஒழிந்ததும் ஆகிய துரியாதீத நிலை கிடைக்கும். அது, எல்லாம் மறந்து நீடிக்கும் உறக்கம் போன்றது. நிர்விகல்ப சமாதிநிலையே சுந்தாவஸ்தையில்

துரியம்; அதற்கும் மேற்பட்ட இன்பநிலை துரியாதீதம். அந்த நிலை அம்பிகை நம் சென்னியில் திருவடி வைப்பதன் பயனாகக் கிடைக்கும். "அதைத் தர நீ எழுந்தருள வேண்டும்" என்கிறார் இந்தப் பக்தர்.

துரியம் அற்ற உறக்கம் தர வந்து
என்முன்னே வரல் வேண்டும்.

இவ்வாறு துரியம் கடந்த நிலையை, "துவாதசாந்தப் பெருவெளியில் துரியம் கடந்த பரநாத மூலத் தலத்து முளைத்தெழுமு முதலே" (மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், முத்தப்பருவம், 1) என்று மீனாட்சியம்மையைத் துதிக்கும் பொழுது எடுத்துச் சொல்கிறார், குமரகுருபர முனிவர். அந்த நிலை துவாதசாந்தப் பெருவெளியாம்; பரநாத மூலத் தலமாம். அங்கே அம்பிகை பரிபூரண வஸ்துவாக விளங்குகிறாளாம். மற்றோர் இடத்தில், "துரியங் கடந்த துவாத சாந்தப் பெருவெளிவளாகத் தொருபெருங் கோயில்" (மதுரைக் கலம்பகம், 109) என்று சுட்டுவார். அங்கே உண்டாகும் அநுபவத்தைப் பெற்ற அநுபூதிமான்களை, "குரவர் இருவரும் உற்றிடு துவாதசாந்தத்து ஒரு பெரு வெளிக்கே விழித்துறங்கும் தொண்டர்" (மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், அம்மானை,3) என்று பாராட்டுவார். அங்கே காமேசுவரனும் காமேசுவரியும் இருப்பதைச் சொல்கிறார். அங்கே உண்டாகும் இன்ப நிலையை, 'விழித்துறங்கும் நிலை, என்கிறார். அதையே அபிராமிபட்டர் 'துரியமற்ற உறக்கம்' என்கிறார். 'அத்தகைய உயர்ந்த இன்ப அநுபவ நிலை உண்டாகும்படி என் முன்னே வந்து காட்சி அளிக்க வேண்டும். அவ்வாறு வருவது எளிதன்று; முயற்சி செய்து வரவேண்டும் என்றாலும் எனக்காக, அந்த வருத்தத்தைப் பாராமல் வந்தருளவேண்டும்' என்று சொல்கிறார்.

என்முன்னே வரல்வேண்டும் வருந்தியுமே.

அப்படிச் சொல்லும் உரிமையைப் பெற்றவர் அவர்

சிறக்கும் கமலத் திருவே, நின்
சேவடி சென்னிவைக்கத்
துறக்கம் தரும்நின் துணைவரும்
நீயும் துரியம்அற்ற
உறக்கம் தரவந்து உடம்போடு
உயிர்உறவு அற்றுஅறிவு
மறக்கும் பொழுதுஎன்முன் னேவரல்
வேண்டும் வருந்தியுமே.

[அந்வயம்: சிறக்கும் கமலத்திருவே, உடம்போடு உயிர் உறவு அற்றுஅறிவு மறக்கும்பொழுது, நின் சேவடி சென்னி வைக்க, துரியம் அற்ற உறக்கம் தர, துறக்கம் தரும் நின் துணைவரும் நீயும் வருந்தியுமே என் முன்னே வரல் வேண்டும்.

சிறப்புள்ள ஆதார கமலங்களில் எழுந்தருளியிருக்கும் தேவி, அடியேனுக்கு (மரணாவஸ்தை உண்டாகி) உடம் போடு உயிருக்குள்ள உறவு அற்றுப்போய், அறிவு எல்லா வற்றையும் மறந்து மயங்கும் சமயத்தில், நின்னுடைய சிவப்பான திருவடியை அடியேனுடைய தலையில் வைத் தருளவும், துரியம் கடந்த உறக்க நிலையாகிய பேரானந்த அநுபவத்தைத் தந்தருளவும், மோட்சத்தைத் தருபவ ராகிய நின்னுடைய கணவராகிய சிவபெருமானும் நீயும், என்னிடம் வருவது வருத்தம் தருவதாக இருந்தாலும் அந்த வருத்தத்தை மேற்கொண்டேனும் அடியேன் முன்னே எழுந்தருளிக் காட்சி கொடுக்கவேண்டும்.

'நின் சேவடியைச் சென்னியிலே வைத்து வழிபட, அத்தகையவர்களுக்கு மோட்சத்தைத் தரும்' என்றும் கூட்டிப் பொருள் கொள்ளலாம். துறக்கம் தரும் என்பது நின் என்பதற்குரிய அடை. திருவே என்றார், 'மகாலக்ஷ்மி'

என்பது அம்பிகையின் திருநாமங்களில் ஒன்று ஆதலின். வருந்தியுமே-எவ்வாறேனும் முயன்று; எத்தகைய உழைப்பு வேண்டியிருந்தாலும் அதை ஏற்றுக்கொண்டு, 'அத்தகைய அருளைச் செய்வதற்கு அடியேனுடைய தகுதி இடம் கொடுக்காமல் இருக்கலாம்; ஆட்சி கொள்வதற்குரிய விதிகளைக் கடந்து சென்றால்தான் எனக்கு அருளைப் புரிய முடியும் என்றால், அந்த வருத்தத்தையும் மேற்கொண்டு எனக்கு அருளவேண்டும்' என்று பிரார்த்திக்கிறார்.]

இறக்கும் தருணத்தில் காட்சி தந்து அருள்புரிய வேண்டும் என்பது கருத்து.

இது அபிராமி அந்தாதியில் 89-ஆவது பாடல்.

# குறைவிலா நிறைவு

அன்றன்று பிச்சை வாங்கிப் பிழைக்கும் ஏழைக்குச் சேர்ந்தாற்போல் ஒரு மாதத்து உணவுக்கு வேண்டிய அரிசி முதலிய பொருள்கள் கிடைத்தால் எப்படி இருக்கும்? ஆனால் அந்த ஒரு மாதம் சுகமாக இருந்தவன் அடுத்த மாதம் பழையபடி பிச்சைக்குப் போகவேண்டியதுதான். மாதந் தோறும் ஒருவர் அவனுக்கு வேண்டியதைத் தருவதாக இருந்தால், அவனுக்கு வறுமை ஒழியும்; விடிவுகாலம் வரும். ஆனால் அதிலும்ஒருசங்கடம் இருக்கிறது. அப்படி வழங்குகிற வள்ளல் எப்போதும் செல்வம் உடையவராக இருக்க வேண்டும். இடையில் நொடித்துப் போனால் என்ன செய்வது? ஓர் ஏழை மற்றோர் ஏழையைக் காப்பாற்ற முடியுமா?

"அப்படி அவர் ஏழையாகிவிடுவாரா?" எனக் கேட்க லாம். செல்வம் நிலையாது என்பது உலகறிந்த இரகசியம். எவ்வளவோ பெரிய மன்னர்களெல்லாம் இப்போது சாமானிய மனிதராகிவிட்டார்கள். பெரிய வள்ளலாகிய குமணனே அரசை இழந்து காட்டில் இருந்தபோது அவனை நாடி வந்த புலவரிடம், "அந்த நாள் வந்திலை" என வருந் தினன். ஆகவே, ஒரு செல்வரிடம் இருக்கும் செல்வம் எப்போதும் நிலையாக இருக்கும் என நம்பக்கூடாது.

மற்றொரு சங்கடமும் இருக்கிறது. வழங்குகிற வள்ளல் மனிதப் பிறவி உடையவர்தாமே? அவர் இந்த ஏழை உள்ள

காலம் முழுவதும் வாழ்ந்து இவளைக் காப்பாற்றுவார் என்பது என்ன நிச்சயம்? அவர் திடீரென்று இறந்துபோனால் அவருடைய சொத்துக்கு உரிமை பெறுகிறவர்கள் அவர் செய்துவந்த தர்மங்களை அப்படியே செய்து வருவார்கள் என்று நம்ப முடியுமா?

அந்த வள்ளல், ஏழைக்கு என்றும் குறை வராதபடி நிலத்தைத் தானமாகக் கொடுத்தால் அவன் எப்பொழுதும் பயனடையலாம். அப்போதுகூட, நிலத்தை உழுது பயிரிட்டு அறுவடை செய்யவேண்டும். அந்தச் சிரமத்தை யும் கொடுக்காமல் ஒருவர் எப்போதும் உடனிருந்து வேண்டிய பொருள்களையெல்லாம் தந்துகொண்டே இருக் கிறார் என்று வைத்துக்கொள்வோம். அவர் எப்போதும் உள்ளவர், எப்போதும் செல்வம் உடையவர், அதை என்றும் இழக்காதவர் என்றால் அவருடைய உதவியை என்றும் நம்பலாம்; எளிதாக நன்மை பெறலாம்.

அத்தகைய குறைவற்ற வாழ்வு தமக்குக் கிடைத் திருப்பதாக அபிராமி பட்டர் கூறுகிறார்.

அவருக்கு வேண்டியவற்றையெல்லாம் வழங்கும் காமதேனுவாக இருக்கிறாள் அம்பிகை. அவள் எப்போதும் அவருடைய உள்ளத்தில் இருக்கிறாளாம். 'அப்படி இருக்கும் போது எனக்கு என்ன குறை?' எனக் கேட்கிறார்.

அம்பிகை எத்தகையவள்? மிகச் சிறந்த போக வாழ் வைப் பெற்றிருக்கும் இந்திராதி தேவர்களுக்கே உபகாரம் செய்தவள். அவர்கள் சாவா மூவாப் பெருவாழ்வு பெற வேண்டும் என எண்ணினார்கள். எவ்வளவு செல்வம் இருந்தும் என்ன பயன்? அவற்றை அநுபவிக்க நீண்ட ஆயுள் வேண்டாமா? ஆகவே தேவர்களும் அசுரர்களும் சேர்ந்து பாற்கடலைக் கடைந்தார்கள். எளிதில் அமுதம் வரவில்லை. எத்தனையோ தடைகள் எழுந்தன. பிறகு அமுதம்

வந்தது. அப்போது மிகப் பெரிய சங்கடம் வந்து குறுக்கிட்டது. அமுதம் உண்பதற்கு அசுரர்கள் வந்து போட்டியிட்டார்கள். அவர்கள் அறுபத்தாறு கோடி பேர். அவர்களும் சேர்ந்து கடைந்தவர்கள் அல்லவா? ஆகவே உரிமை கொண்டாடினார்கள். அவர்களும் அமுதத்தை உண்டு சாகாமல் இருந்துவிட்டால் தேவர்களுக்கு நித்தியமும் தொல்லைதான். என்ன செய்வது?

அவர்களுடைய இன்னலைப் போக்க அம்பிகை மோகினியாக எழுந்தருளினாள். திருமாலே மோகினிக் கோலம் தரித்து வந்ததாகப் புராணங்கள் கூறும். திருமாலும் அம்பிகையின் அம்சமாதலின் அம்பிகையே மோகினியாக வந்து அமுதம் வழங்கினாள் என்று தேவிபரமான நூல்கள் சொல்லும். "அமரர் வாழ்வு வாழ்வாக அவுணர் வாழ்வு பாழாக அருளும் மோகினியாக அமுதபானம் ஈவாளே" (107) என்று தக்கயாகப்பரணி, அம்பிகையே மோகினியாக எழுந்தருளி வந்து அசுரர்களை மயக்கி, அமரர்களுக்கு அமுதத்தை வழங்கினாள் என்று சொல்கிறது.

உலகில் உள்ளவர்க்கு வேண்டிய பொருள்களை நல்கும் தேவர்கள் பேராற்றல் வாய்ந்தவர்கள்; பெரும் போகம் துய்ப்பவர்கள். அவர்களுடைய குறையைப் போக்க மோகினியாக வந்து பாற்கடலில் தோன்றிய அமுதத்தை வழங்கினவள் என்றால் அவள் செய்யும் உதவியின் பெருமை எவ்வளவு பெரிது என அறிந்து கொள்ளலாம்.

விண் மேவும் புலவருக்கு
விருந்தாக வேலை மருந்தானதை நல்கும்
மெல்லியலே!

'அத்தகைய பெருமாட்டி எனக்குக் குறைவிலா நிறைவை வழங்கினாள்' எனச் சொல்ல வருகிறார்.

அம்பிகை பல வகையான தாமரைகளில் எழுந்தருளியிருக்கிருள் என்பதைப் பல பாடல்களில் அபிராமிபட்டர் முன்பு சொல்லியிருப்பதைப் பார்த்திருக்கிறோம். அவள் அநாதி காலமாக ஒளி வளர் தாமரையில் வீற்றிப்பதனுல் அவளைப் 'பத்மாஸனு' என லலிதா சகசிர நாமம் கூறும். அது தேவிக்குப் பழைய வாச ஸ்தானம். அந்த அற்புதமான தாமரையில் வீற்றிருப்பவள் இப்போது வேறு ஒரு தாமரையில் வந்து புகுந்தாள். சில காலம் இருந்தாள் என்று சொல்வது? அங்கேயே தங்கிவிட்டாள்; தன்னுடைய பழைய இருப்பிடமாகிய தாமரையாகவே எண்ணித் தங்கி விட்டாள்.

அந்தத் தாமரை எது? அபிராமிபட்டருடைய உள்ளமாகிய தாமரைதான் அது. அம்பிகை இருக்கும் இடம் எங்கே என்று தேடி அவளை அடைய அவர் வருந்தவில்லை. அம்பிகையே அவருடைய மனம் என்னும் தாமரையை நாடி வந்து குடிபுகுந்து விட்டாள். அவள் கருணையை என்னவெனச் சொல்வது!

அவள் எழுந்தருளியிருக்கும் தெய்விக ஒளித்தாமரை எங்கே? இந்த மனத்தாமரை எங்கே? ஞானமணம் வீசி ஆனந்தத் தேன் பில்கி ஒளிவிடும் தாமரையில் இருப்பவள், எவ்வளவோ வகையான மாசுகளை உடைய மனத் தாமரையில் வந்து வீற்றிருக்கிருள்! இதைவிட வியப்பு உண்டாக்கும் நிகழ்ச்சி ஏது? அவளுடைய அதிசயமான கருணையே அதற்குக் காரணம். தன்னுடைய பழைய இருப்பிடத்தையே அமள் மறந்து விட்டாள் போலும்! இதையே அந்த இருப்பிடமாகக் கொண்டு விட்டாள்.

வருந்தா வகை என் மனத்
தாமரையினில் வந்து புகுந்து
இருந்தாள், பழைய இருப்பிடமாக

எனப் பாடுகிருர் அபிராமிபட்டர். ''அருணம்புயத்தும் என் சித்தாம்புயத்தும் அமர்ந்திருக்கும், தருணம்புயமுலைத் தையல் நல்லாள்'' (58) என முன்பும் சொல்லியிருக்கிருர். வருந்தா வகை என்பது, நான் மிகவும் சிரமப்பட்டுத் தேடிச் சென்று வருத்தமுருதபடி எனப் பொருள் கொள்வதற் குரியது. அதற்கு மற்ருெரு பொருளும் சொல்லலாம்; 'என் மனத்தில் பலவகைக் கவலைகளும் வருத்தங்களும் இருந்தன; அவற்ருல் நான் வருந்தாமல் இருக்கும் பொருட்டு என் மனத்திலே வந்து அமர்ந்து கொண்டாள்' எனவும் பொருள் கொள்ளலாம்.

அம்பிகையின் திருவடி மட்டும் அன்றி, அவளே வந்து உள்ளத்தில் குடிகொண்டு விட்டமையால் எந்த விதமான வருத்தங்களும் இல்லாமற் போயின.

அம்பிகை குறைவிலா நிறைவாக இருப்பவள். உலகில் ஒரு பொருளால் குறையுடையவன் அதை மிகுதியாகப் படைத்த வேறு ஒருவனிடம் போய்க் கேட்கிருன். அவன் தன்னிடம் கேட்டவனுக்கு ஓரளவு பொருள் தருவான். ஆனல் தான் தன் குறையைப் போக்கிக்கொள்வதற்குத் தன்னிலும் சிறந்த செல்வனை நாடுவான். ஒரு குறைவும் இல்லாமல் பூரண நிறைவோடு இருப்பவர் யாரும் இல்லை. ஏதாவது குறை இருக்கும். குறையிருந்தால் கவலையும் ஆசையும் இருக்கும். அதுமட்டுமல்ல. மனிதனுக்கு எத்தனையோ பொருள்கள் வேண்டியிருக்கின்றன. எல்லா வற்றையும் ஒருசேரக் கொடுக்கிற செல்வன் யாரும் இல்லை. நிரம்பப் பொருள் கொடுத்தால் எல்லா வகையான பண்டங் களையும் பெறலாம் என்று தோன்றும். மனிதனுக்கு வேண்டிய எல்லாவற்றையும் பொருளினல் வாங்கிவிட முடியாது. ஒருவருக்குப் புத்திரப்பேறு இல்லை; பணம் கொடுத்தால் பிள்ளையைப் பெற முடியுமோ? ஒருவன் ஞானம் இல்லாமல் இருக்கிருன்; பணத்தைக் கொண்டு விலைக்கு ஞானத்தை வாங்கிவிட முடியுமா? ஆகவே

பணத்தால் எல்லாவற்றையும் பெற்று விடலாம் என்பது உண்மையாகாது.

வேண்டியவற்றை யெல்லாம் மனிதன் பெற்றுவிட முடியும் என்றால், உலகில் மனக்குறை உள்ளவர்கள் மிகக் குறைவாகவே இருப்பார்கள். ஆனால் உலகில் மனிதர்கள் எல்லோருமே குறை உடையவர்களாகத்தான் இருக்கிறார்கள். செல்வம் இருக்கும்; கல்வி இராது. கல்வி இருக்கும்; தேக ஆரோக்கியம் இராது. ஆகவே நம்முடைய குறை நீரவேண்டுமானால் குறையுடைய மனிதரால் தீராது.

குறைவிலா நிறைவாகிய அம்பிகை ஒருத்திதான் எது கேட்டாலும், எவ்வளவு கேட்டாலும், எப்போது கேட்டாலும் வழங்கும் ஆற்றலும் கருணையும் உடையவள். அவள் மனத்தில் வந்து குடிபுகுந்த பிறகு என்ன குறை வரப் போகிறது? எது வேண்டுமானாலும் கேட்பதற்கு முன்னே மனமறிந்து தந்துவிடுவாள். வேண்ட வேண்டிய அவசியமே இல்லை. அவளே நமக்கு இது வேண்டும் என்று உணர்ந்து வழங்குவாள்.

"வேண்டத் தக்கது அறிவோய் நீ"

என்று திருவாசகம் சொல்கிறது அல்லவா?

ஆகவே, 'அம்பிகை என் உள்ளத்தாமரையில் வந்து குடிபுகுந்து விட்டாள். அதனால் எனக்கு வேண்டிய பொருள் எதுவானாலும் கிடைக்கும்; எனக்கு வந்து சேராத பொருள் யாதும் இல்லை' என்று மனநிறைவோடு பேசுகிறார், இவ்வன்பர்.

இனி எனக்குப்
பொருந்தா தொருபொருள் இல்லை.

சங்கநிதி, பதுமநிதி, கற்பகம், காமதேனு, சிந்தாமணி என்பனவற்றையெல்லாம் தன் இல்லத்தில் வைத்திருப்பவ

னுக்கு எந்தப் பொருள்தான் கிடைக்காது? அவைகூட முத்தியின்பத்தைத் தரமுடியாது. அம்பிகை அந்தப் பொருள்களைவிட மேலானவள். அவள் முத்தியின்பத்தை யும் தருபவள். அவள் உள்ளத்தில் வீற்றிருக்கும்போது கிடைக்காத பொருளும் உண்டோ?

வருந்தா வகைஎன் மனத்தா
மரையினில் வந்துபுகுந்து
இருந்தாள் பழைய இருப்பிட
மாக; இனிஎனக்குப்
பொருந்தா தொருபொருள் இல்லை;விண்
மேவும் புலவருக்கு
விருந்தாக வேலை மருந்தா
னதைநல்கும் மெல்லியலே!

[வானுலகத்தில் வாழும் தேவர்களுக்கு விருந்தாகப் பாற்கடலில் தோன்றிய அமுதத்தை வழங்கிய கோமளை யாகிய அபிராமி, அடியேன் தன்னை நாடித் தேடி வந்து வருந்தாதபடி என் இருதய கமலத்தில் தானே எழுந்தருளி வந்து புகுந்து, அதுவே பழைய இருப்பிடமாக எண்ணும்படி வீற்றிருந்தாள். இனிமேல் எனக்குக் கைவராத பொருள் ஒன்றும் இல்லை.

வருந்தாவகை-அடியேன் ஜனன மரணங்களில் வருந்தாதபடி என்றும் சொல்லலாம். இனி-இனிமேல். பொருந்தாதது ஒரு பொருள் என்பது பொருந்தாதொரு பொருள் என வந்தது; தொகுத்தல் விகாரம். புலவர்-தேவர். விருந்து-புதுமையும் ஆம். வேலை-கடல்; இங்கே பாற்கடல். மருந்து-அமுதம். மெல்லியல்-மெல்லிய இயல்புடையவள்; கோமலாங்கி,கோமலாகாரா என்பவை அம்பிகையின் திருநாமங்கள்.]

அம்பிகையைத் தியானம் பண்ணியதால் குறைவிலா நிறைவு உண்டாயிற்று என்பது கருத்து

இது அபிராமி அந்தாதியில் 90-ஆவது பாட்டு.

# அடியார்க்கு அடியார் பெறும் பயன்

மகளிருக்கு எந்த எந்த அவயவங்கள் பெருத்திருக்க வேண்டும், எவை எவை சிறுத்திருக்க வேண்டும் என்று சாமுத்திரிகா லட்சண நூல் சொல்கிறது. இந்த நாட்டில் எந்த மொழியில் பெண்களை வருணித்தாலும் அவர்கள் இடை மிகச் சிறியதென்றும், நகில்கள் மிகப் பெரியன வென்றும் புலவர்கள் கூறுவார்கள். எல்லா மங்கையரிலும் மேலான அங்க லட்சண நிறைவுடையவள் அம்பிகை. அவள் ஸர்வாங்க ஸௌந்தரி; 'அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி' என்று அபிராமிபட்டர் பாடுவார்.

சின்னஞ்சிறு குழந்தையின் உள்ளத்தோடு தாயைத் தரிசிக்கிறவர் அவர். அன்னையுடன் நெருங்கிப் பழகும் இளங்குழந்தை அவளுடைய அங்கங்களைப் பார்க்கையில் விகார எண்ணமே எழாது. ஞானியர் அப்படித்தான் உலகத்து மாதர்களைப் பார்ப்பார்கள். குழந்தைத் தன்மையை உடையவர்கள் ஞானிகளும் பக்தர்களும்.

இப்போது அபிராமிபட்டர் அன்னையின் வடிவத்தைத் தியானிக்கிறார். அவள் இடையைக் காண்கிறார். அது மின்னல்போல மிக மிக மெல்லியதாக இருக்கிறது. "மின்னேரிடையாள்" என்று அம்பிகையைத் தேவாரத்தில் பாடுகிறார்கள் அருளாளர்கள். மிகவும் மென்மையும் நுட்பமும் பொருந்திய இடை அது.

மெல்லிய நுண் இடை, மின் அனையாளை.

இனி அன்னையின் நகில்களைச் சொல்ல வருகிறார். காமேசுவரனும் காமேசுவரியும் ஒன்றி இணைகிறவர்கள். சிவ பெருமான் தவயோகியைப் போன்ற தோற்றம் உடையவன்; விரித்த சடையை உடையவன். "தாழ்சடைப் பொலிந்த அருந்தவத் தோற்கே" என்ற புறநானூறு அவனுடைய சடையையும் தவக்கோலத்தையும் எடுத்துச் சொல்கிறது.

உலகத்தில் உள்ள தவமுனிவர்களுக்கும் அவனுக்கும் இடையே ஒரு பெரிய வேறுபாடு இருக்கிறது. சடா பாரத்தையுடைய தவமுனிவர்கள் பெண்ணாசையை நீத்த வர்கள்; பெண்கள் பக்கமே போகாதவர்கள். இங்கே சிவபெருமான் சடையை அணிந்து தவக்கோலம் பூண்டா லும் அவன் ஒரு பெண்ணோடே இருக்கிறான்; அம்பிகையுடன் இருக்கிறான். "மங்கையோ டிருந்தே யோகுசெய் வானை" என்று அவனைப் பாடுவார்கள். அந்த மங்கையை அவன் அணைந்து கொள்வான்; அவள் திருமார்பைத் தழுவுவான்; அவளுடைய நகில்களைத் தழுவி இன்புறுவான். அந்த நகில்கள் பொன்நிறம் பூத்து ஒளிரும். மென்மையும் பொன்னிறமும் உள்ள அந்த நகில்கள் அம்பிகையின் அழகை மிகுதிப்படுத்துகின்றன.

விரிசடையோன்
புல்லிய மென்முலை பொன் அனையாளை.

இத்தகைய பெருமாட்டியை வழிபட்டால் உண்டாகும் பயன் மிகப் பெரிது. மோட்ச சாம்ராஜ்யமே கிடைக்கும். அவளுடைய திருவடியைப் புகலாக அடைந்தவர்கள் பெறும் பேறு இருக்கட்டும். அந்த அடியார்களுக்கு அடியார்களாக இருக்கும் அவர்களுக்கு எத்தனை பெரிய பதவி கிடைக்கும், தெரியுமா?

ஒரு பெரிய பணக்காரர் வீட்டில் பல வேலைக்காரர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் அந்தச் செல்வர்

நிறையச் சம்பளம் கொடுக்கிறார்; அவ்வப்போது அன்பளிப்புகள் வழங்குகிறார். அவர் வீட்டிலுள்ள தோட்டக்காரனுக்கு 500 ரூபாய் சம்பளம். அவன் பெரிய வீட்டைக் கட்டிக் கொண்டிருக்கிறான். அவன் வீட்டில் வேலை செய்யும் வேலைக்காரிக்குத் தீபாவளிக்கு நல்ல புடைவை எடுத்துத் தருகிறான். இந்தச் சிறப்பெல்லாம் முன் சொன்ன செல்வரின் மதிப்பை எடுத்துக்காட்டுபவை. அந்தச் செல்வரைப்பற்றிப் பேசும் போது, "அவருடைய தோட்டக்காரன் வீட்டு வேலைக்காரிக்குத் தீபாவளிக்குப் பட்டுப் புடைவை கிடைக்கிறதையா!" என்று சொல்வார்கள்.

அதுபோல இங்கே அபிராமிபட்டர் சொல்கிறார். 'அம்பிகையின் அடியார்களுக்கு அடியார்களே பெரிய பதவிகளை அடைவார்கள்' என்கிறார். அப்படியானால் அடியார்கள் எவ்வளவு சிறந்த பதவியை அடைவார்கள் என்பதை நாம் ஊகித்துக் கொள்ள வேண்டும்.

அடியார்கள் என்ன செய்கிறார்கள்? வாய் படைத்த பயன் அம்பிகையைப் புகழ்வதுதான் என்று உணர்ந்தவர்கள் அவர்கள். யார் ஒரு செயலை நன்றாகச் செய்து முடிக்கிறார்களோ அவர்களைப் பாராட்டிப் புகழ்வது வழக்கம். யார் ஈகையிற் சிறந்தவர்களோ அவர்களுக்குப் புகழ் உண்டாகும். "ஈவார்மேல் நிற்கும் புகழ்" என்பது குறள். உலகத்திலும் சரி, தேவலோகத்திலும் சரி, யார் எந்தக் காரியம் செய்தாலும், அவ்வாறு அவர்கள் செய்வதற்குரிய ஆற்றலை அளிப்பவள் பராசக்தி. அவள் ஆற்றல் அளிக்காவிட்டால் யாராலும் ஏதும் செய்ய முடியாது. "சிவமெனும் பொருளும் ஆதி சத்தியொடு சேரின் எத் தொழிலும் வல்லதாம், அவள் பிரிந்திடின் இயங்குதற்கும் அரிதாம்" என்று சௌந்தரியலகரி சொல்கிறது. அப்படியே மனிதரும் தேவரும் படைத்த பொருள்கள் யாவும்

அம்பிகை தன் பெருங் கருணையினால் வழங்கியவை. எல்லாச் செயல்களுக்கும் மூலகாரணமாக இருப்பதனாலும், எல்லோருக்கும் எல்லாவற்றையும் வழங்குவதனாலும் பாராட்டும் புகழும் உண்மையில் அவளையே சேர்வதற்குரியன. 'எல்லாம் அம்பிகையின் செயல்' என்றும், 'நாம் அடைந்தவை யாவும் அன்னை அருளியவை' என்றும் உணர்ந்தவர்கள் அடியார்களாதலின் அவர்கள் அவளையே புகழ்கிறார்கள்.

அவர்கள் வாயால் புகழ்ந்து உடம்பால் வணங்குகிறார்கள்; பூஜை செய்கிறார்கள். வேதம் இன்னபடி அம்பிகையைத் தொழவேண்டும் என்று சொல்கிறது. அவளை நன்கு அறிய முடியாத சிறியவர்களாகிய நமக்கு வழிகாட்டுவது வேதம். அதுதான் அம்பிகையை அடையும் நெறியை நமக்குக் காட்டுகிறது. அது சொல்லியவண்ணம் அடியவர்கள் அம்பிகையைத் தொழுகிறார்கள்.

புகழ்ந்து, மறை சொல்லிய வண்ணம்
தொழும் அடியாரை.

மிகப் பெரியவர்களாகிய அடியவர்களைப்போல எல்லோரும் ஆக முடியுமா? பழக முடியுமா? மறையை அறிந்து, அது எவ்வாறு வழிபடவேண்டுமென்று சொல்கிறதோ அதைத் தெரிந்து, அன்னையை உபாசனை பண்ணுவது எளிய காரியம் அன்று. அப்படியானால் மற்றவர்கள் உய்ய வேண்டாமா? அதற்கு வழி உண்டு.

கண்ணில் காண முடியாத அம்பிகையின் பெருமையை அறிவது அரிய காரியம். என்றாலும் அவள் பெருமையை அறிந்து வழிபட்டு அவள் அருளைப் பெற்ற அடியார்களை நாம் அணுகலாம். அவர்கள் இந்த உலகத்தில் நம்மோடு

வாழ்கிருர்கள். அவர்களை வழிபட வேண்டும் என்ற அன்பு இருந்தால் போதும். அவர்களை எளிதில் அணுகலாம். அவர்களோடு பேசலாம். அவர்கள் திருவுருவத்தைக் கண்டு மகிழலாம். அவர்கள் திருவடியை வணங்கலாம். அடியார்க்கு அடியார் ஆகலாம்.

அப்படி ஆன அடியார்க்கு அடியார் மறுமையில் என்ன பயன் அடைவார்கள், தெரியுமா? தேவபதவி என்ருலே மிகப் பெரிது. எத்தனையோ புண்ணியங்களைச் செய்து தேவராக வேண்டும். தேவர்களுக்கெல்லாம் தலைவன் இந்திரன். முப்பத்து முக்கோடி தேவர்களுக்கு அரசன் அவன். வாயு, வருணன், அக்கினி ஆகியவர்கள் அவன் ஏவல்வழி நடப்பவர்கள். நூறு யாகம் செய்து நிறைவேற்றிருல்தான் இந்திரன் ஆகலாம். நான்கு கொம்புகளை யுடைய ஐராவதம் என்ற வெள்ளை யானை இந்திரனுடைய வாகனம். அவன் அதன்மேல் பவனி வந்தாளுல் சுற்றிச் சூழத் தேவலோகத்து வாத்தியங்கள் முழங்கும். தேவர்கள் ஆரவாரிப்பார்கள். முனிவர்கள் ஆசி கூறுவார்கள். அரம்பையர் நடனமாடுவர். எல்லாப் போகங்களிலும் சிறந்த போகம் இந்திர போகம்.

ஒரு நாட்டுக்கு அரசனுக இருந்தால் எத்தனை மதிப்பும் போகமும் கிடைக்கின்றன! தேலோகத்துக்கே அரசன் என்ருல் அவனுடைய பதவிக்கு ஈடும் இல்லை; எடுப்பும் இல்லை.

அந்தப் பதவி அம்பிகையின் அடியவர்களைத் தொழும் அடியவர்களுக்குக் கிடைக்குமாம், அம்பிகை தன்னை வணங்கும் அடியவர்களுக்கு மோட்ச சாம்ராஜ்யத்தை அருள்வதோடு, அந்த அடியவர்களைத் தொழும் அடியவர் களுக்கும் இந்திர பதவியை வழங்குவாளாம். செல்வர் தீபாவளிக்குத் தம் கணக்குப்பிள்ளைக்கு ஆடைகள் வாங்கி வழங்குவதோடு அந்தக் கணக்குப்பிள்ளை வீட்டு வேலைக் காரனுக்கும் ஆடை வழங்குவதுபோல இருக்கிறது இது.

அடியாரைத் தொழும் அவர்க்குப்
பல்லியம் ஆர்த்து எழ வெண்பகடு
ஊரும் பதம் தருமே.

அடியார்க்கு அடியார் பெறுகிற பதவியே இதுவானால், அவனையே தொழும் அடியார்கள் பெறுவது இதைவிடப் பெரிய பதவி. அதுதான் எல்லாவற்றிற்கும் மேலான மோட்ச பதவி. இதிலிருந்து அதை ஊகித்துக்கொள்ளலாம்.

மெல்லிய நுண் இடை மின் அனை யாளை,
விரிசடையோன்
புல்லிய மென்முலை பொன்அனை யாளைப்
புகழ்ந்துமறை
சொல்லிய வண்ணம் தொழும்அடி யாரைத்
தொழும்அவர்க்குப்
பல்இயம் ஆர்த்துஎழ வெண்பகடு ஊரும்
பதம்தருமே.

[மென்மையான நுண்ணிய இடை மின்னலைப்போல உள்ள தேவியை, விரித்த சடையை உடைய சிவபிரான் அன்புடன் தழுவிய மென்மையான தகில்கள் பொன்னைப் போன்ற பொலிவுடையனவாக இருக்கும் அம்பிகையை வாக்கினால் புகழ்ந்து, வேதம் சொல்லிய முறைப்படி உபாசனை செய்து விளங்கும் பக்தர்களை அணுகித் தொழும் அடியவர்களுக்குப் பல வாத்தியங்களும் முழங்கிக் கிளர, வெள்ளை யானையாகிய ஐராவதத்தின்மேல் ஏறி வரும் இந்திர பதவியை அவள் அருள்வாள்.

புல்லிய-தழுவிய. மறை சொல்லியவண்ணம் தொழுவதை முன்னே 79-ஆம் பாடலிலும், "வேதம் சொன்ன, வழிக்கே வழிபட நெஞ்சுண்டு" என்று சொல்லியிருக்கிறார். இயம்-வாத்தியம். ஆர்த்து-ஒலித்து. எழ-ஓசை எழுப்ப. பகடு-யானை. பதம்-பதவி. தரும்-தருவாள். அவள் தருவாள் என்று எழுவாயை வருவித்து முடிக்கவேண்டும்.]

அம்பிகையின் அடியார்க்கு அடியாரும் மேலான பதவி பெறுவர் என்பது கருத்து.

அபிராமி அந்தாதியின் 91-ஆம் பாடல் இது.

# மாறாத நிலை

ஒருவன் தன் வீட்டின் பின்பக்கத்தில் ஓரிடத்தில் கிணறு வெட்டத் தொடங்கினான். இருபதடி வெட்டினான். அப்பொழுது ஒரு நண்பன் வந்து, "இங்கே வெட்டக் கூடாது; இது குத்தலான இடம்" என்று சொன்னான். உடனே வேறு ஓர் இடத்தில் கிணறு வெட்டத் தொடங்கினான். அங்கும் இருபதடி வெட்டினான். அப்பொழுது மற்றொருவன் வந்து, "இந்த இடம் சரியான கோணம் அல்ல; இங்கே வெட்டினால் குடும்பத்துக்கு ஆகாது" என்றான். மறுபடியும் வேறு இடத்தில் வெட்டத் தொடங்கினான். இப்படியே ஒவ்வோர் இடத்திற்கும் ஒவ்வொருவன் ஒவ்வொரு குறை சொல்ல, ஆறு இடங்களில் வெட்டினான். இன்னும் தண்ணீர் கண்டபாடில்லை.

பக்கத்து வீட்டுக்காரன் 35 அடி வெட்டினான், தண்ணீர் வந்து விட்டது. முதலில் சொன்னவன் 120 அடி வெட்டியும் தண்ணீர் கிடைக்கவில்லை. காரணம் என்ன? அவன் ஒரே இடத்தில் வெட்டவில்லை. வெவ்வேறு இடங்களில் அரை குறையாக ஆயிரம் அடி வெட்டினாலும் அவனுக்குத் தண்ணீர் கிடைக்காது. மற்றவனோ ஒரே இடத்தில் வெட்டினமையால் தண்ணீர் கிடைத்தது.

இடைவிடாமல் ஒருமுகமாக முயற்சி செய்தால்தான் நல்ல பயனைப் பெறலாம். மனிதன் செய்யும் எல்லா வகையான முயற்சிகளுக்கும் இது பொருந்தும். தெய்வத்தை

உபாசனை செய்யும் விஷயத்தில் இந்த ஒருமைப்பாடு மிகவும் அவசியமானது. எல்லா வடிவங்களிலும் ஒரே கடவுள்தாம் இருக்கிறார் என்றாலும், குறிப்பிட்ட மூர்த்தியை இடைவிடாமல் உபாசனை செய்தால்தான் பயன் கிடைக்கும். பூமிக்கு அடியில் எங்கே வெட்டினாலும் தண்ணீர் வருமானாலும் குறிப்பிட்ட ஓரிடத்தில் விடாமல் வெட்ட வேண்டும்,

> "ஒன்றே நினைந்திருந்தேன்; ஒன்றே துணிந்
> தொழிந்தேன்
> ஒன்றேஎன் உள்ளத்தி னுள்அடைத்தேன்"

என்று காரைக்கால் அம்மையார் சொல்கிறார்.

அபிராமிபட்டர் அவ்வாறு அம்பிகையை உபாசனை பண்ணியவர். 'பல மரம் கண்ட தச்சன் ஒரு மரமும் வெட்டான்' என்பது பழமொழி. அபிராமிபட்டர் ஒரே மரத்தைக் கண்டவர். அந்தக் கற்பக மரந்தான் அம்பிகை.

'பிடித்தாலும் புளியங்கொம்பைப் பிடிக்கவேண்டும்' என்பார்கள். அப்படி, சக்தியுள்ள தெய்வத்தைப் பற்றிக் கொண்டவர் அவர். சக்தி அளிக்கும் தெய்வம் அம்பிகை. அவளே எல்லாச் சக்திகளுக்கும் மேலான சக்தி; பராசக்தி அல்லவா?

ஆண்டுக்கு நூறு கலம் விளையும் நன்செய் நிலத்தைப் பெற்று அதில் உழுது பயிரிட்டு விளைவு எடுத்தவன், அதை விட்டுவிட்டு அற்பமான புன்செய் நிலங்களைக் கொள்ளுவானா? அபிராமிபட்டர் தாம் பற்றிய அன்னை பல பெரியவர்களால் ஆசிரயிக்கப்பெற்ற பெருமாட்டி என்பதை நன்கு உணர்ந்தவர். அந்த உணர்வினால் அவளை வழிபட்டார். சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்னும் மூன்று தொழில்களையும் செய்பவர்கள் பிரம்ம விஷ்ணு ருத்திரர்கள். அவர்களைத் திரிமூர்த்திகள் என்றும், மும்முதற் கடவுளர் என்றும் கூறுவர்; "மும்முதற் கடவுளும் அடித்தொழும் பாற்ற" என்றுகுமரகுருபர சுவாமிகள் அவர்களைக்குறிப்பார்.

அந்த மூன்று பெரிய மூர்த்திகளும் அம்மையை வழிபடுகிறார்கள். அம்பிகை முழுமுதற் கடவுள்; மும்முதற் கடவுளுக்கு மேலே, எல்லாத் தொழில்களையும் தன் அருள் கொண்டு அவர்களை இயற்றச் செய்து வீற்றிருக்கும் பரதேவதை.

அவளுடைய திருவோலக்கத்தைப் பார்த்தால் இது தெரியவரும். அவள் வீற்றிருக்கையில் அவளுக்கருகில் இந்த மூன்று பேரும் நின்று ஏவல் கேட்பார்கள். அவர்களுக்கப்பால் இந்திரன் கைகட்டி வாய்புதைத்து நிற்பான். வருணன், வாயு, அக்கினி யாவரும் பணிந்தபடி இருப்பார்கள்; துவாதசாதித்தியர்கள், ஏகாதச ருத்திரர்கள், அஷ்ட.வசுக்கள், அசுவினி தேவர்கள் யாவரும் அன்னையின் ஏவலர் குழுவில் நிற்பார்கள். இப்படி எல்லாத் தேவரும் போற்றும் பெருமாட்டி அவள். அவளுடைய திருவருளையே தம்முடைய பலமாகப் பெற்றவர்கள் அத்தேவர்கள். அவர்களுக்கு அம்பிகை தன் புன்முறுவலைக் காட்டி அருள் பாலிக்கிறாள். முதல் தேவர் மூவரும் வேறு தேவர்கள் யாவரும் போற்றப் புன்முறுவல் பூத்த திருமுகத்தோடு எழுந்தருளியிருக்கும் பரமேசுவரி அபிராமி.

இந்தக் காட்சியை மனத்தில் கொண்டு அன்னையைத் துதிக்கிறார் அபிராமிபட்டர்.

முதல் தேவர் மூவரும் யாவரும் போற்றும்
முகிழ்நகையே!

அவளுடைய பெருமையை அறிந்து அவளையே பற்றுக்கோடாகப் பற்றிக்கொண்டார் அபிராமிபட்டர். அப்படிப் பற்றிக் கொண்டது தம்முடைய முயற்சி என்று அவர் எண்ணவில்லை. அம்பிகையே அவரை வழிப்படுத்தித் தன்னைத் தியானிக்கச் செய்து தன் வழியே அவரை நடக்கும்படி அருளினாள் என்று சொல்கிறார்.

அம்பிகை படிப்படியாக அவரை ஆட்கொண்டாள். அதைச் சொல்கிறார். அம்பிகை மூவருக்கும் மேலானவள் என்பதை உணர்ந்தார். அவளுடைய பெருமைகளை அடிக்கடி கேட்டார். அவளுடைய அடியார்களுடன் சேர்ந்து அவளிடம் அன்பு செய்யத் தொடங்கினார். அவருடைய பக்குவம் முதிர்ந்தது; அவருடைய தகுதி உயர்ந்தது. அப்போது அவர் உருகினார். அன்பு மலரும்போது உருகும் பக்குவம் வரும். காய் பழுத்தால் கனிவு உண்டாவதுபோல, அன்பு பழுத்தால் உருக்கம் ஏற்படும். பக்குவமான அன்புக்கு அடையாளம் உருகுதல்.

"நினைந்துருகும் அடியாரை"

என்பது அப்பர் வாக்கு.

அப்படி உருகும்போது, அம்பிகையின் திருவடியை இறுகப் பற்றிக்கொள்ளும் பேறு கிடைக்கும். அரக்கில் முத்திரையைப் பதிக்கவேண்டுமானால் அப்படியே பதிக்க முற்பட்டால், அரக்குத் தூள்தூளாகிவிடும். அதை உருக்கி அதன்மேல் முத்திரையைப் பதித்தால் பதியும். அப்படி, மனம் நன்றாகப் பக்தியினால் உருகும்போது அம்பிகையின் பாதம் அங்கே நன்றாகப் பதியும். மனம் பற்றிக்கொள்ள முடியும். அன்னை எல்லோருடைய உள்ளத்திலும் இருக்கிறாள். அதனால் யார் யார் என்ன என்ன எண்ணுகிறார்களோ அவை யாவும் அவளுக்குத் தெரியும். ஆனாலும் அவர்களுடைய மனம் அவள் பாதத்தைப் பற்றிக்கொள்ள முடிவதில்லை. அவள் திருவடி அங்கே பதிவதில்லை. பதிவதற்குரிய பதம் அல்லது பக்குவம் அங்கே இல்லை. அன்பர்களின் உள்ளத்தில் உருகும் பக்குவம் இருக்கிறது. அந்தப் பதம் உண்டாவதால் திருவடி பதிகிறது. மனம் பற்றிக்கொள்கிறது. அபிராமிபட்டர் இந்த அநுபவத்தைச் சொல்கிறார்.

பதத்தே உருகி நின் பாதத்திலே
மனம் பற்றி.

இப்போது அபிராமிபட்டர் மனம் எம்பெருமாட்டியின் பாதத்தைப் பற்றிக்கொண்டது. நாம் செய்யும் செயல்களெல்லாம் நம் மனம் நினைத்தபடி நடப்பவை. மனம் நினைத்துச் செயலாக்க முற்படுகிறது. மனிதன் மனத்தின் வழி வாழ்கிருன். அன்பருடைய மனம் அபிராமியம்மையின் திருவடிகளைப் பற்றிக்கொண்டது; இனி விடாது.

தத்தித் தத்தி நடக்கத் தெரியாமல் திண்டாடும் குழந்தையை அதன் போக்கிலே விட்டுவிட்டால் அது கீழே விழுந்து காயம் பட்டுக்கொள்ளும்; எது மேடு, எது பள்ளம் என்று தெரியாமல் சென்று துன்புறும். தாய் அதை எடுத்து இடுப்பில் வைத்துக்கொள்கிருள். அதன் பின்பு அந்தக் குழந்தை ஆபத்தில் அகப்பட்டுக்கொள்ளாது. அன்னை போகும் போக்கே அதன் போக்காக இருக்கும்; அதற்கென்று தனிப்போக்கு இராது.

அன்பர் மனம் அம்பிகையின் திருவடியைப் பற்றிக் கொண்ட பிறகு அதன் நினைவெல்லாம் அம்பிகையின் அருள் நெறியிலே படரும். அவளுக்கு இதமானவை எவையோ அவற்றையே நினைக்கும்; அந்த நினைவின் வழியே செயல்கள் உருவாகும். மனத்தின் வழியே ஒழுக்கம் அமைவதால் இனி மேல் அன்பருடைய ஒழுக்கம் பராம்பிகை காட்டும் வழியிலே அமையும். அவளுக்கு இதமான வழியிலே ஒழுகுவார். அம்பிகையின் அடியைப் பற்றிக்கொண்ட பிறகு அன்பர் அவள் வசத்தவர் ஆகிவிடுவார். தமக்கென்று ஒரு செயல் இராது. எல்லாம் அவள் நடத்துவனவாக அமையும். அடியைப் பற்றிக்கொண்ட அன்பரை அன்னை அடிமை கொண்டபிறகு அவருடைய செயல் முழுவதும் அம்பிகையின் அருள் எல்லைக்குள்ளே, அவள் திருவுள்ளத்துக்கு உவப்பானவையாகவே அமையும். இந்த அநுபவத்தையும் சொல்கிருர்.

உன்றன்
இதத்தே ஒழுக அடிமை கொண்டாய்.

அம்பிகைக்கு அடிமையாகி அவள் நடத்தும் நெறியிலே செல்பவர்கள் மனநிறைவு பெறுகிறார்கள்; 'இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை' என்ற நிலையை அடைகிறார்கள், அப்படி அநுபவத்திலே அருளின்பத்தை அடைந்த பிறகு வேறு ஒன்றைப் பற்றலாம் என்ற நினைவு வருமோ?

ஆரம்ப காலத்தில் அம்பிகை மூவரும் போற்றும் தேவி என்று அறிந்தார்; அடியார் தொடர்பால் அது உண்மை என்பதை உணர்ந்தார். பிறகு உபாசனையில் ஈடுபட்டார். அவர் உள்ளம் உருகியது; அம்பிகை தன் திருவடியை அங்கே பதித்தாள். அவர் வாழ்க்கை நெறியே மாறி விட்டது; இப்போது அவர் அபிராமி சமய நெறியிலே பயணம் செய்தார். அதன் விளைவாக அருளைப் பெற்றார். முன்பு காதினாலே கேட்டது உண்மை என்பதை இப்போது அநுபவத்திலே உணர்ந்தார், அதன் பிறகு அந்த நெறியை விடத் தோன்றுமா?

இனிப்புச் சுவையைத் தேடி அலைகிறவனுக்குச் சிறிது சர்க்கரை சேர்ந்த பொருள் கிடைக்கிறது. அதை இனிய பண்டம் என்று உண்ணுகிறான். இன்னும் ஒருவன் சர்க்கரையையே உண்ணுகிறான். பின்னும் ஒருவன் கற்கண்டை உண்ணுகிறான். வேறு ஒருவனுக்கு நல்ல தேன் கிடைக்கிறது. அது எல்லாவற்றையும்விட இனிமை மிகுதியானது. அதை உண்ணப் புகுந்த பிறகு, மற்றவர்கள் வேறு ஒன்றைக் காட்டி, "இதுதான் இனிப்பு; இதுதான் இனியது" என்று கரடியாகக் கத்தினாலும் அதைக் கைவிடுவானோ? மற்றவர்கள் கூறுவதைக் கேட்டு உள்ளுக்குள்ளே நகைத்துக்கொள்வான்.

அபிராமிபட்டர் அந்த நிலையில் இருக்கிறார். 'இனி வேறு பலரும் தாம் கடைப்பிடிக்கும் மதம் அல்லது மார்க்கம்

எவ்வளவு உயர்ந்தது என்று சொன்னாலும் நான் மதிமயங்க மாட்டேன். எனக்கு அறிவுத் தெளிவு உண்டாகிவிட்டது. இதில் கலக்கத்துக்கே இடம் இல்லை. அநுபவம் இல்லாமல் அறிவினாலும் ஆராய்ச்சியினாலும் அபிராமி சமயத்தைப் பற்றியிருந்தால், ஒருகால் அதையும் பார்க்கலாமே என்று பிறர் போகும் வழியில் போக எண்ணலாம். நான் இப்போது அநுபவத்தை அடைந்து மதி தெளிந்திருக்கிறேன். உருகின அரக்கில் முத்திரை பதித்தால் அந்த அரக்கு மறுபடியும் இறுகி அந்த முத்திரையை அழியாமல் வைத்துக்கொள்ளும்; அதை மாற்ற முடியாது. நானும் அம்பிகையின் திருவடியை இறுகப் பற்றிக்கொண்டேன். அதனால் ஆனந்தாநுபவம் பெற்றேன். இந்த உலகமே வந்து, என்ன கூறினாலும் மயங்கமாட்டேன். என் வழி நான் வகுத்துக்கொண்ட வழி அன்று; அன்னையே என்னைச் செலுத்தும் வழி. ஆகவே நான் வேறு வழியில் செல்லமாட்டேன்.'-இப்படி எல்லாம் விரித்துப் பொருள் கொள்ளும்படி தம்முடைய சலனமற்ற அநுபவ நிலையை அவர் சொல்கிறார்.

இனி யான் ஒருவர்
மதத்தே மயங்கேன்; அவர் போன
வழியும் செல்லேன்.

பற்றிக்கொள்வதைப் பற்றிப் பெற வேண்டிய அநுபவத்தைப் பெற்றவர்கள், இதுவோ அதுவோ என்று ஐயுறாமல் நின்ற நிலையிலே உறுதியாக நிற்பார்கள்.

''அரும்பும் தனிப்பர மானந்தம் தித்தித்து
அறிந்தஅன்றே
கரும்பும் துவர்த்துச்செந் தேனும் புளித்துஅறக்
கைத்ததுவே''

என்று இந்த நிலையைப்பாடுவார் அருணகிரிநாதர். அபிராமி பட்டருடைய அசஞ்சலமான பக்தி, அநந்ய உபாசனை, அவரை அநுபவத்திலே அழுத்திவிட்டது. அதிலிருந்து மீள

முடியாது; மீளவும் மாட்டார்; அம்பிகை மீளவும் விட மாட்டாள். மீளாமல் இருப்பதுவே இன்பம்.

பதத்தே உருகிநின் பாதத்தி
லேமனம் பற்றிஉன் றன்
இதத்தே ஒழுக அடிமைகொண்
டாய்! இனி யான்ஒருவர்
மதத்தே மதிமயங் கேன்; அவர்
போன வழியும்செல்லேன்;
முதல்தேவர் மூவரும் யாவரும்
போற்றும் முகிழ்நகையே!

[முதல் தேவர்களாகிய மும்மூர்த்திகளும் மற்றவர் யாவரும் வணங்கித் துதிக்கும், அரும்பிய புன்னகையை யுடைய அபிராமி அன்னையே, நல்ல பக்குவம் பெற்று அந்தப் பக்குவத்தில் என் உள்ளம் உருகி நின் திருவடியில் பற்றுக் கொண்டு நின் திருவுள்ளத்துக்கு உவப்பான நெறியிலே ஒழுகும்படி அடியேனை ஆட்கொண்டாய்; ஆதலின் அடியேன் இனிமேல் வேறு ஒருவர் சமயக் கொள்கையைப் பெரிது என்று எண்ணி அறிவு கலங்கமாட்டேன்; அந்தச் சமயத்தினர் ஒழுகும் வழியிலும் போகமாட்டேன்.

பதம்-பக்குவம். இதம்-ஹிதம்; அன்னையின் திருவுள்ளத்துக்கு உகப்பானது. "இனி எண்ணுதற்குச் சமயங்களும் இல்லை" (8) என்று இவ்வாசிரியர் முன்பு கூறியுள்ளார். மும்மூர்த்திகளும் அம்பிகையைப் போற்றுவதை, "கமலாலயனும், மதியுறு வேணி மகிழ்நனும் மாலும் வணங்கிஎன்றும், துதியுறு சேவடியாய்" (7) என்று முன்பும் சொன்னார். ப்ரம்ஹோபேந்த்ர மஹேந்த்ராதி தேவ ஸம்ஸ்துதவைபவா (83)என்பதுலலிதா சகசிர நாமம். முகிழ் நகை: அன்மொழித் தொகை; முகிழ்க்கும் நகையை உடையவள் என்றும், முகிழ் போன்ற நகையை உடையவள் என்றும் இருவகையாகவும் பொருள் கொள்ளலாம்.]

அநந்ய பக்தியே சிறந்தது என்பது கருத்து.

இது அபிராமி அந்தாதியில் 92-ஆவது பாட்டு.

# முரண்பாடுகள்

பெண்களுக்குப் பருவந்தோறும் தோற்றத்தில் மாறு பாடு இருக்கும். பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்று மாதர்களுக்கு ஏழு பருவங்களைச் சொல்வார்கள். உலா என்ற நூலில் இந்த ஏழு பருவப் பெண்களின் வருணனைகளும் வரும். பேதைப் பெண்ணின் கண் பார்வையில் அவளுடைய பேதைமை புலனாகும். மங்கைப் பருவப் பெண்ணின் கண்ணில் மதர்ப்பு ஒன்று இருக்கும். பெண்களுடைய மார்பில் நகில் வளர்ச்சியும் தளர்ச்சியும் பருவத்துக்கு ஏற்ற படி அமையும். மங்கைப் பருவப் பெண்களின் வருணனை யையும் பேரிளம் பெண்களின் வருணனையையும் பார்த்தால் முன்னவர்களின் கிளர்ச்சியும் பின்னவர்களின் தளர்ச்சியும் தெரியவரும். மக்களைப் பயந்த பெண்மணிகளின் உறுப் புக்கள் தளர்ச்சி பெறும். "கருப்பத்தால் மங்கையருக் கழகு குன்றும்" என்று ஒரு பழம் பாடல் கூறுகிறது. பல மக்களைப் பெற்ற பெண்மணிகள் பல வகையில் தளர்ச்சி அடைவார்கள். அந்தத் தளர்ச்சி அவர்களுடைய மார்பிலும் கண்களிலும் தெளிவாகத் தெரியும். இவை உலகில் உள்ள மாதர்களுக்கு இயல்பு. தெய்வமங்கைய ருக்கு இந்தத் தளர்ச்சி உண்டாவதில்லை.

தெய்வ மங்கையர்களுக்குள் நாயகியாக விளங்கு கிறவள் அம்பிகை. அந்தப் பெருமாட்டியின் லாவண்யம்

வேறு யாருக்கும் இல்லை. அவளுடைய அங்கங்களின் வளப்பமும் அத்தகையதுதான். காலத்தால் மாருதது அம்மையின் அழகு. காலத்தின் சுவடுகளை மனித உடலத்தில் பார்க்கிறோம். ஆனால் அம்பிகை காலத்துக்கு அப்பாற்பட்டவள். காலத்தின் கோடுகள் அவளை அண்டுவதில்லை. என்றும் தளர்ச்சி அடையாத அங்கங்களை உடையவள் அபிராமியன்னை.

உலகத்தில் உள்ள பெண்களின் நிலையையும் அம்பிகையின் நிலையையும் ஒப்பிட்டுப் பார்த்தால் வியப்பாக இருக்கும்; உலகியலுக்கு முரணாகத் தோன்றும். அவளைப் பற்றிச் சொல்லும் இயல்புகளே ஒன்றுக்கு ஒன்று முரண்பாடாகத் தோன்றும். 'இது என்ன வேடிக்கை! சிரிப்புக்கு இடமானது அல்லவா?' என்று நினைக்கும்படியாக அவை இருக்கும்.

இந்த நகைப்புக்குரிய இயல்புகளை அபிராமிபட்டர் சொல்லுகிருர். 'இப்படியெல்லாம் சொல்வது நகையே' என்று தொடங்குகிருர்.

நகையே இஃது.

"எதைச் சொல்கிறீர்கள்?" என்று நாம் கேட்கிறோம். அவர் சொல்கிருர்:

குழந்தைகளைப் பெற்ற தாய் ஒருத்தியின் நகில்கள் தாழ்ந்திருக்கும். மங்கைப் பருவப் பெண்ணுக்குத்தான் தாமரை அரும்பு போல இருக்கும். அம்பிகை என்பதே தாய் என்ற பொருளுடையது. அவள் எத்தனை பேருக்குத் தாய் தெரியுமா? அவள் பிரமன் முதல் புழுவரைக்கும் உள்ள எல்லோருக்கும் தாய். 'ஆப்ரஹ்ம கீட ஜநநீ' (85) என்பது அவள் திருநாமங்களில் ஒன்று. அநேக கோடி ப்ரஹ்மாண்டங்களையும் பெற்றவள் அவள். 'அநேக கோடி

ப்ரஹ்மாண்டஜநநீ' (620) என்றும், 'விச்வமாதா' (934) என்றும் லலிதா சகசிரநாமத்தில் வரும் திருப்பெயர்கள் இதை விளக்கும்.

அப்படிப் பல பல பேர்களைப் பெற்ற பழையவளாகிய அவள் திருமார்பில் நகில்கள் எப்படி இருக்கின்றன? 'தருணம்புயமுலைத் தையல் நல்லாள்' என்று அபிராமி பட்டரே முன்னர்ச் சொல்லியிருக்கிறார். அவை தாமரை அரும்புபோல இருக்கின்றனவாம். எல்லா உலகையும் உயிரையும் ஈன்ற தாய்க்கு, எல்லாரையும்விடப் பழைய கிழவியாகிய அப்பெருமாட்டிக்கு, இப்படி அங்கம் அமைவது வேடிக்கையாக, நகையாக இருக்கிறதல்லவா?

"இங்கு அயற்கண் அகன் உலகம் எண்ணிறந்த சராசரங்கள் ஈன்றும் தாழாக் கொங்கை" (திருவிளையாடற் புராணம்) என்று பரஞ்சோதி முனிவர் பாடுகிறார். அபிராமி பட்டர் இது நகையல்லவா என்று கேட்கிறார்.

நகையே இஃது; இந்த ஞாலம்
எல்லாம் பெற்ற நாயகிக்கு
முகையே முகிழ்முலை.

இளம் பெண்ணின் கண் சலனமடையும். அதற்கு மான் கண்ணை உவமை கூறுவது வழக்கம். முதிர்ச்சிபெற்ற மகளிர்களின் கண்ணில் அந்தச் சலனம் இராது. அம்பிகை மிக முதிர்ந்தவள். அவள் கண் அருள் முதிர்ச்சியை உடையது. அப்படி இருந்தும் அது மான் கண்ணைப்போல இருக்கிறதாம். 'ம்ருகாக்ஷி' (561) என்பது லலிதாம்பிகையின் திருநாமங்களில் ஒன்று. முதிர்ந்த அன்னைக்குச் சிறு பெண்ணைப் போலக் கண் இருப்பது வியப்பல்லவா? இதுவும் நகைப்பதற்குரியதே.

நகையே இஃது; இந்த ஞாலம்
எல்லாம் பெற்ற நாயகிக்கு
....மானே முதுகண்.

இவை போகட்டும். அம்பிகை ஈறும் முதலும் இல்லாதவள். தன்னைப் போற்றி வழிபடும் பக்தர்களையே பிறவியென்னும் கடலைக் கடக்கும்படி செய்கிறவள். அவளுக்கு முடிவு இல்லை; அப்படியே பிறவியும் இல்லை.

முடிவு இல்; அந்த வகையே பிறவியும்.

யாருக்குத் தோற்றம் உண்டோ, அவருக்கு முடிவும் உண்டு. தோற்றினவர்கள் யாரும் அழிந்து போவார்கள். என்றும் அழியாமல் ஒருவர் இருப்பவர் என்றால் அவர் தோற்றம் இல்லாதவராகத்தான் இருக்கவேண்டும்; அநாதியாகவே இருப்பார். அம்பிகைக்கு இறுதி உண்டா? அவள் நித்தியமாக உள்ளவள்; அழிவற்றவள். ஆகவே அவளுக்குப் பிறவி இருக்க நியாயம் இல்லை. முடிவு இல்லை என்றால் அந்த நியாயப்படியே பிறவியும் இல்லை என்று உறுதியாகச் சொல்லிவிடலாம்.

ஆனால் ஒரு வேடிக்கை பாருங்கள்; அம்பிகை பிறந்தாளாம்! முடிவில்லாதவள் எப்படிப் பிறக்க முடியும்? மலையரசன் மகளாகப் பிறந்தாள் என்று சொல்கிறார்களே! அது வம்பு அல்லவா? நாம் அடிக்கடி மலைமகள், பார்வதி என்று சொல்கிறோம். நாம் மட்டுமா சொல்கிறோம்? லலிதா சகசிர நாமமே அவளை 'அஜா' (866) (பிறக்காதவள்) என்று சொல்லிவிட்டு, 'பார்வதி' (246) என்றும், 'சைலேந்த்ர தநயா' (634) என்றும் சொல்கிறதே! இது வம்பல்லவா?

வம்பே, மலைமகள் என்பது நாம்,

சர்வப் பிரபஞ்சத்தையும் ஈன்றவள் அம்பிகை என்பது சத்தியமானது: ஆனால் அவள் பலரைப் பெற்ற ஒரு தாய்க்குரிய தளர்ச்சியை அடையாதவள் என்பது முரணாகத் தோன்றுகிறது; நகைப்புக்கு இடமாகத் தெரிகிறது. இந்த முரண்பாடே அவளுடைய தெய்வத் தன்மையைக் காட்டுகிறது.

"அகிலாண்டம் ஈன்ற அன்னையே பின்னையும்
கன்னியென மறைபேசும் ஆனந்த ரூபமயிலே"

என்று இந்தத் தெய்விக முரண்பாட்டைச் சொல்லி வியக்கிறார் தாயுமானவர்.

அம்பிகை மேனைக்கும் இமயாசல அரசனுக்கும் மகளாகத் திருவவதாரம் செய்தாள். அன்னை வயிற்றில் பிறக்கவில்லை. ஒரு தாமரை மலரில் சிறு பெண் குழந்தையாக எழுந்தருளியிருந்தாள். தன் விருப்பப்படி உருவம் கொள்ளும் பேரருள் உடையவள் அன்னை. ஆகவே, அவள் பிறந்தாள் என்று சொல்வது பிழை. அவள் மலைக்கு மகளாக அவதரித்தாள். ஆனாலும் மேலெழுந்த வாரியாகப் பார்க்கும்போது, தாய் தகப்பனுக்கு மகளாகத் தோற்றியவள் என்று நினைக்கும்படி மலைமகள் என்ற திருநாமம் இருக்கிறது. இது வம்பாகத் தோன்றுகிறது.

அன்னையின் இயல்புகளையெல்லாம் ஆராய்ந்து, அவற்றுக்கெல்லாம் பொருத்தமோ காரணமோ கண்டு பிடித்து அறிவது நம்மால் இயலாத காரியம். மூன்று செய்திகளை நாம் பார்த்தோம்; இன்னும் எத்தனையோ உண்டு. 'அவள் உருவமுடையவள்; அருவாயிருப்பவள்' என்று நூல்கள் கூறுகின்றன. அதிலும் முரண்பாடு இருக்கிறது. 'அவள் எல்லாவற்றையும் பேசுகிறவள்; பேச்சுக் கடந்த தனிமோன நிலை அவள் நிலை' என்றும் கூறுவார் உண்டு. இப்படி உள்ள பல இயல்புகள் நம்முடைய அறிவு ஆராய்ச்சிக்கு அப்பாற்பட்டவை. அவற்றைத் தேடி நாடி ஆராய்ந்து தெளியலாம் என்று நாம் விரும்பினால் அது நம்மால் ஆகாத காரியம். அது நம் சக்திக்கு அப்பாற்பட்டது; மிகையான செயல்; செய்ய வேண்டாதது.

**மிகையே, இவள்தன் தகைமையை**
**நாடி விரும்புவதே!**

தன்னை விரும்பும் அன்பர்களின் மனத்திலே வடிவம் காட்டும்பொருட்டு அவள் கொள்ளும் கோலங்கள் உலகியலோடு ஒத்துவராதவை; அப்பிராகிருத மானவை. அவளுடைய திருவிளையாடல்களும் அப்படியே மாறுபாடு உடையனவாக இருக்கலாம். அவற்றின் பொருத்தத்தை ஆராய நமக்கு ஆற்றல் இல்லை. இவ்வாறே, அவளுடைய தகைமைகள், இயல்புகள் இன்னவை என்று கணக்கிட்டுக் காரண காரியத் தொடர்பும் பொருத்தமும் காட்ட முடியாதவை. 'அசிந்த்ய ரூபா' (554) என்பதும், அளவிடற்கரியவள் என்ற பொருளில் 'அப்ரமேயா' (413) என்பதும், 'அவ்யக்தா' (398) என்பதும் லலிதா சகசிர நாமம் கூறும் திருநாமங்கள். அவள் இயல்புகள் நம் அறிவாற்றலுக்கு அப்பாற்பட்டவை என்பதை அவை அறிவுறுத்துகின்றன.

முதலில், 'இது வேடிக்கையாக இருக்கிறது' என்று தொடங்கிய அபிராமிபட்டர், இறுதியில், 'அட்ட அப்பா! இவற்றையெல்லாம் ஆராய்ந்துகொண்டிருப்பது நம்முடைய சக்திக்கு அப்பாற்பட்டது. அந்த ஆராய்ச்சி அதிகப் பிரசங்கித்தனம்; மிகை' என்று முடிக்கிறார்.

நகையே இஃது; இந்த ஞாலம்எல்
　　லாம்பெற்ற நாயகிக்கு
முகையே முகிழ்முலை; மானே
　　முதுகண்; முடிவுஇல்;அந்த
வகையே பிறவியும்; வம்பே
　　மலைமகள் என்பதுநாம்;
மிகையே இவள்தன் தகைமையை
　　நாடி விரும்புவதே.

[இந்த உலகங்களை எல்லாம் ஈன்றருளிய பரமேசுவரிக்கு அரும்பிய நகில் தாமரை அரும்பு; அருளால் நிரம்பி முதிர்ந்த கண் மருட்சியைப் பெற்ற மான் கண். இவ்வாறு

கூறுதல் சிரிப்புக்கு இடமாம்; அவளுக்கு முடிவும் இல்லை; அந்த முறைப்படியே பிறவியும் இல்லை; அப்படி இருக்க, அவளை மலைக்கு மகள் என்று கூறுவது வீணே; இங்ஙனம் அவளுடைய இயல்புகளை ஆராய்ந்து பிறகு விரும்புவது என்பது நம் அறிவாற்றலுக்கு மிஞ்சிய செயலாகும்.

அம்பிகையின் உருவத்தோற்றமும் செயலும் இயல்புகளும் முரண்பாடு உடையவையாகத் தோன்றுகின்றன என்று சமத்காரமாகச் சொன்னர்.

நகை-சிரிப்புக்குக் காரணம்; காரணத்தைக் காரியமாக உபசரித்தது. இஃது என்பது பின்வருவனற்றைக் குறித்து நின்ற தொகுதி ஒருமை. முகை என்பது பொதுவாக இருப்பினும் தாமரையரும்பு என்று கொள்ள வேண்டும். மான்-மான் கண்; ஆகுபெயர். அந்த வகையே பிறவியும்-இல்லை என்று சொல்வனவற்றின் இனமே பிறவியும்; பிறவியும் இல் என்று, இல் என்னும் சொல்லை நடு நிலை விளக்காகக் கொண்டு பொருள் செய்வதும் பொருந்தும். வம்பு-வீண்; எங்கும் இல்லாத புதுமை என்றும் கொள்ளலாம். மிகை-அளவுக்கு மிஞ்சிய செயல்; அப்பாற்பட்ட செயல். நாடி-ஆராய்ந்து; "நோய்நாடி நோய்முதல் நாடி" (குறள்) என்று அப்பொருளில் வருவது காண்க; சோதனை செய்து என்றபடி. விரும்புவது மிகை.]

அம்பிகையின் இயல்புகள் அறிவாராய்ச்சிக்கு அப்பாற்பட்டவை என்பது கருத்து.

இது அபிராமி அந்தாதியில் 93-ஆம் பாட்டு.

# அடியார் அநுபவம்

அடியார் என்பதற்கு அடையாளம் ஏதாவது உண்டா? சிவனடியார்கள் திருநீறும் உருத்திராட்சமும் அணிகிறார்கள். திருமால் அடியார்கள் திருமண் தரிக்கிறார்கள்; துளசி மணி மாலை அணிகிறார்கள். அம்பிகையின் பக்தர்கள் குங்குமம் அணிகிறார்கள். இவை அவர்கள் தரித்துக்கொள்பவை. உள்ளத்தில் உண்மையான அன்பு இல்லாதவரும் இவற்றை அணியலாம்; அப்படி அணிந்து ஏமாற்றுகிறவர்களும் உண்டு. ஆகவே, அவற்றை அடையாளம் என்று கொள்வதில் ஐயம் இருக்கிறது.

அடியார்கள் அம்பிகையை விரும்பித் தொழுகிறார்கள்; அம்பிகையே தலைவி என்றும், தாம் அவளுடைய அடிமைகள் என்றும் எண்ணி வழிபடுகிறார்கள். அவர்களுடைய உள்ளத்தில் உள்ளது பக்தி உணர்வு. அந்த உணர்வு கண்ணுக்குப் புலப்படாதது. குணங்கள் யாவையுமே புலப்படாதவை. ஆனால் அந்தக் குணம் உள்ளவர்களைக் கண்டுபிடிக்க, இனம் கண்டுகொள்ள, சில அடையாளங்கள் உண்டு. கோபம் என்பது ஒரு குணம். அதை உடையவனுடைய கண்கள் சிவக்கும்; வார்த்தைகள் படபடவென்று வரும். இவை அவன் சினம் கொண்டிருக்கிறான் என்பதை அறிவிக்கும் அறிகுறிகள். இவற்றைப் பாவம் என்று வடமொழியிலும், மெய்ப்பாடு என்று தமிழிலும் சொல்வார்கள். உடம்பிலே தோன்றும் அறிகுறி

என்பதுவே மெய்ப்பாடு என்பதற்குப் பொருள். கோபம் என்ற குணத்துக்குரிய மெய்ப்பாடு கண் சிவத்தல் முதலியன. இப்படியே ஒவ்வொரு குணத்தையும் வெளிப் படுத்தும் மெய்ப்பாடுகள் இருக்கின்றன. பக்தி என்பது ஒரு குணம். அதற்கு அறிகுறியான மெய்ப்பாடுகள், பாவங்கள், சில உண்டு. அவற்றைப் பெரியவர்கள் எடுத்துச் சொல்லி யிருக்கிருர்கள்.

அபிராமிபட்டர் அம்பிகையை விரும்பித் தொழும் அடியார்களை நமக்கு இனம் காட்டுகிருர். முதல் அடையாளம், விழிநீர் மல்கல். அம்பிகையை வழிபடும் உண்மையன்பர்கள் உருகுவார்கள்; அந்த உருக்கத்தின் விளைவாக எழுவது கண்ணீர்.

விரும்பித் தொழும் அடியார்
விழி நீர் மல்கி.

இந்த மெய்ப்பாட்டைப் பக்தர்களின் நிலையைச் சொல் லும் யாவரும் எடுத்துரைக்கிருர்கள்.

"உடல்குழைய என்பெலாம் நெக்குருக விழிநீர்கள்
ஊற்றென வெதும்பி யூற்ற"
"அன்பினுல் உருகி விழிநீர் ஆருக"

என்று தாயுமானவர் சொல்கிருர்.

பின்பு, உடம்பெல்லாம் மயிர்க் கூச்செறியும்; அதைப் புளகாங்கிதம் என்பார்கள்; புளகம் போர்த்தல் என்றும் சொல்வார்கள்.

விழி நீர் மல்கி, மெய் புளகம் அரும்பி.

இந்த இரண்டு மெய்ப்பாடுகளையும், இணைத்துச் சொன்னவர் பலர்.

"அங்கைகொடு மலர்தூவி அங்கமது புளகிப்ப
அன்பினுல் உருகி விழிநீர் ஆருக"

''மெய்சிலிர்த்து இருகை கூப்பி
விண்மாரி எனஎன் இரு கண்மாரி பெய்யவே''

என்பவை தாயுமானவர் பாடல்கள்.

''மெய்தான் அரும்பி விதிர்விதிர்த் துன்விரை
யார்கழற்குஎன்
கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி
வெதும்பியுள்ளம்''

என்பது மாணிக்கவாசகர் திருவாக்கு.

இவ்வாறு கண்ணீர் விட்டுப் புளகம் போர்க்க நிற்கும் பக்தர்களுக்கு உள்ளே ஒரு வகை இன்பக் கிளுகிளுப்பு உண்டாகும்; ஆனந்தம் பொங்கும். அவர்கள் விடும் கண்ணீர் இன்பக்கண்ணீர்.

''பெற்றவட்கே தெரியும் அந்த வருத்தம்; பிள்ளை
பெறுப்பேதை அறிவாளோ? பேரா னந்தம்
உற்றவர்க்கே கண்ணீர்கம் பலைஉண் டாகும்;
உறாதவரே கல்நெஞ்சம் உடைய ராவார்''

என்று ஆனந்தக்கண்ணீர் விடுவதைத் தாயுமானுர் உரைக்கிருர். அபிராமிபட்டர் இந்த நிலையையும் சொல்கிருர்.

விரும்பித் தொழும் அடியார் விழிநீர்
மல்கி மெய்புளகம்
அரும்பித் ததும்பிய ஆனந்தம் ஆகி.

ஆனந்தக் கடலுள் ஆழ்ந்த பிறகு ஆராய்ச்சி நின்று விடும்; அறிவு செயற்படாது. ஆனந்த உணர்வு என்னும் மயக்கத்தில் எல்லாம் மறந்து நிற்கும் நிலை தோன்றும்; ஜீவ போதம் இராது.

''எல்லாம் அற என்னை இழந்த நலம்''

என்று அதை அருணகிரிநாதர் குறிப்பார். வண்டு தேனைக் குடித்து மயங்கி நிற்பது போன்ற நிலை அது. வண்டு

பூவைத் தேடி வரும்போது ஆரவாரத்துடன் பறந்து வரும்; மலரைக் கண்டு அதில் அமரும்போது ரீங்காரம் செய்யும்; பூந்தாதை ஊதும் போது முரலும்; இசை எழுப்பும். ஆனால் தேனை உண்ணத் தொடங்கிய பிறகு அதன் இசை நின்றுவிடும். அநுபவம் வரும்போது மோன நிலை உண்டாகி விடும்.

ஆனந்தம் ஆகி அறிவு இழந்து
சுரும்பிற் களித்து,

அடியார்கள் தாமாக நினைந்து செய்யும் செயல்கள் சில; பிறகு அவரிடத்திலே இன்ப அநுபவம் உண்டாகும்போது அமையும் மெய்ப்பாடுகள் சில; பிறகு அந்த இன்பத்திலே ஆழ்ந்து நிற்கும் நிலை உண்டாகும்; அந்த நிலையிலிருந்து மீளும்போது ஒருவகைத் தடுமாற்றம் ஏற்படும்.

அம்பிகையைத் தம் வழிபடு கடவுளாக எண்ணி, அவளிடம் அன்பு வைத்து விருப்பம் கொள்ளுகிறார்கள் அடியார்கள்; இது முதற் படி. அந்த விருப்பம் செயலாகப் பரிணமிக்கிறது. அன்னையைத் தொழுகிறார்கள். தொழுதல் என்பது இங்கே மனத்தினால் தியானித்தல், வாக்கினால் பரவுதல், உடம்பினால் வணங்குதல் என்ற மூன்றையுமே குறிப்பதாகச் சொல்லவேண்டும். "தொழுதகை துன்பம் துடைப்பாய் போற்றி" என்று பெரும்பாலும், தொழுதல் கையின் செயலாகவே வரும் என்றால், உபலட்சணத்தால் மற்றக் கரணங்களின் வழிபாட்டையும் சேர்த்துக்கொள்ளலாம். விரும்புதலும் தொழுதலும் அடியார்கள் நினைந்து செய்யும் செயல்கள்.

அடுத்தபடி அவர்களுடைய அன்பு வளர்ந்து பழுக்கும் போது தம் முயற்சியின்றியே சில மெய்ப்பாடுகள் உண்டாகின்றன. அவை, விழி நீர் மல்குதலும், மெய் புளகம் அரும்புதலும். இதற்குமேல் ஆனந்த அநுபவம் பெற்று, அறிவு

இயங்காமல் நிற்க, தேனையுண்ட வண்டுபோலச் செயலற்று நிற்கும் நிலை உண்டாகும்.

தம்மை மறந்த நிலையினின்றும் சற்றே தெளிவு பெற்றுக் கீழே இறங்கும் போது ஒரு வகையான தடுமாற்றம் ஏற்படும். துயிலிலிருந்து எழுப்பப்பட்டவன் எழும்போது எப்படித் தடுமாறுவானோ அது போன்ற தடுமாற்றம் அது. அவர்களுடைய கண்ணிலே ஒரு மதர்ப்பு, அவர்களுடைய சொற்களிலே ஒரு தழுதழுப்பு, அவர்களுடைய நடையிலே ஒரு தயக்கம் அமையும்.

"மொழி தழுதழுத்திட வணங்கும், சன்மார்க்க நெறி" என்று தாயுமானவர் பாடுவார்.

ஆனந்த மயக்கத்தினின்றும் தெளிந்து இறங்கும் அடியார்க்கு மொழி தடுமாறி வருமாம்.

மொழி தடுமாறி.

இப்படி உள்ள பக்தர்கள் அம்பிகையின் அருளிலே குளித்தவர்கள். அவர்கள் பேச்செல்லாம் வெறும் பேச்சாக இராது. அவர்கள் வாக்கிலே எது வந்தாலும் அது பலிக்கும். அவர்கள் பித்தரைப்போல இருப்பார்கள்; பேசுவார்கள். இறைவியின் அருளின்பக் கள்ளை உண்ட பித்தர்கள் அவர்கள் மொழி தடுமாறிப் பேசினாலும் அவர்கள் சொன்ன தெல்லாம் நிகழும்; பலிக்கும். சொன்னவற்றையெல்லாம் பிரத்தியட்சமாகத் தரும் பித்து, அவர்கள் கொண்ட பித்து.

மொழி தடுமாறி முன் சொன்ன எல்லாம்
தரும் பித்தர்.

அபிராமியிடம் அன்பு பூண்டு மேலும் மேலும் அதை வளர்க்கும் அடியார்கள் அதன் பயனாக ஆனந்த அநுபவம் பெற்று எல்லாம் மறந்து நிற்பர்; சொன்ன வெல்லாம் தரும்

பித்தர் ஆகிவிடுவார்கள். இத்தகைய பித்துப் பிடிக்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டும். அபிராமியை வழிபடும் சமயம் இத்தகைய பித்தை உண்டாக்கும். ஆனந்த அநுபவம், சொன்ன சொல் எல்லாம் பலித்தல் என்ற சிறப்புக் கிடைக்குமானால் அதைவிட நன்மை வேறு என்ன இருக்கிறது? அத்தகைய பித்தைத் தரும் அபிராமி சமயம் நன்று என்று சொல்வதற்குத் தடையும் உண்டோ? ஆகையால் அபிராமிபட்டர் சொல்கிறார்:

முன் சொன்ன எல்லாம் தரும் பித்தர்
ஆவர் என்றால் அபிராமி சமயம் நன்றே!

எல்லாம் மறந்து நிற்கும் நிலையில் இன்பம் உண்டாகும். அறிபவன், அறிவு, அறியப்படும் பொருள் என்ற மூன்றும் நழுவிய நிலையைத் திரிபுடிரகிதம் என்பார்கள். அதுதான் எல்லாம் மறந்த ஆனந்த நிலை. அது வேறு எதனாலும் கிடைக்காது. அம்பிகையின் உபாசனையினாலேதான் கிடைக்கும். அது மட்டுமன்று. அதற்கு மேலும் ஒன்று கிடைக்கும். அந்த நிலையை அடைந்தவர்கள் திருவாக்கில் வருவனவெல்லாம் நடக்கும். அத்தகையவர்களைச் சத்திய சங்கல்பர்கள் என்று சொல்வார்கள். மெய்ஞ்ஞானிகள் மறந்து ஒன்றைச் சொல்லிவிட்டாலும் அது பலித்து விடுமாம்.

விரும்பித் தொழும்அடி யார்விழி
நீர்மல்கி, மெய்புளகம்
அரும்பித் ததும்பிய ஆனந்தம்
ஆகி அறிவுஇழந்து.
சுரும்பிற் களித்து, மொழிதடு
மாறிமுன் சொன்னஎல்லாம்
தரும்பித்தர் ஆவர்என் றால்அபி
ராமி சமயம்நன்றே!

[தன்னிடம் அன்பு செய்து விரும்பி வழிபடும் அடியவர்கள் கண்களில் நீர்மல்க, உடம்பெல்லாம் மயிர்க்கூச்சு

எறிய, பொங்கி வரும் ஆனந்தமயமாக நின்று, ஜீவ போதத்தை இழந்து, தேனை உண்ட வண்டு போல மயங்கி, அப்பால் வார்த்தை குழறி முன் சொன்னவை யாவும் பொருளுடையனவாகத் தருவதற்குக் காரணமான பித்தை உடையவராவார்; என்றால் அப்படிச் செய்யும் அவ்வடியார்களின் வழிபாட்டு நெறியாகிய அபிராமி சமயம் நன்மையை உடையது.

அடியை இலக்காக்கித் தொழுபவர்கள் அடியார்கள். ததும்புதல்-உள்ளே அடங்காமல் பொங்குதல். ஆனந்தம் ஆகி-ஆனந்தம் வேறு தாம் வேறு என்று இல்லாமல் அதன் மயமாகி. அறிவு-இங்கே, ஜீவ போதம். சுரும்பின்-வண்டைப்போல. முன் என்பது காலத்தைக் குறிக்காமல் தமக்கு முன் நிலையில் நிற்பாருக்கு என்று இடத்தைக் குறித்தது. அபிராமி சமயம்-அபிராமியை வழிபடும் நெறி. நன்றே: ஏகாரம், தேற்றம்; நன்றே-நன்றல்லவா என்று வினாவாகவும் கொள்ளலாம்.]

அபிராமியை வழிபடுபவர்கள் ஆனந்த அநுபவம் பெறுவார்கள் என்பது கருத்து.

இது அபிராமி அந்தாதியில் 94-ஆவது செய்யுள்.

# ஏது கவலை?

யான், எனது என்ற இரண்டையும் அகப்பற்று புறப்பற்று என்று சொல்வார்கள். இவைகளே அகங்கார மமகாரங்கள். என்னுடையது என்று ஒன்றின்மேல் பற்று வைத்தால் அது சம்பந்தமான சுகதுக்கங்கள் நம்மையும் சாரும். ஒருவருக்குக் குழந்தை பிறக்கிறது. அவர் அந்தக் குழந்தையினிடத்தில், "என் குழந்தை" என்று அபிமானம் கொண்டு வளர்த்து வருகிறார். அந்தக் குழந்தை குதித்து விளையாடிச் சிரித்தால் அவர் மகிழ்ச்சி அடைகிறார். அதற்கு நோய் வந்து விட்டால் அவர் துயரப்படுகிறார். அந்தக் குழந்தை பிறப்பதற்கு முன்பு அதனால் வரும் இன்ப துன்பங்கள் அவருக்கு இல்லை. குழந்தை வளர்ந்து பெரிய வனாகிறான். அவன் சரியாகப் படிக்காவிட்டால் அவருக்குக் கவலை உண்டாகிறது. அவன் சொல்லிக்கொள்ளாமல் எங்காவது போய்விட்டால் அவன் திரும்பி வருகிற வரைக்கும் அவருக்கு நெஞ்சு பக் பக்கென்று அடித்துக்கொள்கிறது.

இப்படியே மனைவி, சுற்றத்தார், நண்பர் முதலியவர்களிடம் உறவு வைத்து ஒட்டி வாழும்போது அவர்களால் நமக்கு வரும் சுகதுக்கங்கள் பெருகி விடுகின்றன. சுகத்தைக் காட்டிலும் துக்கமே அதிகமாக இருக்கிறது.

மனிதர்கள் கிடக்கட்டும். மாடு கன்று வளர்த்து வருகிறோம். மாடு இளைத்துப்போனால் அதற்காக வருந்து

கிறோம். அது சரியாகப் பால் கொடுக்காவிட்டால் நமக்குக் கவலை உண்டாகிறது. நாய், பூனை ஆகியவைகளை வளர்க்கிறவர்களும் அப்படித்தான் பல சமயங்களில் கவலைப்படுகிறார்கள்.

மனிதர்கள், மாடு எல்லாம் ஜீவப்பிராணிகள். ஜடமாக உள்ள வீடு, நிலம், தங்கம் முதலியவற்றை நாம் வைத்து ஆள்கிறோம். வீடு ஒழுகுகிறது. அதுபற்றி அதற்குக் கவலை இல்லை. 'நாம் ஓட்டையாகி விட்டோமே! இந்த ஓட்டையை யார் அடைக்கப் போகிறார்கள்?' என்று வீடு கவலைப்படுவதுண்டா? அதுதான் ஜடமாயிற்றே! ஆனால் நாம் அதற்காகக் கவலைப்படுகிறோம். 'எப்போது இதைச் செப்பம் செய்வது? அதற்குரிய பணம் வேண்டுமே!' என்று கவலைப் படுகிறோம். நிலம் இருந்தால் அதற்குச் சரியானபடி நீர்ப் பாசனம் அமைய வேண்டுமே, மழை பெய்ய வேண்டுமே, உரம்போட வேண்டுமே, நன்றாக விளைய வேண்டுமே என்று கவலைப்படுகிறோம்.

பணம் இருந்தால் கவலை போகுமே என்று எண்ணலாம். மடியிலே கனம் இருந்தால் வழியிலே பயம் என்று சொல்வார்கள். நம்முடைய பணத்தை யாராவது அடித்துக் கொண்டு போய் விடுவார்களோ என்ற பயம் உண்டாகிறது. செலவு செய்தால் பணம் குறைந்து விடுகிறதே என்ற அங்கலாய்ப்பு உண்டாகிறது. இப்படிப் பார்த்துக் கொண்டே போனால், எதை எதை நம்முடையதென்று அபிமானம் வைத்துப் பற்றிக் கொள்கிறோமோ, அந்த அந்தப் பொருளினால் நமக்கு அதிகப் பொறுப்பும், அது காரணமாக அதிகத் தொல்லைகளும் உண்டாகின்றன என்று தெரியவரும். எதையும் பற்றாமல் இருந்தால் அத்தகைய தொல்லைகள் இல்லை,

"யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்"

என்று திருவள்ளுவர் சொல்கிறார்.

நமக்கு உடல், பொருள், ஆவி என்ற மூன்றும் உடைமைப் பொருள். இந்த மூன்றையும் விடாமல் பிடித்து வைத்துக் கொண்டிருக்கிறோம். இவற்றால் வரும் இன்ப துன்பங்களை அநுபவிக்கிறோம். இன்பம் மட்டும் இருந்தால் குற்றம் இல்லை; துன்பமும் கூட வருகிறதே! உண்மையில் துன்பந்தானே அதிகமாக இருக்கிறது? இந்தத் துன்பத்தை நீக்க என்ன வழி? உடலை விட்டுவிடுவதா? உயிரைத் தியாகம் செய்வதா?

அநாதைக் குழந்தை ஒன்று தாய் தந்தையரால் கைவிடப்பட்டு நடுத்தெருவிலே நிற்கிறது. அதற்குப் பசி வருகிறது. உணவு கொடுப்பார் இல்லை. அதனால் அழுகிறது. அப்போது தயைமிகுந்த ஒருவர் அந்தக் குழந்தையை எடுத்துச் சென்று வளர்க்கத் தொடங்குகிறார். இப்போது குழந்தைக்கு என்ன என்ன வேண்டுமோ அவை யாவும் கிடைக்கின்றன. உணவு வேண்டுமே, உடை வேண்டுமே என்ற கவலையே அதற்கு இல்லை. அவ்வாறு நாமும் குழந்தை ஆகிவிட வேண்டும்.

குழந்தைக்குச் சொத்துச் சேர்க்க வேண்டும் என்ற எண்ணம் இல்லை. தன்னிடம் உள்ள ஆடை ஆபரணங்களைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்ற கவலை கிடையாது. அதைப்பற்றிய எல்லாப் பொறுப்பையும் அதன் தாயே மேற்கொள்ளுகிறாள். அது விளையாட்டுப் புத்தியில் சாப்பாட்டை மறந்திருந்தாலும் அவள் உரிய நேரத்தில் சோறு ஊட்டுகிறாள். 'வீட்டில் அரிசி இல்லை, நாளைக்கு நாம் எப்படிச் சாப்பிடப் போகிறோம்?' என்று அந்தக் குழந்தை கவலை அடைகிறதா? உடை அழுக்காகி விட்டது. அது பற்றி அந்தக் குழந்தை கவலை அடைகிறதில்லை. அதற்காக எல்லாக் கவலைகளையும் அதன் தாய் படுகிறாள்.

நாம் குழந்தையாகி விடுவது எப்படி? நம்முடைய தாயைப் பற்றிக் கொண்டு எல்லாப் பொறுப்பையும்

அவளிடம் ஒப்பித்து விட்டு, என்ன செய்வோம் என்று கவலைப்படாமல் இருக்கவேண்டும். அதுதான் குழந்தைத் தன்மை. நாளைக்கு என்ன செய்வது என்றோ, நேற்று இப்படிக் கஷ்டப்பட்டோமே என்றோ குழந்தை கவலை உறுவதில்லை. அதைப் போல நாம் இருக்கவேண்டும். தாயின் பொறுப்பில் வளரும் குழந்தைக்கு இந்தக் கவலைகளே இல்லை. நாமும் ஒரு நல்ல தாயின் பொறுப்பில் வளரத் தொடங்கி விட்டால் கவலைகளே நம்மை அண்டா.

குழந்தை என்றால் தாய் இருக்கவேண்டும் சேயும் தாயும் ஒருவகை இணைப்பு. நாம் ஆண்டு முதிர்ந்து, இந்த உடம்பைத் தந்த தாயை இழந்திருப்போம். நமக்கே குழந்தைகள் இருப்பார்கள். இந்த நிலையில் நாம் தாய்க்கு எங்கே போவது? நாம் எப்படிக் குழந்தையாவது?

இந்த உடம்புக்குத் தாயாக இருந்தவள் இறந்து போயிருக்கலாம். ஆனால் நம்முடைய உயிருக்குத் தாயாக ஒருத்தி இருக்கிறாள். அவள் என்றும் அழியாதவள். அவளுடைய தாய்த் தன்மையாகிய கருணை என்றும் அழியாதது அவளைப் பற்றிக்கொண்டு நம்முடைய பொறுப்புக்களையெல்லாம், உடல் பொருள் ஆவி யாவற்றையும், அவளிடம் சமர்ப்பித்து, நாம் குழந்தையாகி விட்டால் அப்போது நமக்குக் கவலையே இல்லாமல் போய்விடும்,

ஆற்றைக் கடக்கிறவன் அதில் நடந்து செல்ல நினைத்தால் எத்தனை ஆழம் இருக்கிறது என்று ஆராயவேண்டும். தன் உயரத்துக்கு மேலே இருந்தால் அங்கெல்லாம் நீந்த வேண்டுமென்றும், குறைவாக இருந்தால் நடந்தே போகலாமென்றும் தீர்மானம் செய்யலாம், ஆனால் ஒரு தோணி கிடைத்துவிட்டால் ஆறு எவ்வளவு ஆழமாக இருந்தால் தான் என்ன? அவன் நடக்கவேண்டியதும் இல்லை; நீந்த வேண்டியதும் இல்லை. சுகமாகத் தோணியில் உட்கார்ந்து கொண்டால் போதும்.

அவ்வண்ணமே ஸ்ரீ மாதாவாகிய அம்பிகையிடம் எல்லாவற்றையும் ஒப்படைத்து விட்டு அவளுடைய கருணைத்தோணியில் ஏறி அமர்ந்துவிட்டால் நாம் பிறவிக் கடலையே கடந்துவிடலாம்.

தரையிலே நடக்கிற குழந்தைதான் மேடு பள்ளம் பார்த்து நடக்க வேண்டும்; கல், முள் குத்துமே என்று கவனத்துடனும் கவலையுடனும் நடக்கவேண்டும். நெடுந் தூரமானால் நடக்க முடியாமல் கால் வலிக்கும். தாயின் இடுப்பில் ஏறிக்கொண்ட குழந்தைக்கு இந்தத் தொல்லைகள் இல்லை. எல்லாவற்றையும் அன்னை பார்த்துக் கொள்வாள். அந்தக் குழந்தை தாயின் இடையிலே அமர்ந்து விடும் முயற்சியைச் செய்ய வேண்டும். அமர்ந்து விட்டால் வழியைப் பற்றியோ தூரத்தைப் பற்றியோ கவலைப்பட வேண்டிய அவசியம் இல்லை.

இவ்வாறு, தமக்குள்ள எல்லாவற்றையும் அம்பிகைக் குச் சமர்ப்பணம் செய்தவர் அபிராமிபட்டர். அவருக்கு இப்போது பொறுப்பே இல்லை. நல்லதானாலும் கெட்ட தானாலும் அவர் கவலைப்படுவதில்லை. அவர்தாம் தாயின் இடுப்பில் ஏறிக்கொண்ட குழந்தை ஆயிற்றே! அபிராமி யம்மையின் கருணைத் தோணியில் ஏறிக்கொண்டவர் அல்லவா? அவருக்கு இருந்த பொறுப்பை எல்லாம், பாரத்தை எல்லாம், அம்பிகை ஏற்றுக்கொண்டு விட்டாள். 'யோகக்ஷேமம் வஹாம்யஹம்' என்று பகவான் கீதையில் சொன்னபடி, அம்பிகை அவருடைய சுகதுக்கங்களை ஏற்று அவரைத் தாங்குகிறாள். இந்த நிலையிலிருந்து அபிராமி அன்னையின் குழந்தையாகிய அபிராமிபட்டர் பாடுகிறார்.

அம்பிகை அனந்த கல்யாண குணங்களை உடையவள். அந்தக் குணங்களெல்லாம் சேர்ந்த மலைபோல இருக்கிறாள். அவள் என்றும் அழியாதவள். அந்தக் குணக்குன்றின்மேல்

ஏறி நிற்கிறார் அபிராமிபட்டர். கீழே என்ன நடந்தால் அவருக்கு என்ன? ஒருவன் ஒரு குன்றின்மேல் நிற்கிறான். அடிவாரத்தில் யானைகள் போரிடுகின்றன. அவன் கீழே இருந்தால் ஆபத்து வரும். குன்றின் மேலல்லவா நிற்கிறான்? யானை போரிடுவதை வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கிறான். "குன்றேறி யானைப்போர் கண்டற்றால்" என்று இந்த உவமையை ஆளுகிறார், திருவள்ளுவர். அழியாத குணக்குன்றின் சார்பு பெற்ற குழந்தையாகிய அபிராமி பட்டர் மிக உயரத்தில் இருக்கிறார். அவரை இந்தப் பிரபஞ்சச் சுகதுக்கங்கள் பாதிப்பதில்லை.

அழியாத குணக் குன்றே!

என்று அம்பிகையை விளிக்கிறார். குணநிதி (604) என்று லலிதா சகசிரநாமம் அம்பிகையைச் சொல்லும்.

அம்பிகை கருணை நிறைந்தவள். அவளுடைய கருணைக்கு எல்லையே இல்லை. எல்லை இல்லாததற்குக் கடலை உவமை சொல்வது வழக்கம். அவள் கருணைக்கடலாக விளங்குகிறாள். அந்தக் கடலில் மிதக்கிறவர் அபிராமி பட்டர். நிலத்தில் மேடு பள்ளம் இருப்பது போலக் கடலில் இல்லை. அம்பிகையின் கருணைக் கடலில் துன்பமே இல்லை.

அருட் கடலே!

என்று அடுத்தபடி அம்பிகையை அழைக்கிறார். 'கருணாரஸ ஸாகரா' என்று அம்பிகையை லலிதா சகசிரநாமம் கூறும் (326); அவ்யாஜ கருணாமூர்த்தி (992), தயாமூர்த்தி (581), ஸாந்த்ர கருணா (197) என்றெல்லாம் போற்றும்.

அபிராமி அம்பிகையின் குழந்தை இந்தப் பக்தர், அந்த அபிராமியே ஒருவருக்குக் குழந்தையாக அவதாரம் செய்திருக்கிறாள். 'எங்கள் தாயே குழந்தையாக இருந்

திருக்கிருள். குழந்தையாக இருந்து தாய் தந்தையரின் வாத்ஸல்யத்தை அநுபவித்தவள் அவள்' என்ற கருத்தோடு,

இமவான் பெற்ற கோமளமே!

என்று அடுத்தபடி சொல்கிருர். இமாசல அரசன் பெற்ற பார்வதி தேவி அவள். மிக்க மென்மையான வடிவமும், மென்மையான திருவுள்ளமும் கொண்டவள். கோமலாகாரா, கோமலாங்கி என்று அவளுக்குத் திருநாமங்கள் உண்டு என்பதை முன்பே பார்த்தோம்.

அம்பிகையை இவ்வாறு அழைத்த குழந்தை தன் நிலையைச் சொல்கிறது.

'நல்லது வரட்டும், தீயது வரட்டும்; எனக்கு ஒன்றும் தெரியாது. நல்லது வந்தால் அதை அறிந்து இன்புறுவதும், தீயது வந்தால் அதை அறிந்து துயரமுறுவதும் எனக்கு இப்போது இல்லை. அவை வருவதே எனக்குத் தெரியாதே! கீழே தரையில் நடந்தால்தானே கல் இருக்கிறது, பூ இருக்கிறது என்று தெரிந்து கொள்ள முடியும்? அன்னையின் இடுப்பில் இருக்கின்ற குழந்தைக்கு என்ன தெரியும்?'' என்று சொல்வதுபோல் அவர் கூறுகிருர்.

நன்றே வருகினும் தீதே விளைகினும்
நான் அறிவது
ஒன்றேயும் இல்லை.

ஏன்? 'எனக்குத்தான் ஒரு பொறுப்பும் இல்லையே! எல்லாவற்றையும் உனக்கே பாரம் என்று சமர்ப்பணம் செய்து விட்டேனே! என் மூட்டையையெல்லாம் உன்னிடம் கொடுத்துவிட்ட பிறகு அது கனக்கிறதே என்று அழ வேண்டிய அவசியம் ஏது?''

உனக்கே பரம்.

இப்படி வாயால் சொல்லிச் சும்மா இருந்துவிட்டாரா? எல்லாவற்றையும் அன்னைக்கு அர்ப்பணம் செய்துவிட்டார்.

ஸர்வ பரித்யாகம் செய்து விட்டார். என்றைக்கு அன்னை யின் பெருமையை அறிந்துகொண்டு அவளுக்குப் பக்தராகி அவளுடைய கருணைக்குப் பாத்திரர் ஆனரோ அன்றே அவர் எல்லாவற்றையும் அன்னையிடம் சமர்ப்பித்து விட்டார். ஓர் அணுவைக்கூட மிச்சம் வைக்காமல் எல்லா வற்றையும் அளித்து விட்டார். அதனால் இதுவரையில் தம்முடையவை என்று உரிமையாகப் பற்றிக் கொண்டிருந்த வற்றால் உண்டான நன்மை தீமைகள் அவருக்கு இல்லாமல் போயின.

எனக்கு உள்ள எல்லாம்
அன்றே உனது என்று
அளித்துவிட்டேன்.

இப்போது அவருக்கு ஏது கவலே? எல்லாம் அவள் பொறுப்பாகிவிட்டன. ஆத்ம சமர்ப்பணம் பண்ணின அவருக்குச் சுகதுக்கங்களுக்கு அப்பாற்பட்ட ஆனந்த அநுபவம் உண்டாயிற்று. எல்லாம் மறந்து தாய் மடியில் உறங்கும் குழந்தைபோல் ஆகிவிட்டார். பாட்டு முழுவதும் பார்ப்போம்.

நன்றே வருகினும், தீதே
விளேகினும் நான் அறிவது
ஒன்றேயும் இல்லே; உனக்கே
பரம்;எனக்கு உள்ளஎல்லாம்
அன்றே உனதுஎன்று அளித்துவிட்
டேன்;அழி யாதகுணக்
குன்றே, அருட்கடலே, இம
வான்பெற்ற கோமளமே!

[என்றும் அழிவற்ற குணமலேயே, கருணை சமுத்திரமே, பருவதராசன் பெற்ற மெல்லியலே, நன்மையே வந்தாலும்,

தீமையே விளைந்தாலும் அவற்றை அடியேன் சிறிதும் அறிவ தில்லை; எல்லாம் உனக்கே பாரம்; எனக்கு உள்ள உடல் பொருள் ஆவி எல்லாவற்றையும் என்னை நீ ஆட்கொண்ட அப்போதே உன்னுடையனவென்று சமர்ப்பித்துவிட்டேன். இனி எனக்கு ஏது கவலை?

பரம்-பாரம். அன்றே: நெஞ்சறி சுட்டு. உனது: தொகுதி ஒருமை.]

இந்தப் பாடலோடு, "அன்றே என்றன் ஆவியும் உடலும்உடைமை எல்லாமும், குன்றே அனையாய் என்னை ஆட் கொண்ட போதே கொண்டிலையோ, இன்றோர் இடையூ றெனக்குண்டோ எண்டோள் முக்கண் எம்மானே, நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே" என்ற அருமைத் திருவாசகப் பாடல் ஒப்பு நோக்கு தற்குரியது.

அம்பிகையை நம்பி ஆத்மசமர்ப்பணம் பண்ணினவர் களுக்குச் சுகதுக்கங்களுக்கு அற்பாற்பட்ட நிலை உண்டாகும் என்பது கருத்து.

இது அபிராமி அந்தாதியில் 95-ஆவது பாட்டு.

# வழிபாட்டின் பயன்

எல்லாவற்றையும் அன்னைக்கே அர்ப்பணம் செய்து விட்டு, இன்ப துன்பங்களால் பாதிக்கப்படாத நிலை பெற்றதைச் சொன்ன அபிராமிபட்டரை, "சுவாமி, உங்களைப் போலச் சர்வ பரித்தியாகம் செய்ய எல்லோ ராலும் முடியுமா? அம்பிகை உங்களைப் போன்றவர்களுக்கு அருள் பாலிப்பதோடு நின்றுவிட்டால் மற்றவர்களெல்லாம் என்ன செய்வார்கள்? எல்லோருக்கும் தாயாக இருக்கும் எம்பெருமாட்டி மற்றவர்களைப் புறக்கணிக்கலாமா? அப்படி யானால் அவளுக்குச் சர்வலோக ஜனனி என்ற திருநாமம் பொருந்தாதே!" என்று கேட்கிறோம்.

அபிராமிபட்டர், "அன்னையை எல்லோரும் தொழ லாம். அவரவர்கள் சக்திக்கு ஏற்றபடி வழிபடலாம். அதற்கும் பயன் உண்டு" என்கிறார். "எங்களால் இயன்ற அளவுக்கு வழிபட்டால் பயன் உண்டு என்கிறீர்களே! நாங்கள் சிற்றறிவும் சிறு செயலும் உடையவர்கள். நாங்கள் செய்யும் வழிபாடும் சிறியதாகத்தானே இருக்கும்? அப்படியானால் எங்களுக்கு மிகவும் சிறிய லாபந்தானே உண்டாகும்?" என்று மறுபடியும் கேட்கிறோம்.

ஒரு தாய்க்கு வெவ்வேறு பருவத்திலுள்ள குழந்தைகள் பலர் இருக்கிறார்கள். பிராயத்தாலும் அறிவினாலும் வேறு பட்டவர்கள் அவர்கள். அவர்கள் தம் தாயினிடம் அன்பு செய்கிறார்கள். வயசுவந்த பிள்ளை புடைவை வாங்கித்

தருகிறான். சின்னப் பிள்ளை ஏதாவது யாத்திரம் வாங்கித் தருகிறான். சின்னக் குழந்தை தனக்கு யாரோ கொடுத்த பழத்தைக் கொடுக்கிறது. இவ்வாறு அவரவர்கள் சக்திக்கு ஏற்றபடி பிள்ளைகள் பண்டங்களைத் தருகிறார்கள். தாய் அந்தப் பண்டங்களின் உயர்வு தாழ்வைப் பார்க்க மாட்டாள். அவர்களுடைய அன்பையே பார்ப்பாள். அவர்களை ஆசீர்வதிப்பாள். அவ்வண்ணமே ஸ்ரீ மாதா வாகிய அபிராமியம்மை தம்முடைய சக்திக்கு ஏற்றபடி உபாசிப்பவர்களுக்கு, தம்மால் இயன்றதை மறைக்காமல் செய்து வழிபடுகிறவர்களுக்கு, நன்மையைத் தருவாள். இவ்வாறு அபிராமிபட்டர் விடை பகருகிறார். அந்த விடையின் கருத்தே ஒரு பாடலாக வடிவெடுத்திருக்கிறது,

அம்பிகை தன்னை வழிபடுகிறவர்களுக்கு அருள்புரிவாள் என்று சொல்ல வந்த ஆசிரியர், அம்பிகையை நினைக்கும் போது அந்தப் பெருமாட்டியினுடைய திருக்கோலம் அவர் கண்முன் வந்து நிற்கிறது. அம்மையைப் பலவாருகச் சொல்லிவிட்டு, அப்புறந்தான் அவளைத் தொழுபவர் பெறும் பயனைச் சொல்லுகிருர். அன்னையிடம் அவருக்கு இருக்கும் உள்ள நெகிழ்ச்சி, அவளை ஓரிரண்டு வார்த்தை களாலே சுட்டிச் சொல்லிவிட்டுப் போக இடம் கொடுப்ப தில்லை. அவளைப் பற்றிச் சொல்லத் தொடங்கினுல் சொற்கள் உணர்ச்சி மிகுதியினுல் ஊற்றுப் போலச் சுரந்து வருகின்றன. எப்படி அம்பிகையைச் சொல்கிருர், பாருங்கள்.

அம்பிகை மிகவும் மென்மையானவள்; தன்னை விரும்பிச் சிறிதளவு வழிபட்டாலுங்கூட அவள் அதை மதித்து நலம் செய்பவள். வைரத்தை நிறுக்கும் தராசு ஒரு துரும்பைக்கூட எடைபோடும் அல்லவா? அவள் அன்பர் களுக்கு வளைந்து கொடுக்கும் கொடியைப் போன்றவள்; மென்மையும் கொடி போன்று ஒசியும் மேனியும் வாய்ந் தவள். ஆகவே,

கோமள வல்லியை

என்று தொடங்குகிருர் ஆசிரியர்.

அவள் எழுந்தருளியிருக்கும் இடமும் மென்மையானது. மென்மைக்கு எடுத்துக்காட்டாக இருப்பது மலர். "மலரினும் மெல்லிது" என்று திருக்குறள் கூறும். அம்பிகை தாமரை மலரில் எழுந்தருளியிருக்கிருள். தாமரை மலரில் வெளியில் உள்ள இதழ்களுக்குப் புற இதழ்கள் என்று பெயர். அவை சற்றுக் கனமுள்ளனவாக இருக்கும். உள்ளே உள்ள அக இதழ்கள் மென்மையாக இருக்கும். அம்பிகை அந்த அக இதழ்களின்மேல் வீற்றிருக்கிருள். 'பத்மாஸனு' என்பது அவள் திருநாமங்களில் ஒன்று. "அம்புயமேல் திருந்திய சுந்தரி" (5) என்று இவ்வாசிரியரே பாடியிருக்கிருர்.

தாமரைக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் அம்பிகையின் பெருமையைத் தேவிக்குரிய ஆகமங்கள் சொல்கின்றன. யாமளாகமம் என்பது அம்பிகையின் பெருமையைக் கூறுவது. அந்த ஆகமத்தில் படர்ந்திருக்கும் கொடிபோல இருக்கிருள் அன்னே.

அல்லியந் தாமரைக் கோயில் வைகும்
யாமள வல்லியை.

"பரவுவன யாமளமோ", "யோக யாமளத்திருள்" (தக்கயாகப்பரணி, 113, 136) என்று ஒட்டக்கூத்தர் பாடுவார்.

அவள் மாசற்றவள்; கேடில்லாதவள்.

ஏதம் இலாளை.

அவளுடைய பேரழகைச் சொல்லால் வருணிக்க முடியாது; ஓவியத்தில் எழுதிக் காட்ட முடியாது. "அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி" என்று இந்த ஆசிரியரே பாடியிருக்கிருர். அப்பிராகிருதமான அந்தப்

பேரழகை எந்த ஓவியனால் எழுத முடியும்? அவள் எழுதரிய திருமேனியை உடையவள்.

அம்பிகை வெவ்வேறு வர்ணமுள்ள திருமேனிகளை உடையவளாகக் காட்சி தருவாள். சியாமளாம்பிகையாக எழுந்தருளும்போது அவள் திருமேனி சியாமநிறம் அல்லது பச்சை நிறம் பொருந்தியதாக இருக்கும். அந்தக் கோலத்தை மகாகவியாகிய காளிதாசர் 'சியாமளா தண்டகம்' என்ற நூலில் பாராட்டிப் பாடியிருக்கிறார்.

'ச்யாமளா' என்பது அம்பிகையின் திருநாமங்களில் ஒன்று. இதயகமலமாகிய அநாகதத்தில் எழுந்தருளி யிருக்கும் ராகினி என்ற யோகினியின் திருமேனி சியாமள வர்ணமுடையது. அந்த வடிவத்தில் அம்பிகையே எழுந் தருளியிருக்கிறாள். இவ்வாறு எழுதரிய திருமேனியையுடைய சியாமசுந்தரியை எண்ணுகிறார் இந்தப் பக்தர்.

எழுதரிய சாமள மேனி.

அன்னை அபிராமி எல்லாக் கலைகளுக்கும் தலைவி. 'சதுஷ் ஷஷ்டி கலாமயி' என்றும், 'கலாவதி' என்றும் (236, 327) அம்பிகைக்குரியனவாக உள்ள திருநாமங்கள் இந்த உண்மை யைப் புலப்படுத்துகின்றன. மயில் தன்னுடைய கலாபத் தைப் பரப்பி அழகுபெற நடிப்பதைப்போல அம்பிகை எல்லாக் கலைகளையும் தன்னிடமிருந்து புறப்படவிட்டு நலம் செய்கிறாள். ஆகையால் அவளை அடுத்தபடி,

சகலகலா மயில்தன்னை

என்கிறார் இந்த அன்பர். முன்பும், "வருணச் சங்கலை செங் கைச் சகல கலாமயில்" (21) என்று இவரே பாடியுள்ளார். கலா என்பதற்குக் கலை என்றும் மயில்கலாபம் என்றும் பொருள்கள் உண்டு; "கலாமயிற் கூத்தயர் குளிர் புனம் மொய்த்திட்ட சாரல்" (மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்)

இவ்வாறு உள்ள அம்பிகையை மூன்று கரணங்களாலும் தொழ வேண்டும். அவரவர்கள் சக்திக்கு ஏற்றபடி வஞ்சகம் இன்றித் தொழ வேண்டும். அரசராக இருந்தால் விரிவாக ஆராதனை நடத்தலாம். செல்வர்களானால் தம் செல்வத்துக்கு ஏற்ற வகையில் வழிபாடு இயற்றலாம். ஏழை கூடத் தன்னால் இயன்ற ஒரு பச்சிலையைப் போட்டு வணங்கலாம். அவரவர்கள் தம்மால் இயன்ற அளவுக்கு வழிபடவேண்டும். "இயல்வது கரவேல்" என்று ஔவைப் பாட்டி சொன்னாள். அது எல்லாச் செயலுக்கும் ஒக்கும். தம்மால் ஆகும் முழு அளவுக்கு அம்பிகையினிடம் ஈடுபட்டு வழிபட வேண்டும். அப்போது கிடைக்கும் பயன் என்ன?

நாம் செய்யும் வழிபாடு நம் சக்திக்கு ஏற்ப அமைவது. நம் சக்தியோ சிறியது. ஆனாலும் அம்பிகை அதைப் பெரிதாக ஏற்றுக்கொண்டு மிகப் பெரிய பயனைத் தருவாள். அரச பதவியைத்தான் உலகத்தில் சிறந்த பதவியாக அந்தக் காலத்தில் நினைத்தார்கள். அந்த அரச பதவியையே அம்பிகை அருள்வாள். ஒரு நாட்டுக்கு அரசராக இருக்கும் பதவியும் அன்று; ஒருலகத்துக்குத் தலைவராக இருக்கும் பதவியும் அன்று. ஏழுலகங்களுக்கும் அதிபராக இருக்கும் பெரிய பதவி சித்திக்கும். அம்பிகைக்கு, ஸாம்ராஜ்ய தாயினி என்ற திருநாமம் ஒன்று உண்டு; ஏழுலக ஸாம்ராஜ்யத்தையே அவள் தந்துவிடுவாளாம்.

தம்மால்
ஆம் அளவும் தொழுவார்
ஏழு பாருக்கும் ஆதிபரே.

யார் யாரையோ தொழுது என்ன பயன்? சர்வலோக சக்கரவர்த்தியாக ஆக்கும் பேரருளைச் செய்யும் மகாராஜ்ஞி அன்னை. அவள் நாம் செய்யும் வழிபாட்டின் அளவை அளந்து பயன் தருவதில்லை. நம்முடைய அந்தரங்க சுத்தியை, வஞ்சகமின்றி வழிபடும் பக்தியை, நம்மால்

ஆகும் அளவுக்கு உபாசனை செய்யும் ஆர்வத்தை, உணர்ந்து அவற்றைப் பாராட்டிப் பிறரால் வழங்குவதற்கரிய பெரிய பேற்றை அளிப்பாள்.

கோமள வல்லியை, அல்லியந்
  தாமரைக் கோயில்வைகும்
யாமள வல்லியை, ஏதம்
  இலாளை, எழுதரிய
சாமள மேனிச் சகல
  கலாமயில் தன்னைத்தம்மால்
ஆம்அள வும்தொழு வார்எழு
  பாருக்கும் ஆதிபரே.

[மெல்லிய கொடி போன்றவளை, அகவிதழையுடைய தாமரையாகிய ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும், யாமளாகமத்தில் புகழால் படர்ந்திருக்கும் கொடி போன்றவளை, குற்றம் இல்லாதவளை, ஓவியத்தில் எழுதுதற்கு அரிய சாமள நிறம் பொருந்திய சகல கலைக்கும் தலைவியாகிய மயில் போன்றவளை, தம்மால் இயன்ற அளவும் உபாசிப்பவர்கள் ஏழுலகங்களுக்கும் அரசர்களாவார்கள்.

கோமளம்-மென்மை அல்லி-அகவிதழ். யாமள வல்லியை-யாமளாகமத்தால் புகழ்ப்பெறும் வலிமையை உடையவளை என்றும் சொல்லலாம். யாமளாகமம் என்னும் பந்தரில் படர்ந்து நின்று, அதனை அணுகுவோர்க்குப் பயன் தரும் கொடி போன்றவள். ஏதம்-குறை, கேடு. சாமளம்-பச்சை, ஆம் அளவும்என்றது, தலையளவைக் குறித்தபடி; எவ்வளவு அதிகமாக ஈடுபடலாமோ அந்த அளவுக்கு ஈடுபடுவதைக் குறிப்பது. அதிபர் என்றது செய்யுளை நோக்கி ஆதிபர் என்று நீண்டது.]

அம்பிகையைத் தொழுபவர் சிறந்த பதவியை அடைவார் என்பது கருத்து.

இது அபிராமி அந்தாதியில் 96-ஆவது பாட்டு.

# அம்பிகையின் அடியார்கள்

**பொ**துவாக அம்பிகையை வணங்குபவர்கள் பெரிய பதவியை அடைவார்கள் என்று சொன்ன அபிராமிபட்டர் அப்பெருமாட்டியை உபாசனை செய்து நலம் பெற்றவர்களை நினைத்துப் பார்க்கிறார். எத்தனையோ காலமாக அன்னையை வழிபட்டுப் பேறு பெற்றவர்கள் கணக்கில் அடங்காத வர்கள். திரிமூர்த்திகளும் அவளுடைய அடியார் குழுவைச் சேர்ந்தவர்கள். இந்திராதி தேவர்கள் அன்னையை வழிபட்டு நலம் பெற்றவர்கள். மனு முதலிய பேரரசர்கள் அவளுடைய வழிபாட்டைச் செய்து பயன்பெற்றவர்கள். அகத்தியர் முதலிய முனிபுங்கவர்கள் அந்தப் பெருமாட்டியை வணங்கி அருள் பெற்றவர்கள்.

அன்னையின் மந்திரத்துக்கு ஸ்ரீ வித்யை என்று பெயர். அதைக் கண்டுபிடித்து உலகுக்கு உணர்த்தியவர்கள் பன்னிரண்டு பேர்கள். அவர்களில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையாக அந்த மந்திரத்தை வெளியிட்டார் கள். அப்படிப் பன்னிரண்டு பிரஸ்தாரங்கள் அமைந்தன. அந்தப் பன்னிருவரை,

மனு: சந்த்ரக் குபேரச்ச லோபாமுத்ராச்ச மன்மத:
அகஸ்திரக்னி:ஸூர்யச்ச இந்த்ர:ஸ்கந்த சிவஸ்ததா
க்ரோதபட்டாரகோ தேவ்யா த்வாதசாமி உபாஸகா:

என்ற சுலோகம் இனம் காட்டுகிறது.

சிவபெருமான், முருகன், இந்திரன், சூரியன், சந்திரன், அக்கினி, குபேரன், மன்மதன், மனு, அகஸ்தியர், துர்வாசர், லோபாமுத்திரை என்னும் பன்னிருவர் அம்பிகையை வழிபட்டுப் பேறு பெற்றவர்களில் சிறந்தவர்கள்.

அபிராமிபட்டர் பன்னிரண்டு அடியார்களைச் சொல்லுகிறார். மேலே சொன்ன பன்னிரண்டு பேர்களில் சிலருக்குப் பதிலாக வேறு சிலரைச் சொல்கிறார். அவர் கூறும் உபாசகர்கள், சூரியன், சந்திரன், அக்கினி, குபேரன், இந்திரன், பிரமன், சிவபெருமான், திருமால், அகத்தியர், முருகன், கணபதி, காமன் என்பவர்கள். முன்னே சொன்னவர்களில் மனு, துர்வாசர், லோபாமுத்திரை என்னும் மூவருக்கும் பதிலாக, பிரமன், திருமால், கணபதி என்னும் மூவரைச் சொல்கிறார். இந்தப் பன்னிருவரைச் சொல்லிவிட்டு, 'இவர்கள் முதலிய எண்ணில்லாதவர்கள் அம்பிகையை வழிபடுவார்கள்' என்று முடிக்கிறார். அதனால் அந்தப் பன்னிரண்டோடு அடியார் வரிசை நின்றுவிடுகிறது என்று கொள்ள வேண்டிய அவசியம் இல்லை எனத் தெரிய வரும். முன்னே சொன்னவர்களில் இந்தப் பாட்டில் சொல்லாமல் விட்டுப் போனவர்களும் வேறு எண்ணில் அடங்காதவர்களும் அம்பிகையின் உபாசகர் குழுவில் சேர்ந்தவர்களே. இனி அபிராமிபட்டர் சொல்வதைப் பார்க்கலாம்.

ஆதித்தன், அம்புலி, அங்கி

என்று முச்சுடர்களையும் முதலில் சொல்கிறார். பானு மண்டல மத்யஸ்தா (275), சந்த்ர மண்டல மத்யகா (240), வந்ஹி மண்டல வாஸிநி (352) என்ற அம்பிகையின் திருநாமங்கள் அவள் மூன்று சுடர்களுக்கும் நடுவில் இருந்து ஒளிர்கிறாள் என்பதைத் தெரிவிக்கின்றன. அவை அவளை வழிபட்டமையால் அவளுக்கு இருப்பிடமாக விளங்கும்

பேற்றைப் பெற்றன என்று கொள்வதில் தவறு இல்லை. சந்த்ர வித்யா (239) என்பது லலிதாம்பிகையின் திருநாமங்களில் ஒன்று. 'சந்திரனால் வழிபடப் பெற்ற வித்தையின் வடிவாக இருப்பவள்' என்பது அந்தத் திருநாமத்துக்குரிய பொருள். அதனால் சந்திரன் வழிபட்டது தெரியவரும்.

குபேரன், அமரர்தம் கோன்

என்று அடுத்தபடி சொல்கிறார். 'ராஜராஜார்ச்சிதா' (305) என்பது அன்னையின் திருநாமங்களில் ஒன்று. ராஜ ராஜன் என்பது குபேரனுடைய பெயர். அவனால் அருச்சிக்கப் படுபவள் என்று அதனால் தெரியவருகிறது. அம்பிகை எழுந்தருளியிருக்கும் சிந்தாமணிக் கிருகத்தைச் சுற்றியுள்ள பிராகாரங்களில் 14, 15-ஆம் பிராகாரங்களுக்கு இடையே மணிபத்திரன் முதலிய யக்ஷர்களுடன் இருந்து குபேரன் அம்பிகையை வழிபடுகிறான் என்று லலிதா ஸ்தவரத்னம் சொல்கிறது.

போதில் பிரமன், புராரி, முராரி

என்று மும்மூர்த்திகளைப் பிறகு சொல்கிறார்.

அம்பிகைக்கு, 'ப்ரம்ஹோபேந்த்ராதி தேவஸம்ஸ்துத வைபவா' (83) என்று ஒரு திருநாமம் உண்டு. பிரமன், உபேந்திரனாகிய திருமால், இந்திரன் முதலிய தேவர்களால் நன்றாகப் புகழப்படும் வைபவத்தையுடையவள் அவள். முன்னே சொன்ன இந்திரனையும், இங்குள்ள பிரமனையும், திருமாலையும் அந்தத் திருநாமத்தில் காணலாம். இந்த மூவர்களும் அம்பிகையைத் தொழுவதை ஹரிப்ரம்ஹேந்த்ர ஸேவிதா (297) என்ற மற்றொரு திருநாமமும் தெரிவிக்கிறது.

புராரியாகிய சிவபெருமான் அம்பிகையைப் போற்றுவதை இந்த ஆசிரியரே பலஇடங்களில் சொல்லியிருக்கிறார்.

சிவாராத்யா (406), மஹாபைரவ பூஜிதா (231) என்பன அம்பிகை சிவபிரானால் ஆராதிக்கப்படுபவள் என்பதைப் புலப்படுத்தும் திருநாமங்கள்.

முரனை அழித்தவனாகிய திருமால் அம்பிகையை வழி படுவதை, 'கமலாக்ஷ நிஷேவிதா' (558) என்னும் திருநாமம் காட்டும்.

பொதிய முனி
காதிப் பொருபடைக் கந்தன்,
கணபதி, காமன்

என்று பின்னும் நால்வரை அம்பிகையின் அடியார்களாக எடுத்துச் சொல்கிறார், தாபஸாராத்யா (359) என்று தவ முனிவர்களால் அன்னை போற்றப்படுவதைச் சொல்லும் திருநாமத்தால், அகத்தியர் முதலிய முனிவர்கள் வழிபடு வதை உணரலாம். குமார கணநாதாம்பா (442) என்னும் நாமம் குமாரனுக்கும் கணநாதனுக்கும் தாயாக இருக்கும் செய்தியைச் சொல்கிறது. அவ்விருவரும் அன்னையைப் போற்றி அருள் பெறுவது இயல்பே.

ஸ்ரீவித்யோபாஸகர்களில் காமன் முக்கியமான இடத்தை வகிக்கிறவன். ஸ்ரீ வித்யையில், தொடங்கும் எழுத்தின் வேறுபாட்டால் காதிவித்யை, ஹாதி வித்யை என்று இருவகை உண்டு. அவற்றில் காதி வித்யைக்கு ரிஷி காமராஜனாகிய மன்மதன். காம பூஜிதா (375), காம ஸேவிதா (586) என்ற திருநாமங்கள் அம்பிகையைக் காமன் வழிபட்டதைக் குறிக்கும்.

இவ்வாறு பன்னிரண்டு பேர்களைக் குறிப்பிட்டுவிட்டு, 'இப்படி அம்பிகையை உபாசனை செய்து சாதனை புரிந்து நலம் பெற்ற புண்ணிய மூர்த்திகள் எண்ணிக்கையற்ற வர்கள்' என்று சொல்லி முடிக்கிறார் அபிராமிபட்டர்.

முதல்
சாதித்த புண்ணியர் எண்ணிலர்
போற்றுவர் தையலையே.

'முதல்' என்பதற்குள் தேவர்கள், முனிவர்கள், அரசர்கள், கற்புடை மகளிர் எனப் பல வகையினரும் அடங்குவர். கந்தர்வர்கள் வழிபடுவதால் கந்தர்வ ஸேவிதா (636) என்றும், மனு பூஜித்தமையால் மனு வித்யா (238) என்றும், தேவர்களாலும் முனிவர்களாலும் துதிக்கப்படுவதால் தேவர்ஷிகண ஸங்காத ஸ்தூயமானாத்ம வைபவா (64) என்றும் அம்பிகைக்குத் திருநாமங்கள் உண்டு. அறிவுமிக்க ஞானிகள் வழிபடுவதால் புதார்ச்சிதா (825) என்றும், நல்லவர்கள் வழிபடுவதால் சிஷ்ட பூஜிதா (411) என்றும், அந்தணர்கள் வணங்குவதால் த்விஜ ப்ருந்த நிஷேவிதா (423) என்றும் பேர்களைப் பெறுகிறாள் அன்னை. அரம்பை முதலியோர் வழிபடுவதால் ரம்பார்தி வந்திதா (741) என்றும், இந்திராணி தொழுவதால் புலோம ஜார்ச்சிதா (547) என்றும், லோபா முத்திரை அருச்சிப்பதால் லோபாமுத்ரார்ச்சிதா (647) என்றும் அம்பிகையைப் புகழ்வார்கள். அவளை மூவுலகும் வணங்குவதால் த்ரிஜகத் வந்த்யா (627) என்ற திருநாமம் வழங்குகிறது. இப்படிச் சொல்லிக் கொண்டே போகலாம்; அதற்கு எல்லையே இல்லை.

அறுபத்து நாலு கோடி யோகினிகள் அம்பாளைச் சேவிக்கிறார்களாம்; மஹா சதுஷ்ஷஷ்டி கோடி யோகினி கண ஸேவிதா (237) என்ற திருநாமம் அதைச் சொல்கிறது.

இவற்றை யெல்லாம் எண்ணியே, 'எண்ணிலர் போற்றுவர் தையலையே' என்றார். தையல் என்பது பாலாம்பிகை என்ற திருநாமத்தை நினைவூட்டுவது; இளமையை உடையவள் என்பது பொருள். எல்லா

வகையான அலங்காரங்களையும் உடையவள் என்றும் பொருள் கூறலாம்.

ஆதித்தன், அம்புலி, அங்கி,
குபேரன், அமரர்தம்கோன்,
போதில் பிரமன், புராரி,
முராரி, பொதியமுனி,
காதிப் பொருபடைக் கந்தன்,
கணபதி, காமன்முதல்
சாதித்த புண்ணியர் எண்ணிலர்
போற்றுவர் தையலையே.

[சூரியன், சந்திரன், அக்கினி, குபேரன், தேவராஜனாகிய இந்திரன், தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன், திரிபுரங்களை அழித்த சிவபிரான், முரனை அழித்த திருமால், பொதியமலையில் இருக்கும் முனிவராகிய அகத்தியர், பகைவரை மோதிப் பொருகின்ற வேலாயுதத்தை உடைய முருகன், கணபதி, மன்மதன் முதலாகச் சாதனை செய்து நலம்பெற்ற புண்ணியவான்கள் எண்ணில் அடங்காதவர்கள் பாலாம்பிகையாகிய அபிராமியை வழிபடுவார்கள்.

அங்கி-அக்கினி. போது-தாமரை. காதி-மோதி.]

அம்பிகையின் அடியவர்கள் கணக்கில் அடங்காதவர்கள் என்பது கருத்து.

அபிராமி அந்தாதியில் 97-ஆம் பாடல் இது.

# கரந்தது எங்கே?

**கா**தல் வாழ்க்கையில் களவு என்றும் கற்பு என்றும் இரண்டு பிரிவுகள் உண்டு. அடுப்பாரும் கொடுப்பாரும் இல்லாமல், இறைவன் திருவருளே துணையாக நின்று கூட்டுவிக்க, பண்பும் எழிலும் பொருந்திய ஒருவனும் ஒருத்தியும் தாமே சந்தித்து ஒன்றுபட்டுக் காதல் செய்யும் நிகழ்ச்சியைக் களவுக்காதல் என்பார்கள். இவ்வாறு ஒன்றுபட்ட காதலர்கள் பின்பு திருமணம் செய்துகொண்டு இல்லறம் நடத்துவார்கள். இதைக் கற்பொழுக்கம் என்று சொல்வார்கள்.

அகப்பொருள் நூல்களில் களவொழுக்கம் கற்பொழுக்கம் என்ற இரண்டையும் மிக விரிவாகச் சொல்லியிருக்கிறார்கள். சங்க நூல்களில் பெரும்பாலானவை இந்த இருவகை ஒழுக்கங்களையும் சொல்வனவே. மதுரையில் எழுந்தருளியிருக்கும் இறைவனே இந்தக் காதலைப் பற்றிய இலக்கண நூல் ஒன்றை அருளியிருக்கிறான். அறுபது சூத்திரங்கள் அடங்கிய அதற்கு, இறையனார் அகப்பொருள் என்று பெயர்; பெரும்பாலும் களவுக் காதலைப்பற்றிய செய்திகள் மிகுதியாக இருப்பதனால் அதற்குக் களவியல் என்றும் ஒரு பெயர் உண்டு. சைவ சமயாசாரியர்களில் ஒருவராகிய மாணிக்கவாசக சுவாமிகள் இந்தக் காதற் கதையைச் சொல்லும் ஒரு நூலைத் திருவாய் மலர்ந்தருளியிருக்கிறார். அதற்குத் திருச்சிற்றம்பலக் கோவை

யார் என்றும், திருக்கோவையார் என்றும் பெயர்கள் வழங்கும்.

இவ்வாறு இலக்கணங்களாலும் இலக்கியங்களாலும் உணரப்படும் காதல் வாழ்க்கையில், திருமணம் செய்து கொண்டு வாழும் கற்புக்காலத்தில் காதலர்கள் கூடுதலும், பிரிதலும், ஊடுதலும் இருக்கும். கூடுவதும் பிரிவதும் களவு கற்பு என்ற இரண்டு வகை வாழ்க்கைகளிலும் இருப் பினும், ஊடல் என்பது கற்புக்காலத்தில் மட்டுந்தான் நிகழும்; கணவனும் மனைவியுமாக வாழும் காலத்தில் கணவனுடைய செயலில் ஐயமுற்று மனைவி சினந்து அவனுடன் பேசாமல் இருப்பாள்; இதுதான் ஊடல்.

> ''ஊடுதல் காமத்துக் கின்பம்; அதற்கின்பம்
> கூடி முயங்கப் பெறின்''

என்று இந்த ஊடலைத் திருவள்ளுவர் சிறப்பித்துப்பேசுவார். ஊடுவதால் இன்பம் மிகுதியாகிறதாம்; பட்டினி கிடந்த பிறகு உண்பதில் சுவை கூடிவருவதுபோல, ஊடிப் பிறகு கூடுவதில் இன்பம் மிகுதியாக இருக்கும்.

மனைவி ஊடுவதும், கணவன் அவள் ஊடலைத் தணிப் பதற்குப் பலவகையாக நயந்து பேசுவதும், பணிவிடை செய்வதும் வழக்கம். அறையினுள் நிகழும் ஊடலால் விளையும் விளைவுகளும் அதனைத் தணிப்பதற்குக் கணவன் செய்யும் செயல்களும் எல்லையை மிஞ்சிப் போவதும் உண்டு. காவியங்களில் அத்தகைய காட்சிகளைக் காணலாம்.

சிவபெருமானும் அம்பிகையும் தெய்வத் தம்பதிகள். அவர்கள் கணவனும் மனைவியுமாக இருந்து, உலகத்தார் எவ்வாறு கணவனும் மனைவியுமாக இணைந்து வாழ வேண்டும் என்பதைக் காட்டுகிறார்கள்.

"தென்பால் உகந்தாடும் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பால் உகந்தான், பெரும்பித்தன் காணேடி!
பெண்பால்உகந்திலனேல், பேதாய், இருநிலத்தோர்
விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ"

என்ற திருவாசகப் பாட்டு இந்தக் கருத்தைக் குறிப்பிக் கிறது.

கற்பு வாழ்க்கை முறைகளை யெல்லாம் இந்தத் திவ்ய தம்பதிகள் நடத்திக் காட்டுகிருர்கள். இறைவன் தந்த நெல்லைக் கொண்டு அம்பிகை அறம் வளர்க்கிருள். கற் பொழுக்கத்திற்குச் சிறப்பாக இருக்கும் ஊடலையும் அம்பிகை மேற்கொள்கிருள். அவளுடைய திருவிளையாடல் களில் அதுவும் ஒன்று.

அன்னை சிவபெருமானுடன் ஊடும் காட்சிகளைப் புலவர்கள் வருணித்திருக்கிருர்கள். வடமொழி தென் மொழி நூல்களில் அந்தக் காட்சிகளைக் காணலாம். அம்பிகையின் ஊடலைத் தணிப்பதற்காக இறைவன் பல உபசாரங்களைச் செய்வதும், கடைசியில் அவளை வணங்குவதுமாகிய நிகழ்ச்சிகளையும் அத்தகைய இடங்களில் காணலாம்.

அபிராமிபட்டர், அபிராமியம்மையின் ஊடலைத் தணிக்க எம்பெருமான் அவளைப் பணிவதாகப் பல இடங் களில் சொல்லியிருக்கிருர். அறையில் நிகழும் இரகசியச் செயலானாலும் அந்தரங்கம் அறிந்த குழந்தைக்கு அது தெரி கிறது. அன்னையின் குழந்தைதானே அபிராமிபட்டர்?

'அபிராமியம்மையின், மறை நான்கினுக்கும் அந்த மான சரணரவிந்தம், எம்பிரானுடைய திருமுடியின்மேல் கண்ணிபோல விளங்குகிறது' என்று ஓரிடத்தில் சொன்னுர்.

''மறை நான்கினுக்கும்
தான்அந்தம் ஆன சரணு ர
விந்தம் தவளநிறக்
கானம்தம் ஆடரங் காம்எம்பி
ரான் முடிக் கண்ணியதே'' (11)

இது குறிப்பாக இறைவன் அம்பிகையின் அடியை வணங்குவதைத் தெரிவிக்கிறது,

வேறு ஒரு பாட்டில், 'இறைவனுடைய திருமுடியின் மேலுள்ள பிறையின் மணம் அம்பிகையின் திருவடியில் மணக்கிறது' என்கிருர்.

''திங்கட் பகவின் மணம் நாறும் சீறடி.'' (35)

இதுவும் அம்பிகையின் திருவடி தன் தலைமேல் பதியும் படி இறைவன் அவளை வணங்குவதைக் குறிப்பாகப் புலப் படுத்துகிறது.

வேறு ஒரு பாட்டில், 'நின் மலர்ப் பாதத்தை என் தலைமேல் வைத்து ஆண்டு கொண்டாயே; அந்தப் பாதம் சிவபெருமானுடைய கொன்றைவார் சடையின்மேலே இருப்பதாயிற்றே! அதைவிட என் தலை நல்லதா?' என்று கேட்கிருர்.

''பனிமாமலர்ப் பாதம்வைக்க
மாலினும் தேவர் வணங்கநின்
ருேன்கொன்றை வார்சடையின்
மேலினும்......சால நன்ருே
அடியேன்முடை நாய்த்தலையே?'' (60)

இங்கும் இறைவன் அம்பிகையைப் பணிதலைக் குறிப் பாகச் சொன்னுர்.

இவற்றிற்கெல்லாம் மேலாக, தெளிவாகவே இறைவன் அம்பிகையின் ஊடலைத் தணிப்பதற்கு வணங்கும் செய்தியை ஒரு பாட்டில் சொல்கிருர். அதை இப்போது பார்ப்போம்.

அம்பிகையின் பெருமையைச் சொல்லி அவளை விளிக்கிருர். அன்னை சத்தியம் பேசும் நல்லவர்கள் நெஞ்சில் நித்தியவாசம் செய்வாள். உண்மையை உணர்ந்துகொண்ட மெய்ஞ்ஞானிகளின் உள்ளத்தே உறைவாள். எது உண்மையானது, எது பொய்யானது என்று உணர்வதே மெய்யறிவு. அவ்வாறு அறியாதது அறியாமை, மருள். அதனுல் மேலும் மேலும் பிறப்பு வளர்கிறது.

"பொருள்அல்லவற்றைப் பொருள்என்று உணரும்
மருளான்ஆம் மாணுப் பிறப்பு"

என்பது திருக்குறள்.

அம்பிகை மெய்யையே எண்ணும் அன்பர்களின் நெஞ்சில் புகுந்து நிற்பாள். அவ்வாறின்றி வஞ்சகமும் பொய்ம்மையும் நிறைந்தவர்களின் நெஞ்சில் புகமாட்டாள்.

அவள் இளமையை உடையவள்: பூங்குயில் போல இனிமையான குரலை உடையவள். முள்ளுச் செடிகளிலும் பயனற்ற மரங்களிலும் குயில் சென்று தங்காது. மலரையும் கனிகளையும் உடைய மாமரங்களிலும் அவைபோன்ற பிற மரங்களிலும் தங்கும். அதுபோல மெய்மணக்கும் நெஞ்சில் தங்குபவள் அம்பிகை. அன்பர்கள் நெஞ்சில் இனிய ஓசை புலப்படும்படி உறைவாள். அம்பிகையை மனம் ஒருங்கித் தியானம் செய்பவர்களுக்கு இன்னெலிகள் கேட்கும். இவற்றையெல்லாம் எண்ணி அபிராமிபட்டர் அம்பிகையை விளிக்கிருர்.

மெய்வந்த நெஞ்சின் அல்லால் ஒருகாலும்
விரகர்தங்கள்
பொய்வந்த நெஞ்சில் புகல் அறியா
மடப் பூங்குயிலே,

இனி, இறைவன் அம்பிகையின் ஊடலை நீக்கும் பொருட்டுச் செய்யும் செயல்களை நினைக்கிருர். அம்பிகையினிடமே ஒரு வினைவச் சமர்ப்பிக்கிருர்.

அம்பிகையின் ஊடலைத் தணிக்கும்பொருட்டு இறைவன் அவளை நெருங்குகிறான். அம்பிகை படுத்திருக்கிறாள். பெருமான் அவளை அணுகி மெல்ல அவள் காலை வருடுகிறான். அப்படியும் அம்பிகையின் ஊடல் தணியவில்லை. வேறு வகையில் அவள் உள்ளத்தைக் குழைக்க வழியில்லையென்று கண்டு அவள் திருவடித் தாமரைகளை வணங்குகிறான்; தன் தலையில் அணிந்து கொள்கிறான்!

சங்கரன் திருக்கரத்தில் தீயையும் திருமுடியில் கங்கையையும் வைத்திருக்கிறான். அம்மையின் திருவடி தாமரை போல மென்மையாகவும் தண்மையாகவும் இருக்கும். கையில் அக்கினியை ஏந்தியபடியே சிவபெருமான் அந்தத் திருவடியை வருட முடியுமா? அதை எங்கேயாவது வைத்துவிட்டுக் கையில் அதனால் உறைத்த சூடு நன்றாக ஆறின பிறகுதானே வருட முடியும்? அதை எங்கே மறைத்து வைத்தான்?

அதன் பிறகு பெருமான் அவளை வணங்குகிறான். அப்போது அவன் தலையில் கங்கை இருந்தால் மாற்றாளைக் கண்டு அம்பிகைக்குக் கோபம் வராதோ? ஊடல் பின்னும் அதிகமாகுமேயன்றிக் குறையாது. இதை அறிந்துகொண்டு அந்தக் கங்கையையும் அப்பெருமான் எங்கேயாவது மறைத்து வைத்திருப்பான். அது எங்கே மறைந்தது?

கையினால் திருவடியை வருடத் தடையாக இருப்பது தீ; விழுந்து வணங்கும்போது தடையாக இருப்பது கங்கை. இந்த இரண்டையும் மறைத்து வைக்காமல் வந்திருந்தால் இறைவனுடைய முயற்சி பலிக்காது; அம்பிகையின் ஊடல் தீராது. ஆகவே அந்த இரண்டையும் எங்கேனும் மறைத்துவைத்த பிறகே இறைவன் தன் துணைவியின் ஊடலைத் தீர்க்க முனைந்திருப்பான். அவற்றை எங்கே மறைத்து வைத்திருப்பான்? அவைகளாக மறைந்து விட்டனவா? எங்கே மறைந்தன?

குழந்தைக்குத் தந்தையிடம், கண்ட கேள்வியைக் கேட்பதற்குப் பயமாக இருக்கும். தாயிடம் சர்வ சுதந்தரத்தோடு எதையும் கேட்கும். அபிராமிபட்டராகிய குழந்தை தன்னுடைய சந்தேகத்தைத் தாயிடமே கேட்கிறது; 'அப்பா உன்னிடம் வரும்போது அந்தத் தீயும் கங்கையும் எங்கே மறைந்து போயின?' என்று கேட்கிறது. அந்தக் கேள்வியே பாடலாக வடிவெடுக்கிறது.

தைவந்து நின்அடித் தாமரை
சூடிய சங்கரற்குக்
கைவந்த தீயும் தலைவந்த
ஆறும் கரந்ததெங்கே?
மெய்வந்த நெஞ்சின்அல் லால்ஒரு
காலும் விரகர்தங்கள்
பொய்வந்த நெஞ்சில் புகல்அறி
யாமடப் பூங்குயிலே!

[உண்மை உணர்வு பொருந்திய அன்பர்களுடைய உள்ளத்தில் அல்லாமல் வஞ்சகர்களுடைய பொய் நிரம்பிய உள்ளத்தில் ஒருகாலும் புகுதலை அறியாத, இளமையையுடைய பூங்குயில் போன்ற தாயே, நின்னுடைய பாத தாமரைகளை நின் ஊடலைத் தணிக்கும்பொருட்டு வருடி, அதனால் ஊடல் நீங்காமையை அறிந்து, பிறகு அந்தப் பாத தாமரைகளை வணங்கித் தலைக்கு அணியாகச் சூடிய சங்கரனுக்கு, அப்போது கையில் இருந்த தீயும் தலையில் இருந்த மாற்றாளாகிய கங்காநதியும் ஒளிந்துகொண்ட இடம் எங்கே?

தைவந்து-தழுவி; வருடி. சூடிய-தலையில் அணிந்த; பணிந்ததைக் குறித்தபடி. சங்கரன்: இன்பத்தைச் செய்கிறவன் என்னும் பொருளுடைய திருநாமம். கைவந்த-கையில் வந்து தங்கிய. தீ அன்னையின் திருவடியைச் சுடும்

ஆதலின் அது மறைந்தது. ஆறு-கங்கை. கங்காதேவி அம்பிகைக்கு மாற்றாள்; அவளைக் கண்டால் அம்பிகையின் ஊடல் அதிகமாகும்; ஆதலால் அவளும் மறையவேண்டி யது அவசியமாயிற்று. கரந்தது-மறைந்த இடம். விரகர்-வஞ்சகமான உபாயங்களை உடையவர்கள்; விரகு-உபாயம். விரகத்தை யுடையவர் என்றும் பொருள் கொள்ளலாம். புகல்-புகுதல்; தன் தோற்றமும் அருளும் நன்கு விளங்கப் புகுந்திருந்தல். மடமை-இங்கே, இளமை. பூங்குயில்-பொலிவுபெற்ற குயில்; பூ மரங்களில் வாழும் குயில்.]

அம்பிகையின் திருவருளைப் பெறுவதற்காகச் சிவபெரு மானே ஏங்கிப் பணிகிறார் என்பது கருத்து.

அபிராமி அந்தாதியில் உள்ள 98-ஆவது பாடல் இது.

# நான்கு நிலை

அம்பிகை பல பல உருவங்களில் எழுந்தருளி அன்பர்களுக்கு அருள் பாலிக்கிறாள்; வெவ்வேறு திருவவதாரங்களைச் செய்கிறாள். மிகவும் சூட்சுமப் பொருளாக உள்ள எம்பெருமாட்டி மிக மிக உயர்ந்த இடங்களில் இருக்கிறாள். மெல்ல மெல்ல உலகத்தவருக்கு அனுக்கிரகம் புரிய இறங்கி வருகிறாள். பிறகு தன்னுடைய அன்பர்களின் உள்ளே நின்று நிலவுகிறாள். அப்படி வரும் எல்லா நிலையையும் கணக்கெடுத்துக் காட்ட யாரால் முடியும்?

ஒரு வகையாக அம்பிகையின் நான்கு வேறு நிலைகளை எடுத்துச் சொல்ல வருகிறார் ஆசிரியர். அவளை முதலில் பர்வதராஜ புத்திரி என்று குறிக்கிறார். பழங் காலத்தில் சிவபிரானுக்குப் பார்வதி தேவியை இமவான் தாரை வார்த்து அளிக்க, அப்பெருமானை அவள் மணந்து கொண்டாள். அம்பிகை தன் காதில் பொன்னாலான கனத்த குழையை அணிந்திருக்கிறாள். அந்தத் தோடு மாங்கல்யத்தைப் போன்றது. அம்பிகை நித்திய சுமங்கலியாதலின் அந்தக் கனங்குழை அவள் திருச்செவியில் என்றும் நீங்காமல் இருக்கும். பரமேசுவரனைத் திருமணம் செய்துகொண்டதை நினைந்த அபிராமிபட்டருக்கு அந்தப் பெருமாட்டியின் நித்திய மங்கல வாழ்வு நினைவுக்கு வருகிறது. அதன் அடையாளமாகிய தாடங்கத்தையே குறிப்பிட்டு அம்பிகையை அடையாளம் காட்டுகிறார்.

கயிலாயருக்கு அன்றுஇமவான் அளித்தகனங்குழையே!

அந்தக் காதணியின் பெருமையைச் சங்கராசாரியார் சௌந்தரிய லஹரியில் ஒரு சுலோகத்தில் சிறப்பித்திருக்கிருர். 'உன்னுடைய தாடங்க மகிமையினுல்தான் ஆலால விஷத்தை உண்டும் சிவபெருமான் அழிவில்லாதவராக இருக்கிருர்' என்று அந்தச் சுலோகம் கூறுகிறது. ஆகவே கைலாசபதியாகிய பரமேசுவரனைத் தன் பதியாகப் பெற்ற அம்பிகை எப்போதும் கனங்குழையை அணிந்தவளாக, நித்திய மங்கலமுடையவளாக, விளங்குகிருள். ஸுமங்கலி என்பது அம்பிகையின் திருநாமங்களில் ஒன்று.

இனி அம்பிகை எவ்வெவ்வாறு விளங்குகிருள் என்பதை ஆசிரியர் சொல்கிருர்.

அம்பிகை தன்னுடைய பரிவார தேவதைகளுடன் பரதேவதையாக இருக்கும் திருக்கோயிலுக்குச் சிந்தாமணிக் கிருகம் என்று பெயர். அதைச் சுற்றிக் கதம்பவனம் இருக்கிறது. அந்தக் கதம்பவனம் இருக்கும் இடம் ஒரு தீவு; அதற்கு மணித்வீபம் என்று பெயர். அதைச் சுற்றிக் கற்பகக் காடு இருக்கிறது. இவை யாவும் அமுதக்கடலின் நடுவே அமைந்துள்ளன. சௌந்தர்யலஹரியில், "ஸுதாஸிந்தோர்மத்யே" எனத் தொடங்கும் சுலோகத்தில் இந்தச் செய்திகள் வருகின்றன. 'அமுதக் கடலின் நடுவில் கற்பக வனத்தினிடையே கதம்ப மரங்கள் அடர்ந்த இடத்தின் நடுவில் ஒரு மணிமண்டபம் உண்டு; அங்கே சிந்தாமணிக் கிருகம் என்ற திருக்கோயிலில் அம்பிகை இருக்கிருள்' என்று பைரவ யாமளம் என்ற நூல் சொல்கிறது.

அம்பிகை எழுந்தருளிய ஸ்ரீபுரத்தில் இருபத்தைந்து மதில்கள் உண்டு; இருபத்தைந்து தத்துவங்களைக் குறிப்பவை அவை. அந்த மதில்கள் மணிகளாலும் தங்கம்,

வெள்ளி முதலிய உலோகங்களாலும் ஆனவை. தங்க மதிலுக்கும் வெள்ளி மதிலுக்கும் இடையே கதம்பவனம் இருப்பதாக லலிதா ஸ்தவரத்னம் என்ற நூல் கூறும்.

கதம்பவன வாஸிநி (60) என்பது அம்பிகையின் ஆயிர நாமங்களில் ஒன்று. 'கதம்ப கானனவாஸா' என்று லலிதா திரிசதியில் வருகிறது.

இத்தகைய கதம்பவனத்தினிடையே அம்பிகை எழுந்தருளியிருக்கிருள். நல்ல மரங்களிடையே வாழும் குயிலைப் போல அம்பிகை அங்கே எழுந்தருளியிருக்கிருள். அம்பிகையின் குரல் மிகவும் இனிமையானது; குயிலின் ஒலியைப் போல இனிமையைத் தருவது. காட்டில் இருப்பதாலும், இனிய குரலை உடைமையாலும் அம்பிகையைக் குயிலாக உருவகம் செய்வது பொருத்தமாக இருக்கும். அன்னை கதம்பவனக் குயில்.

## குயிலாய் இருக்கும் கடம்பாடவியிடை.

தன்னுடைய இராசதானியாகிய ஸ்ரீபுரத்தில் எழுந்தருளியிருக்கும் திரிபுரசுந்தரியான அன்னை அவ்வப்போது பல அவதாரங்களை எடுப்பாள். அப்படி எடுத்த அவதாரங்களுக்குள் ஒன்று இமய அரசன் மகளாக, பார்வதியாக, தோற்றியது. பர்வதராஜ புத்திரியாக அவதரித்தமையால் அவளுக்குப் பார்வதி, ஹைமவதி, கிரிஜா, சைலேந்த்ர தநயா என்னும் திருநாமங்கள் வழங்குகின்றன. முருகப் பெருமான் திருவவதாரம் செய்வதற்கு இந்த அவதாரம் காரணமாக இருந்தமையால் இது மிகச் சிறப்பானது. இதனல் அம்பிகையைப் பார்வதி என்று வழங்குவதே மிகுதியாக இருக்கிறது.

இமாசலத்தில் திருவவதாரம் செய்தபோது அங்கே இளம் பெண்ணுக அம்பிகை விளையாடினுள். அப்போது மயில் தன் தோகையை விரித்து அழகாக ஆடுவது போன்ற

வனப்புடன் விளங்கினுள். மயில் அழகான பறவை. பச்சை நிறமும், மென்மையும், அழகிய நடையும் உடையது. பார்வதியாக அவதாரம் செய்தபோது அம்பிகை பச்சை நிறமுடையவளாக இருந்தாள். அவள் மெல்லியல்; மெத்தென்ற நடையை உடையவள். மலையின்மேல் மயில் வளர்வது இயல்பு. இத்தனை வகைகளாலும் அம்பிகை மயிலைப்போல இருக்கிருள். அவள் இமயத்து மயில்.

கோல இயல்

மயிலாய் இருக்கும், இமயாசலத்திடை.

திரிபுரசுந்தரியாக, இராஜராஜேசுவரியாக, ஸ்ரீபுரத்தில் எழுந்தருளிய பெருமாட்டியே இமாசலராஜன் புதல்வியாக, பார்வதியாக, திருவவதாரம் செய்தாள். ஸ்ரீபுரத்தில் இருந்ததைவிடப் பார்வதியாக வந்தபோது சற்றே சமீபத்தில் வந்து விட்டாள். தன் கருணையினுல் மிக உயரத்திலிருந்து பூவுலகத்தில் உயர்ந்த இடத்துக்கு வந்தாள். இது அவளுடைய கருணையைக் காட்டுகிறது.

இதோடு நிற்கவில்லை அன்னை. பின்னும் இறங்கி வருகிருள்; யாவரும் காணும்படி இறங்கி வருகிருள். வானத்திலே தோன்றும் செங்கதிரவனுக ஒளி விடுகிருள். ஒளி தருகின்ற சுடர்கள் யாவுமே அவளுடைய திருவுருவங்களே. பானுமண்டல மத்யஸ்த்தா என்பது லலிதாம்பிகையின் திருநாமங்களுள் ஒன்று. சூரியமண்டலத்தின் நடுவே நின்று சுடர்கின்றவள் அவள். "சூழுஞ் சுடர்க்கு நடுவே கிடந்து சுடர்கின்றதே" (47) என்று இவ்வாசிரியரே பாடியிருக்கிருர். அம்பிகைக்கு அஷ்டமூர்த்தி (662) என்பது ஒரு திருநாமம். பஞ்சபூதங்கள், சூரியன், சந்திரன், உயிர் என்னும் எட்டும் அவள் வடிவங்கள். ஆகவே சூரியனும் அவள் வடிவந்தான். உதயசூரியனில் அவளுடைய திருமேனிச் சோதியையே காணலாம். "உதிக்கின்ற

செங்கதிர்" (1) என்று இவ்வாசிரியர் இந்த நூலைத் தொடங்கினார் அல்லவா? ஆகவே ஸ்ரீபுரத்தில் எழுந்தருளி யிருக்கும் அம்பிகை, தேவரும் முனிவரும் காண இமாசல புத்திரியாக இறங்கி வந்தவள், யாவரும் காண வானத்தில் கதிரவனைச் சுடர்விடுகிறாள்.

வந்து உதித்த வெயிலாய் இருக்கும் விசும்பில்.

இனி, அடுத்து மிகவும் நெருக்கமாக வந்து அருள் செய்யும் நிலையைச் சொல்ல வருகிறார். உபாசகர்களுடைய இதய கமலத்தில் அவள் எழுந்தருளி இன்பம் தருவாள். யோகிகளுக்குச் சகசிரார கமலத்தில் வீற்றிருந்து காட்சி யளிப்பாள். ஆறு ஆதாரங்களும் கடந்த நிலையில் இருப்பது சகசிரார கமலம். ஒவ்வோர் ஆதார கமலத்திலும் அவள் வெவ்வேறு வடிவங்களோடு விளங்குவதைப் பற்றிப் பல சமயங்களில் பார்த்தோம். அந்தக் கமலங்களில் அம்பிகை அன்னம்போல எழுந்தருளியிருப்பாள். அன்னம் ஹம்ஸ மந்திர சொரூபம்; நன்மையையும் தீமையையும் பிரித்தறி யும் பறவை; தூய வெண்ணிற வடிவமுடையது; மிக உயர்ந்த இமாசலத்து மானஸ வாவியில் நீந்துவது; தரை, நீர், வானம் என்ற மூன்றிடங்களிலும் சஞ்சரிப்பது. அம்பிகையும் நன்மை தீமையை வேறு பிரித்தறிந்து நலம் செய்பவள்; சுத்த சத்துவகுணத்தினருக்குப் புலப்படுபவள்; மிக உயரமான நிலையில் இருப்பவள்; கருணையினால் அந்தர் மத்திய பாதலமென்னும் மூன்றிடங்களிலும் சஞ்சரிப் பவள்; ஆதலின் அவளைக் கமலத்து அன்னம் என்று சொல்லலாம்.

கமலத்தின்மீது அன்னமாம்.

தேவி சம்பந்தமான ஆகமங்களை அறிந்தவர்களுக்கு அவள் திரிபுரசுந்தரியாக ஸ்ரீபுரத்தில் இருப்பவள் என்ற செய்தி தெரியவரும். புராணங்களைப் படித்தவர்களுக்குச்

சிவபெருமானை மணப்பதற்காக அன்னை பார்வதியாகத் திருவவதாரம் செய்தது தெரியும். சகசிரநாமம் முதலிய வற்றை உணர்பவர்களுக்கு அவள் கதிரவனாக இருப்பது புலனாகும். பக்தி செய்து உபாசிப்பவர்களுக்கு அவள் இதய கமலம், சகசிரார கமலம் முதலியவற்றில் இலங்குவது அநுபவத்தில் உணரவரும்.

யாவருக்கும் புலனாகாமல் எங்கோ இருக்கும் ஸ்ரீபுரத்தில் எல்லாச் சக்திகளுக்கும் அதிதேவதையாக, எல்லா மூர்த்திகளுக்கும் தலைவியாக, எல்லாத் தொழில் களுக்கும் காரணபூதையாக, இராஜராஜேசுவரி எழுந்தருளி யிருப்பதை முதலில் சொன்னார். அங்கே அவளுடைய பரத்துவம் வெளியாகிறது. பிறகு தேவர்கள் வேண்டு கோளுக்கு இணங்கி ஒரு குமாரனைத் தோற்றுவிக்கத் தானே இமாசலராஜன் குமாரியாகத் தோன்றினாள். இது அன்னையின் விபவத்தைச் சொல்வது. பிறகு அவள் உலகத்தவருக்கு அநுக்கிரகம் செய்யச் சூரியனாக எழுந்தருளி நலம் செய்வதைச் சொன்னார், இது பிராகிருத சம்பந்தியாகும் அவள் லீலையைச் சொல்கிறது. கடைசியில் உபாசகர்களுடைய உள்ளக் கமலத்தில் வசிப்பதைச் சொன்னார். இது அன்னையின் அந்தர்யா மித்துவத்தைத் தெரிவிக்கிறது. இந்த நான்கும் கருணை மிகுதியினால் படிப்படியாக இறங்கி வருவதைத் தெரி விக்கின்றன.

கதம்பவனக் காட்டில் புகுவாருக்கு அடர்த்தியினால் ஒன்றும் தெரியாதபோது, குயில் தன் குரல் காட்டித் தன் இருப்பைப் புலப்படுத்துவதுபோல, அம்பிகை கதம்பவன வாசினியாக இருக்கிறாள். பனி மூடிக்கிடக்கும் இமயத்தில், காணும் இடம் எல்லாம் ஒரே வெண்மையாக இருக்க, அங்கே வண்ண அழகு பொலிய மயிலைப்போலப் பார்வதி தேவியாக விளங்குகிறாள். வானம் விரிந்து பரந்திருந்தும் ஒன்றும் தோன்றாமல் இருக்கும்போது, அங்கே உதயமாகி யாவரும் காண எல்லாவற்றையும் புலப்படுத்தும் கதிர

வளுக அன்னை சுடர் விடுகிருள். பக்தியினுல் உருகி உபாசனை செய்பவர்களுடைய உள்ளக்கமலத்தில், எங்கோ பறக்கும் அன்னம் தனக்குரிய இடத்தைக் கண்டு பிடித்துக் களிப்புடன் வீற்றிருப்பதைப்போல, இதயகமல வாசினியாக அம்பிகை வீற்றிருக்கிருள். காட்டில் குயிலும், மலையில் மயிலும், வானில் கதிரவனும், கமலத்தில் அன்னமும் தத்தமக்கு ஏற்ற இடங்களில் அமைந்தவை. அந்தப் பொருத்தத்தை நோக்கியே அம்பிகையைக் குயில் முதலியனவாக உருவகம் செய்தார்.

குயிலாய் இருக்கும் கடம்பா
டவியிடைக் கோலஇயல்
மயிலாய் இருக்கும் இமயா
சலத்திடை; வந்துஉதித்த
வெயிலாய் இருக்கும் விசும்பில்;
கமலத்தின் மீதுஅன்னமாம்;
கயிலா யருக்குஅன்று இமவான்
அளித்த கனங்குழையே.

[கைலாசபதியாகிய பரமேசுவரனுக்குப் பழைய காலத்தில் இமாசல அரசன் திருமணம் செய்துகொடுத்த, கனமான பொற் குழையை அணிந்தவளாகிய அம்பிகை, கடம்ப வனத்தில் குயிலாக வீற்றிருப்பாள்; இமயமலையில் அழகும் நல்லியல்பும் உடைய மயிலாக உலாவிக்கொண்டிருப்பாள்; வானத்தில் வந்து உதயமாகும் கதிரவளுக ஒளி பரப்பிக் கொண்டு இருப்பாள்; நினைப்பாரது உள்ளக் கமலத்தின் மேல் அன்னமாக எழுந்தருளியிருப்பாள்.

கடம்பாடவி-கதம்பவனம். கண்ணுக்கு அழகு தரும் பறவை யாதலின், 'கோல இயல் மயில்' என்றார். வெயில்-சூரியன்: ஆகுபெயர். கமலம்-உள்ளக்கமலம் முதலியன. அன்று: பண்டறி சுட்டு. கனம் குழை: அன்மொழித் தொகை; எழுவாய்.

இந்த நான்கு நிலைகளிலும், பார்வதியாக இருப்பதையே பெரும்பாலோர் அறிவார்களாதலின், 'கயிலாயருக்கு அன்று இமவான் அளித்த கனங்குழை' என்று எழுவாயாக்கினர்.]

அம்பிகையின் பல்வேறு நிலைகளைச் சொல்லி அவள் கருணையினால் இவ்வாறு விளங்குகிறாள் என்பதைப் புலப்படுத்தினர்.

இந்தப் பாடல் அபிராமி அந்தாதியில் 99-ஆவது செய்யுள்.

# அகக்காட்சி

அம்பிகையை உபாசிப்பவர்கள் மூன்று கரணங்களாலும் அவளை வழிபடுவார்கள். புறத்திலே அன்னையின் திருவுருவத்தைக் கண்டு கண்டு களிப்பதோடு நில்லாமல், அந்த உருவத்தை உள்ளத்தே வைத்துத் தியானித்து இன்புறுவார்கள். பல காலம் தியானம் செய்து பழகுவதனால் தேவியின் திருவுருவம் சலனமின்றி உள்ளே தோன்றும். அலையில்லாத தண்ணீரில் கீழே உள்ள பொருள்கள் தெளிவாகத் தெரிவதுபோல, சலனம் இல்லாமல் ஒருமுகப்பட்டுத் தியானத்தில் ஈடுபட்டவர்களுக்கு அம்மையின் திருவுருவம் தெளிவாகக் காட்சியளிக்கும்; கனவிலே தெளிவாகப் பொருள்கள் தோன்றுவது போலத் தோன்றும்.

தியான யோகம் கைகூடுவதற்குமுன் பயிற்சி பண்ணுகையில், மனம் தெளிவாக இருக்கும் வேளையில், ஆசனத்தில் அமர்ந்து கண்ணை மூடிக் கொண்டு அம்பிகையின் திருவுருவத்தை மெல்ல மெல்ல நினைத்துப் பழகுவார்கள், அடியார்கள். முதலில் வடிவம் தெளிவாகத் தோன்றாது. நாளடைவில், அப்பியாசம் முறுக முறுக, சில கணங்கள் மின்னல் கீற்றுத் தோன்றி மறைவது போலத் தோன்றி மறையும். பிறகு இன்னும் சிறிது நேரம் நின்று காட்சி தரும்.

அப்பியாசம் நல்ல பயனைத் தந்தபிறகு எந்தச் சமயத்தில் கண்ணை மூடிக்கொண்டு பார்த்தாலும் தெளிவாக

அன்னையின் வடிவம் நெஞ்சினுள் வந்து நிற்கும். இது முன் ஜன்ம சம்ஸ்காரத்தாலும் இந்தப் பிறவியில் செய்த அப்பியாச பலத்தாலும் உண்டாவது. அத்தகையவர்கள் இன்ன இடம், இன்ன காலம், இன்ன நிலை என்ற வரை யறையில்லாமல், எந்த இடத்திலும் எந்தக் காலத்திலும் உண்முக தரிசனம் செய்யலாம். பெட்டியில் வைத்துப் பூட்டிய பொருளை எப்போது திறந்தாலும் பார்க்க முடிவது போல, இந்த நிலையைப் பெற்ற அநுபூதிமான்களுக்கு எப்போது நினைத்தாலும் அம்பிகையின் திருவுருவம் நெஞ்சத்தில் வந்து நிற்கும்.

அபிராமிபட்டர் அந்த நிலையை அடைந்தவர்; நனவிற் கனவுபோல, விழித்திருக்கும் நிலையிலே கண்ணை மூடிய வுடன் அம்பிகையைத் தரிசிக்கும் பக்குவம் பெற்றவர். அந்த அநுபவத்தைச் சொல்ல வருகிறார்.

'அம்பிகையின் வடிவம் எப்போது நினைத்தாலும் என் உள்ளத்தில் வந்து தோன்றுகிறது' என்கிறார்.

நெஞ்சில் எப்போதும் உதிக்கின்றவே.

அந்த வடிவத்தை வருணிக்கிறார். அன்னையின் அங்க நலன்களைச் சொல்கிறார். அபிராமி அன்னையின் குழந்தை யாகிய இந்த அன்பர் அவள் தாய்மையைக் காட்டும் தோற் றத்தையே முதலில் காண்கிறார். அவளுடைய நகில்களைச் சொல்கிறார்.

காமேசுவரனும் காமேசுவரியுமாக இணைந்து நிற்கும் கோலத்தை நினைத்து வழிபட்டவர் ஆசிரியர். அந்தப் பெரு மான் அம்மையை அன்போடு தழுவுகிறான். அவன் அணிந் திருக்கும் கொன்றை மாலையோடு அன்னையைத் தழுவுகிறான். அவன் தழுவுகையில் அம்பிகை குழைகிறாள்; இறைவனும் குழைகிறான்; அந்தக் கொன்றை மாலையும் குழை கிறது. அம்மை தழுவக் குழைந்த பெருமானைக் காஞ்சி

புரத்தில் எழுந்தருளியிருக்கிறான். இறைவன் தழுவும் பொழுது மாலை குழைவதுண்டு; "முகைவாய்த்த முலைபாயக் குழைந்தநின் தார்" என்று கலித்தொகையில் வருகிறது (கலித். 68: 11).

இறைவன் தழுவியதனால் குழைந்து தனங்களையுடைய கொடி போல அம்மை காட்சி தருகிறாள். நினைக்கும்போது முதலில் அவள் திருமார்பு தோன்றுகிறது.

குழையத் தழுவிய கொன்றையந்
தார் கமழ் கொங்கை வல்லி.

இந்த அந்தாதியின் காப்புச் செய்யுளில், "தாரமர் கொன்றையும்" என்று சிவபெருமான் திருமார்பில் அணிந்த கொன்றை மாலையை நினைந்து தொடங்கியவர், அந்தாதியின் ஈற்றுச் செய்யுளாகிய இதிலும் அதை நினைக்கிறார். சிவபெருமான் அணைந்ததனாலே அம்பிகையின் நகில்களில் அந்தக் கொன்றை மாலையின் மணம் வீசுகிறதாம்.

பிறகு, தேவியின் திருத்தோள்கள் காட்சி தருகின்றன. அவை மூங்கில்களைப் போல வழுவழுப்பாக இருக்கின்றன; மூங்கிலோடு போட்டி போட்டுக்கொண்டு அதன் அழகை வென்றுவிடுகின்றன.

அம்பிகை துர்க்கையாகப் பச்சை வண்ணத்தோடு இருக்கும்போது வடிவாலும் வண்ணத்தாலும் அவள் தோள்கள் மூங்கிலைப் போல இருக்கும். இதை ஒரு பழைய செய்யுள் சொல்கிறது;

"அளவே வடிவொப்ப தன்றியே பச்சை
இளவேய் நிறத்தாலும் ஒக்கும்-துளவேய்
கலைக்குமரி, போர்துளக்கும் கார் அவுணர் வீரம்
தொலைக்கும்அரி ஏறுகைப்பாள் தோள்."

அந்த நீண்ட நெடுந்தோளைச் சொல்கிறார்.

## கழையைப் பொருத திருநெடுந் தோளும்.

அம்பிகை தன் மேல் கைகளில் கரும்பு வில்லையும் மலர்ப் பாணங்களையும் ஏந்தியிருக்கிருள். மன்மதன் கையிலும் கரும்பு வில்லும் மலரம்புகளும் உள்ளன. அவை அம்பிகை அவனுக்கு வழங்கியவை. உலகிலுள்ள ஜீவர்கள் முறையாக இல்லறம் செய்து வாழவேண்டும். திவ்ய சுமங்கலியாகிய அம்பிகை காமேசுவரனோடு இணைந்து மக்கள் வாழும் வழியைக் காட்டுகிருள். அம்பிகை இறைவனிடம் இணையாமல் பிரிந்திருந்தால் உலகில் உள்ள ஜீவர்கள் ஆணும் பெண்ணும் உறவு கொள்ளாமல் இருந்து விடுவார்கள். பிறகு பரம்பரை வளராது. உலகமே நடை பெருது. இந்தத் திவ்ய தம்பதிகள் இணைவதனால்தான் உலகமே போகத்தைப் பெற்றுச் சந்ததியை விருத்தி செய்ய முற்படுகிறது.

ஆண் பெண் உறவுக்குரிய காதலை உண்டாக்குகிறவன் காமன். அவனுக்கு அந்தத் தொழிலைத் தந்து அதற்குத் துணையாகக் கரும்பு வில்லையும் மலரம்புகளையும் அம்பிகை உதவியிருக்கிருள். ஆண்களும் பெண்களும் ஒருவரை ஒருவர் விரும்பும்படி பொருவன கரும்பு வில்லும் மலரம்பு களும். அம்பிகையின் திருவுள்ளக் குறிப்பை உணர்ந்தே மன்மதன் அம்புகளை எய்கிருன். அம்பிகை தன் கையில் வைத்துள்ள கரும்பும் மலரம்புகளும் மனம், பஞ்சதன் மாத்திரைகள் ஆகியவற்றின் வடிவங்கள்; அவற்றின் அம்ச மாக இருப்பவை. விருப்பத்தை எழுப்பக் காமன் பயன் படுத்தும் கரும்புவில்லும் மலரம்புகளும் அம்பிகை கையில் உள்ளவையே. அவற்றிற்கு மூலமாதலின், ஆணும் பெண்ணும் ஒருவரை ஒருவர் விரும்பிக் காதல் செய்து இல்லறம் நடத்த அவைகளே மூலகாரணம் என்றுசொல்லி விடலாம். ஆகவே அந்த வில்லையும் அம்புகளையும் ஆணும் பெண்ணும் விழையும்படி பொரும் தன்மை வாய்ந்தன வாகச் சொல்கிருர் ஆசிரியர்.

கரும்பு வில்லும்
விழையப் பொரு திறல் வேரியம்
பாணமும்.

அன்னையின் திருமார்பும், பிறகு தோளும், அப்பால் அவள் திருக்கரங்களில் வைத்துள்ள கரும்பும் மலர்களும் உண்முகத்தே தோன்றியதைச் சொன்னார்.

பிறகு அம்பிகையின் புன்முறுவலைச் சொல்கிறார். அது அம்பிகையின் வாத்ஸல்யத்தைக் காட்டுகிறது. தன் குழந்தையைக் கண்ட தாய் புன்னகை பூப்பாள், அம்பிகையின் உள்ளத்தே உள்ள மகிழ்ச்சியைக் காட்டுகிறது அது. தன் தனயன் தன்னை நினைக்கிறான் என்பதை மன நிறைவுடன் நினைத்துப் புன்னகை பூக்கிறாள் அம்மை.

வெண்ணகையும்.

இறுதியாக அவருடைய நெஞ்சிலே பதிந்து நிற்பவை அன்னையின் திருவிழிகள். அருள் கொப்புளிக்கும் மடைகள் அவை. அவளுடைய அருட்கண்ணோக்குக்கு ஏங்குவார்கள், பக்தர்கள். அம்பிகையின் திருவிழிகள் மான் கண்களைப் போல இருக்கின்றன. அகன்று நீண்டு உள்ளவை அவை. "மானே முதுகண்" என்று முன்பு ஒரு முறை அந்தக் கண்ணைச் சொல்லியிருக்கிறார்.

அம்பிகையின் திருவுருவத்தை அங்க அடையாளங்களோடு காட்ட வந்தவர், இப்போது இறுதியிலே மறவாமல் உள்ளத்தே பதிந்த அந்த விழிகளைச் சொல்கிறார்.

உழையைப் பொரு கண்ணும்.

அம்பிகையின் அங்கங்களில் நகிலையும், தோளையும், கரும்பையும், மலரையும், புன்முறுவலையும் சொல்லிவிட்டு முத்தாய்ப்பாகக் கண்களைச் சொல்கிறார். கருணையூற்றாகிய அந்தக் கண்ணை நினைக்கும்போது உள்ளம் உருகும்,

கண்கள் கருத்தின் சன்னல்கள்; அம்பிகையின் உள்ளத்தே பொங்கும் அருள் வெள்ளத்தின் கால்வாய்கள் அவை.

இவை யாவும் எப்போது நினைத்தாலும் உள்ளத்திலே தோன்றுகின்றனவாம். உலகத்தில் புறத்திலே பல தொழில்களில் ஈடுபட்டிருந்தாலும் சட்டென்று கண்ணை மூடினால் அம்பிகையின் திருவுருவம் தோன்றுகிறது. பாதி ராத்திரியானாலும் பட்டப் பகலானாலும் உள்முகத்தே பார்வையைத் திருப்பினால் அம்பிகையின் அங்கங்கள் தோன்றுகின்றன.

நெஞ்சில் எப்போதும் உதிக்கின்றவே.

அபிராமி அந்தாதியில் ஒரு பாட்டின் ஈற்றிலுள்ள எழுத்தோ, சொல்லோ, சீரோ, அசையோ அடுத்த பாட்டின் தொடக்கமாக அமைந்திருக்கிறது. அந்தாதியின் இலக்கணம் அது. இதைச் செய்யுள் அந்தாதி என்று சொல்வார்கள். இவ்வாறு அந்தாதித்து வருவதோடு, ஈற்றுச் செய்யுளின் இறுதியும் முதற்செய்யுளின் முதலும் ஒன்றாக வரவேண்டும். இதை மண்டலித்தல் என்பார்கள். வட்டமாக அமைதல் என்று பொருள். இறுதியையும் முதலையும் இணைத்தால் இந்தப் பாமாலை வட்டமாலையாகத் தோன்றும். இந்த அந்தாதியும் மண்டலித்திருக்கிறது. "உதிக்கின்றவே" என்று இந்த நூறாவது செய்யுள் முடிகின்றது. இந்த அந்தாதியின் முதற்செய்யுள், "உதிக்கின்ற செங்கதிர்" என்று தொடங்குகிறது. இதுவே மண்டலித்தல்.

குழையத் தழுவிய கொன்றையந்
தார்கமழ் கொங்கைவல்லி
கழையைப் பொருத திருநெடுந்
தோளும் கருப்புவில்லும்

விழையப் பொருதிறல் வேரியம்
பாணமும் வெண்ணகையும்
உழையைப் பொருகண்ணும் நெஞ்சில்எப்
போதும் உதிக்கின்றவே.

[குழையும்படியாகத் தன்னைத் தழுவிய சிவபெருமானுடைய மார்பில் அணிந்த அழகிய கொன்றைமாலையின் மணம் கமழ்கின்ற தனபாரங்களையுடைய கொடி போன்ற அபிராமியம்மையினுடைய, மூங்கிலைப் பொருது வென்ற அழகையுடைய நீண்ட தோள்களும், கரும்பாகிய வில்லும், ஆண்களையும் பெண்களையும் ஒருவரை ஒருவர் விரும்பும்படி மோதுகின்ற தேனையுடைய அழகிய மலரம்புகளும், வெண்மையான புன்னகையும், மான் கண்ணை ஒத்த கண்களும் என்னுடைய உள்ளத்தில் எந்த நேரத்திலும் தோன்றியருளுகின்றன.

குழைய-சிவபெருமான் குழைய, அம்மை குழைய, மாலை குழைய. தார் கமழ்-மாலையின் மணம் கமழ்கின்ற; தார்: ஆகுபெயர். தார்-மார்பில் அணியும் மாலை. பெரும்பாலும் ஆண்கள் அணியும் மாலையைத் தார் என்றும், மகளிர் அணியும் மாலையைக் கோதை என்றும் கூறுவது மரபு. கழை-கரும்பு என்றும் சொல்லலாம். பொரு-மோதும். வேரி-தேன்; இந்த அடையால் பாணம் மலர் என்பது குறிப்பால் புலப்பட்டது. வெண்ணகை-வெண்மையாகிய பல்வரிசை என்றும் பொருள் கொள்ளலாம். உழை-மான்; இங்கே மான் கண்; ஆகு பெயர். பொரு-ஒத்த; உவம உருபு.]

முறுகிய அன்புடையவர்களுக்கு அம்பிகை உண்முகத்தே தரிசனம் தருவாள் என்பது கருத்து.

அபிராமி அந்தாதியில் 100-ஆம் பாட்டு இது.

# பயன்

அபிராமி அன்னையை நூறு பாடல்களால் பாடி அபிராமி அந்தாதியை நிறைவு செய்த அபிராமிபட்டர், நூலுக்குப் பயனாக ஒரு பாடலைப் பாட எண்ணினார். ஒரு நூலைத் தொடங்குவதற்கு முன்னால் காப்புச் சொல்லிப் பிறகு நூலைப் பாடி இறுதியில் பயனைச் சொல்வது ஒரு மரபு. அந்த வகையில், "சீர் அபிராமி யந்தாதி எப்போதும் என் சிந்தையுள்ளே, காரமர் மேனிக் கணபதியே நிற்கக் கட்டுரையே" என்று காப்புச் செய்யுளைப் பாடினார். அப்பால் அந்தாதியை, "உதிக்கின்ற செங்கதிர்" என்று தொடங்கினார். முடிக்கும் பொழுது "உதிக்கின்றவே" என்று மண்டலிக்கும்படி முடித்து அந்தாதியின் இலக்கணம் நன்கு அமையும்படி செய்தார்.

முதலில் சமுதாய சோபையாகிய பிழம்பழகைச் சொல்லி, கடைசியில் அம்பிகையின் அங்கங்களில் சில வற்றைச் சொல்லி, முடிந்த முடிபாக அன்னையின் அருள் கொப்புளிக்கும் கண்ணில் தம் நினைவை நிறுத்திப் பாடினார் ஆசிரியர்.

இப்போது நூல் நிறைவேறிவிட்டது. நூற்பயனாக ஒரு செய்யுளைப் பாடவேண்டும். பலசுருதி என்று அதைச் சொல்வார்கள். பொதுவாக நூலை முடிக்கும்போது பயனைச் சொல்கிறவர்கள். 'இந்த நூலைப் படிப்பவர்கள் இன்ன இன்ன பயனைப் பெறுவார்கள்' என்று சொல்வது

வழக்கம். ஞானசம்பந்தப் பெருமான் தாம் அருளிய ஒவ்வொரு பதிகத்தின் இறுதியிலும், 'இப்பதிகத்தை ஓதினவருக்கு இன்ன இன்ன நலன்கள் உண்டாகும்' என்று பாடியிருக்கிறார். வேறு அருளாளர்களும் அவ்வாறு பாடியிருக்கிறார்கள். வேறு நூல்களிலும் நூல் முடிவில் அவற்றின் ஆசிரியர்கள் இவ்வாறே பயனைச் சொல்லியிருக்கிறார்கள்.

அபிராமிபட்டரும், 'இந்த நூலைப் படிப்பவர்களுக்கு இன்ன இன்ன நலன்கள் உண்டாகும்' என்று பாடியிருக்கலாம். ஆனால் அவர் அப்படிப் பாடவில்லை. 'என்னுடைய பாட்டைப் படிப்பதனால் இன்ன நன்மைகள் உண்டாகும் என்று சொல்வது? என் பாட்டு அவ்வளவு சிறந்ததா? வேதத்தால் புகழப் பெறும் அன்னைக்கு, எத்தனையோ பேரருளாளர்கள் துதித்துப் பாடிய அன்னைக்கு, என் பாட்டு எம்மாத்திரம்? இந்தப் பாட்டைப் படிப்பதனால் அது வரும், இது வரும் என்று சொல்வது என்னையே நான் புகழ்ந்து கொள்வது ஆகாதா?' என்று நினைத்தார் போலும்! அவர் அகந்தை அடங்கியவர்; பணிவிலே உயர்ந்தவர்; "என் சொல் அவமாயினும்........தோத்திரமே" என்று சொன்னவர். 'இந்த நூலில் என்ன பெருமை இருக்கிறதென்றால், அன்னையின் திருநாமங்களும் புகழும் இருக்கின்றன. என்னுடைய சொல்லோ, பாடலோ உயர்ந்தது அல்ல. அம்பிகையின் சம்பந்தமாக இருப்பதுதான் இதன் பெருமை. அவள் புகழைச் சொல்லத் தெரியாமல் சொல்லியிருக்கிறேன். என்னுடைய சொற்குற்றத்தையும் பாடற்குற்றத்தையும் அவள் புகழ் மறைத்து விடுகிறது. களிமண்ணால் வடிவம் செய்தால் அந்த வடிவம் களிமண் என்ற எண்ணத்தை மறக்கச் செய்வது போல, அபிராமியின் புகழ் என் சொற்குற்றம் பொருட் குற்றத்தை மறைத்து விட்டது. உண்மையில் நான் சிற்றறிவுடையவன். என் பாட்டில் எத்தனையோ குற்றங்கள் உண்டு. நான் அன்னையை நன்கு தெரிந்து

கொண்டவனும் அல்லன். ஏதோ துணிவினால் பாடினேன். அன்னையினிடம் விண்ணப்பித்துக் கொள்ள வேண்டும் என்ற உந்துதலினால் பாடினேன். இதில் உள்ள பிழைகளை யெல்லாம் மறைத்துக்கொண்டு நிற்பவை அன்னையின் திருநாமங்களும் புகழும்' என்றெல்லாம் அவர் எண்ணங்கள் ஓடின.

'அப்படியானால் நூற்பயன் சொன்னவர்களெல்லாம் அகங்காரிகளா?' என்று நாம் கேட்கிறோம்.

'அவர்கள் பெரியவர்கள்; அருள் பெற்றவர்கள். அவர்கள் சொல்லலாம். ஆணை நமதே என்று பாடும் வல்லமையுடையவர்கள் அவர்கள். ஓங்கி உயர்ந்த மலை மேகத்தைத் தாங்கி நிற்கிறது. சிறிய கரடு மேகத்தைத் தாங்குமா? இரண்டும் கல் என்று சொல்லப்பட்டாலும் மலை எங்கே? கரடு எங்கே?'

''அப்படியானால் நூற்பயனாக நீங்கள் என்ன சொல்லப் போகிறீர்கள்?''

'இந்த நூலை நான் பாட முயன்றேன். என் தாய் உள்ளிருந்து பாடும்படி பணித்தாள். ஏதோ ஒருவிதமாகப் பாடி முடித்தேன். இந்தப் பாடல்களின் குறைகளெல்லாம் அவள் அரும் புகழால் மறைந்துவிட்டன. இதை அவள் ஏற்றுக் கொண்டாள் என்பதைச் சரபோஜி மன்னர் மன மாற்றத்திலிருந்து உணர்ந்து கொண்டேன். அவள் அருள் இருந்தால் அமாவாசையும் பௌர்ணமியாகும்; கடலும் மலையாக உயரும்; புழுவும் யானையாகும். ஒன்றுக்கும் பற்றாத என்னை இந்த நூலைப் பாடும்படி வைத்தாளே, அதுவே பெரிய அதிசயம் அல்லவா? ஆகவே, என் பாட்டு இத்தகைய தென்று சொல்ல என் மனம் இடந்தரவில்லை. அன்னையின் பெருமையைத்தான் நினைக்கிறேன். எனக்கு வந்த அபவாதத்தைப் போக்கி இந்த நூலை நிறைவேற்றி வைத்தாளே, அந்தப் பேரருளை நினைக்கிறேன். அவளைத்

தொழுவதனால் எத்தனையோ நலங்கள் உண்டாகும். இப்போது உள்ள தீமைகள் நீங்கும். பழி வந்ததே என்ற அச்சத்தால் நான் பாடத் தொடங்கினேன். பழி அற்புதமாக நீங்கிவிட்டது. அன்னையை மனத்தால் நினைந்து வாக்கினால் பாடினேன்; தொழுதேன். அதனால் எனக்கு வந்த தீங்கு நீங்கிவிட்டது. இந்த அநுபவத்தையே பயனாகச் சொன்னால் என்ன என்று தோன்றுகிறது.'

'எனக்கு வந்த தீங்கு நீங்கி விட்டது என்பதிலும் நான் என்ற உணர்வு தோன்றவில்லையா?'

'ஆமாம்! அது உண்மைதான். நான் அப்படிச் சொல்லப் போவதில்லை. நான் என்ன, வெறும் புழு மாத்திரம்! அன்னையை யார் தொழுதாலும் தீங்கு அவரை அணுகாது. என்னுடைய அநுபவத்தால் இதை உணர்ந்தாலும் நான் தீங்கில்லாமல் இருக்கிறேன் என்று என்னைச் சார்த்திச் சொல்லப் போவதில்லை. பொதுவாக யார் என் அன்னையைத் தொழுதாலும் அவருக்கு ஒரு தீங்கும் வராது என்று சொல்லப் போகிறேன்.'

இவ்வாறு அகந்தை யொழிந்த அபிராமிபட்டர் பணிவுடன் நூற்பயனைச் சொல்லத் தொடங்கினார். அதுவும் அபிராமியன்னையின் தோத்திரமாகவே அமைந்துவிட்டது. இன்னது கிடைக்கும் என்று கூடச் சொல்லவில்லை? 'எந்தத் தீங்கும் வராது' என்று முடிக்கிறார்.

இனி அந்தப் பாட்டைப் பார்ப்போம்.

'அபிராமியம்மையைத் தொழுவார்க்கு ஒரு தீங்கும் இல்லை' என்று சொல்கிறார். தொழுவதையோ, தீங்கையோ விரித்துரைக்கவில்லை. அன்னையை நினைக்கும் பொழுதே அவளைப் பற்றியே திருப்பித் திருப்பிச் சொல்லத் தோன்றுகிறது.

அபிராமியின் பெருமையை எவ்வளவோ சொல்லலாம். இந்த நூறு பாடல்களில் எவ்வளவோ சொல்லியிருக்கிறார். அவளுடைய திருநாமங்களை, அங்கலாவண்யத்தை, பராக்கிரமத்தை, அருட் பெருமையைச் சொல்லியிருக்கிறார். எத்தனை சொன்னாலும், 'அம்மா!' என்று வாய்விட்டுச் சொல்வது போன்ற நெருக்கம் உண்டாவதில்லை; அந்த நாமந்தான் உணர்ச்சியைத் தூண்டுகிறது.

லலிதா சகசிரநாமம் அம்மையின் ஆயிரம் திருநாமங்களைச் சொல்கிறது. அது ஒரு காவியம்; மந்திரசாஸ்திரம்; புராணம். இவ்வளவு பெரிய நூலின் முதலிலே எதைச் சொல்வது? எல்லாருக்கும் விளங்கும் ஒரு திருநாமத்தையே, எல்லாரும் உணர்ச்சியோடு சொல்லும் ஒரு பெயரையே, ஆயிர நாமங்களுள் முதல் நாமமாக அந்தப் புனித நூல் சொல்கிறது. ஸ்ரீமாதா என்று தானே லலிதா சகசிரநாமம் தொடங்குகிறது? அதற்கு அம்மா என்று தானே பொருள்?

அம்மா என்ற சொல் எத்தனை எளிதானது! அதே சமயத்தில் அது எத்தனை பெருமையை உடையது!

கடவுளை வழிபட வேண்டுமானால் வடிவத்தையும் நாமத்தையும் தெரிந்துகொண்டு வழிபடுகிறோம். மனம் நாமரூப நாட்டமுடையது, ஆதலால் வடிவம் இருந்தால் தான் மனத்தால் நினைக்க முடியும். வடிவம் இருந்தால் பெயரும் இருக்க வேண்டும். வெவ்வெறு மூர்த்திகளுக்கு வெவ்வேறு வடிவங்களும் வெவ்வேறு திருநாமங்களும் இருக்கின்றன. அந்த மூர்த்திகளை வழிபடுகிறவர்கள் நாமத்தைச் சொல்லப் பயின்று, வடிவத்தையும் தரிசிக்க வேண்டும்.

அன்னையை உபாசிக்கிறவர்களுக்கு அவளுடைய நாமமும் உருவமும் பற்றுக்கோடாக இருக்கும். அன்னையின் நாமத்தைப் புதிதாகத் தெரிந்து கொள்ள வேண்டியதில்லை.

அம்மா என்ற திருநாமத்தை நாம் அடிக்கடி சொல்லிப் பழகியிருக்கிறோம். நம்மைப் பெற்ற அம்மாவைக் குழந்தைப் பிராயத்திலிருந்து அடிக்கடி அழைத்து அந்தச் சொல்லை உச்சரித்திருக்கிறோம். துன்பம் வந்தாலும் இன்பம் வந்தாலும், 'அம்மா!' என்று சொல்கிறோம். அது உணர்ச்சியின் வெளியீடாக இருக்கிறது. அது ஸ்ரீ மாதாவைக் குறிக்கும் திருநாமம். அதை உச்சரிக்கும் போது உலகமெல்லாம் பெற்ற தாயாகிய அம்மாவை நினைத்துக் கொண்டால் போதும். சொல் வந்து விட்டது; அதன் பொருள் இன்னது என்று தெரிந்து நினைத்தால் போதும். நமக்குப் பழக்கமான சொல் அது; அதன் பொருள் ஜகதம்பிகை என்று உணர்ந்து விட்டால், நாம் அவள் திருநாமத்தைச் சொன்னவர்களாவோம்.

உலகிலுள்ள எல்லா மக்களுக்கும் 'அம்மா' என்ற சொல்லில் அன்பும் உணர்வும் இணைந்திருப்பது தெரியும். அத்தனை எளிய திருநாமத்தை முதலில் லலிதா சகசிரநாமம் சொல்கிறது.

பக்தர்கள் அம்மா என்று சொல்லும்போது பராசக்தியைத்தான் நினைப்பார்கள். மற்ற அம்மாக்கள் சில காலம் இருந்து மறைகிறவர்கள்; இந்த உடலுக்குத் தாய்கள். ஆனால் பராம்பிகையோ எல்லா உயிர்களுக்கும் எல்லாக் காலத்திலும் அன்னையாக, அருள் சுரப்பவளாக, இருக்கிறாள்.

ஆகவே, ஸ்ரீ மாதா என்று தொடங்கும் லலிதா சகசிர நாமத்தைப் போலவே அபிராமிபட்டர் பயனைக் கூறும் இந்தப் பாட்டில் அம்மா என்ற சொல்லையே முதலில் வைக்கிறார் அன்னை. ஞாய், யாய், தாய், அம்மை, மாதா, தள்ளை, அம்பிகை, அம்பா என்று தாயைக் குறிக்கும் பல சொற்கள் இருந்தாலும் அவற்றை அவர் சொல்லவில்லை.

நாகரிகம் தெரியாத ஏழை மக்கள் எந்தச் சொல்லால் தம் தாயைக் குறிப்பார்களோ அந்தச் சொல்லைச் சொல்கிறார். அவள் ஏழைகள் முதல் இந்திரன் வரைக்கும் உள்ள யாவருக்கும் தாய் அல்லவா?

நாட்டுப்புறங்களில் உள்ள மக்கள் தாயை ஆத்தாள் என்று சொல்வார்கள். அந்தச் சொல்லைப் பயன்படுத்துகிறார் அபிராமிபட்டர்.

ஆத்தாளை.

இவ்வாறு பெரியவர்கள் இழிசினர் வழக்கை வழங்கலாமோ என்று தோன்றும். முருகப்பெருமானுடைய திருவருளை நிரம்பப் பெற்ற அருணகிரிநாதர் திருப்புகழில் "ஆத்தாள் மால்தங்கச்சி" என்று பாடியுள்ளார்.

காப்புச் செய்யுளில், "உலகேழும் பெற்ற அபிராமி" என்று அன்னையாகச் சொன்னவர் பயனிலும் அதைச் சொன்னார். அங்கே அபிராமி என்று திருக்கடவூரில் எழுந்தருளிய அம்மையின் திருநாமத்தைச் சொன்னவர் பயனைச் சொல்லும் இந்தப் பாட்டிலும் மறவாமல்,

ஏங்கள் அபிராம வல்லியை

என்று சொல்கிறார்.

திருக்கடவூரில் எழுந்தருளியுள்ள அபிராமியன்னையைப் பாடியது இந்த அந்தாதி. என்றாலும் பராசக்தியாகிய இராஜராஜேசுவரியின் புகழையே நூல் முழுவதும் பாடினார். அபிராமி என்ற திருநாமத்தை ஒவ்வொரு பாடலிலும் வைக்கவில்லை. காப்புச் செய்யுளில், "சீரபிராமி" என்று சொல்லி, முதல் செய்யுளில், "அபிராமி என்றன் விழுத்துணையே" என்று பாடினார். பிறகு, 25-ஆம் பாட்டில், "உலகுக்கு அபிராமி என்னும் அருமருந்தே" என்றும், 69-ஆம் பாட்டில், "அபிராமி கடைக்கண்களே" என்றும்,

74-ஆம் பாட்டில், "அபிராம வல்லி அடியிணையை" என்றும், 78-ஆம் பாட்டில், "அபிராம வல்லி அணிதரளக் கொப்பும்" என்றும் 79-ஆம் பாட்டில், "விழிக்கே அருளுண்டு அபிராம வல்லிக்கு" என்றும், 94-ஆம் பாட்டில் "அபிராமி சமயம் நன்றே" என்றும் பாடியிருக்கிறார். இப்படி நூலுக்குள் ஏழு இடங்களில் அபிராமி, அபிராம வல்லி என்ற திருநாமங்களை வைத்திருக்கிறார். நூலுக்குப் புறம்பேயுள்ள காப்பிலும் பயனிலும் அந்தத் திருநாமத்தை வைத்து முதலிலும் ஈற்றிலும் அபிராமியை நினைவு கொள்ளும் படி செய்கிறார்.

ஆத்தாளை, எங்கள் அபிராம வல்லியை.

அவள் யாருக்குத் தாய்? பாடுகிற அபிராமிபட்டருக்கு அருள் புரியும் தாய்; உலகமெல்லாவற்றையும் ஈன்ற தாய்; சர்வலோக ஜனனி; அண்டங்களையெல்லாம் தன்னிடம் தோற்றுவித்தவள்.

அண்டம் எல்லாம் பூத்தாளை,

உலகில் பிரசவம் என்பது மிகவும் கடுமையான அநுபவம். பிரசவ வேதனையைக் கொடிய வேதனைக்கு உவமை சொல்வார்கள். தாய்மார்கள் மிகவும் வேதனைப் பட்டுக் குழந்தைகளைப் பெறுவார்கள். இந்தத் தாய் அப்படி வேதனைப்படுகிறவள் அல்ல. "இச்சாமாத்ரம் பிரபோத் ஸ்ருஷ்டி" என்பார்கள். அம்பிகை நினைத்த மாத்திரத்தில் சர்வாண்டங்களையும் உற்பத்தி செய்து விடுவாள். பூ மலர்வது போலே அவளிடம் எளிதிலே அண்டங்களெல்லாம் தோற்றுகின்றன. அதனால் 'பூத்தாளை' என்று சொன்னார். முன்பு, "பூத்தவளே புவனம் பதினான்கையும்" (13) என்று சொல்லியிருக்கிறார்.

எல்லா உலகையும் ஈன்ற தாயானாலும் தன் வண்ணம் குறையாமல் அவள் விளங்குகிறாள். அவள் திருமேனி வண்ணத்தைத்தானே முதல் பாட்டில், "உதிக்கின்ற

செங்கதிர்'' என்று எடுத்துரைத்து நூலைத் தொடங்கினார்? அங்கே, ''மாதுளம்பூ'' என்று அந்த வண்ணத்துக்கு உவமை சொன்னார். அதை இந்தப் பாட்டிலும் சொல்கிறார்.

மாதுளம்பூ நிறத்தாளை.

'தாடிமீ குஸுமப்ரபா' என்று லலிதா சகசிரநாமமும் இந்த உவமையினால் அம்பிகையின் வண்ணத்தை நினைக்கிறது.

உலகங்களையெல்லாம் தோற்றுவித்த பெருமாட்டி அவற்றைத் தானே கருணையுடன் காப்பாற்றுகிறாள்; எப்படியெல்லாம் காப்பாற்ற வேண்டுமோ, அப்படிக் காப்பாற்றுகிறாள்; தக்க அதிகாரிகளை வைத்துப் பாதுகாப்பளிக்கச் செய்கிறாள்.

புவி அடங்கக் காத்தாளை.

முன்பும், ''பூத்தவளே புவனம் பதினான்கையும் பூந்த வண்ணம் காத்தவளே'' (13) என்று இவ்வாசிரியர் சொல்லியிருக்கிறார். உலகத்தைப் படைக்கும் பிரம்மாவைப் அதிஷ்டித்து நின்று சிருஷ்டித் தொழிலையும், திருமாலை அதிஷ்டித்து நின்று காத்தல் தொழிலையும் இயற்றுகிறவள் அம்பிகை. படைக்கும் தொழிலை உடைமையால், ஸ்ருஷ்டிகர்த்ரீ, ப்ரஹ்மரூபா என்ற திருநாமங்களும் (264,265), காக்கும் தொழிலை உடைமையால், கோப்த்ரீ, கோவிந்த ரூபிணி (266, 267) என்ற திருநாமங்களும் அன்னைக்கு உரியனவாயின.

இவ்வாறு சொன்னவர், மேலே அம்பிகையின் திருக்கரங்களைச் சொல்கிறார். அம்பிகை கீழ்த்திருக் கரங்களில் பாசத்தையும் அங்குசத்தையும், மேல் திருக்கரங்களில் கரும்பு வில்லையும் மலர்ப்பாணங்களையும் ஏந்தியிருக்கிறாள். இந்த நான்கையும் ஏந்தி வீற்றிருக்கும் வடிவம் இராஜராஜேசுவரியின் திருவுருவம். இரண்டாவது பாட்டில்,

"பனிமலர்ப்பூங்
கணையும் கருப்புச் சிலையும் மென்
பாசாங்குசமும் கையில்
அணையும் திரிபுர சுந்தரி"

என்று நான்கு கரங்களையும் சொன்னார்.

85-ஆவது பாட்டிலும்,

"பார்க்கும் திசைதொறும் பாசாங்குசமும்
பனிச்சிறைவண்டு
ஆர்க்கும் புதுமலர் ஐந்தும் கரும்பும்"

என்று சொன்னார். வேறு பல இடங்களில் கரும்பு வில்லை யும் மலரம்புகளையும் மாத்திரம் சொல்லியிருக்கிறார். நூலுக்குள் இரண்டே இடங்களில் அம்பிகையின் நான்கு கைகளிலும் உள்ள பொருள்களைச் சொல்லியுள்ளார். இப்போது பயனைச் சொல்லும் பாட்டிலும் அந்தச் சதுர் புஜங்களை நினைக்கிறார்.

அங்குச பாசம் குசுமம் கரும்பும் அங்கை
சேர்த்தாளை.

அபிராமி அந்தாதியைப் பல காலமாகப் பாராயணம் செய்து வந்தவர்கள், "அங்குச பாசாங்குசமும் கரும்பு மங்கை சேர்த்தாளை" என்று சொல்லிவந்தார்கள். அதில் அங்குசம் இரண்டு முறை வருகிறது. மலரம்புகள் இல்லை. அந்தப் பாடம் எப்படி வந்தது?

ஓலைச் சுவடிகளை ஆராய்ந்து பழக்கப்பட்டவர்களுக்கு, 'எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான்' என்பதற்கு ஏற்பப் பிரதி பண்ணுகிறவர்கள் எவ்வாறு பிழை செய்கிறார்கள் என்பது தெரியவரும். குசுமம் என்பது மலரைக் குறிப்பது; அருகி வழங்கும் சொல் அது. பாசாங்குசம் என்ற தொடர் அடிக்கடி நம் காதில் விழுவது. அதைச் சொல்லிப் பழக்கப் பட்டவர்கள் பொருளைக் கவனியாமல் பாசங்குசமம் என்ப

தைப் பாசாங்குசமும் என்று எழுதிவிட்டார்கள். குசுமம் என்பது குசமும் ஆகி விட்டது. பொருளைக் கவனியாமல் பாராயணம் செய்கிறவர்கள் 'அங்குச பாசாங்குசமும்' என்று பாராயணம் செய்தார்கள்; அப்படியே எழுதியும் வைத்து விட்டார்கள். பாசங்குசுமம் என்பதே பாசாங்குசமும் ஆகியதென்று ஊகித்து, அபிராமி அந்தாதி மூலமும் உரையும் பதிப்பித்தபோது அந்தப் பாடத்தை அமைத்து, 'இங்குள்ள பாடம் ஊகித்து அறியப்பட்டது' என்று எழுதினேன்.

பிறகு சில அபிராமி அந்தாதிப் பதிப்புகள் வந்தன. 'அங்கையிற் பாசாங்குசமும் கரும்பு வில்லும்' என்ற பாடம் ஒரு பதிப்பில் மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. அந்தப் பாடத்தில் மலரம்புகள் வரவில்லை. மேலும் ஒரு பதிப்பில் 'ஐங்கணை பாசாங்குசமும் கரும்பு மங்கை' என்ற பாடம் காணப்படுகிறது. அதில் நான்கு பொருள்களும் வந்தாலும், பாசாங்குசத்தையும், கரும்புவில் மலரம்புகளையும் சேர்த்துச் சேர்த்துச் சொல்லும் மரபுக்கு வேருக இருக்கிறது. ஐங்கணை ஒரு பக்கமும் கரும்பு ஒரு பக்கமும் இருக்கின்றன. ஆகையால் ஊகித்த பாடமாகிய, 'அங்குச பாசம் குசுமம் கரும்பும் அங்கை சேர்த்தாளை' என்பதே சிறந்ததாகத் தோன்றுகிறது.

அபிராமிபட்டர் பரம்பரையில் வந்தவர்கள் வைத்துள்ள கைப்பிரதியில், 'அங்குச பாசாங்குசமும் கரும்பும்' என்ற பாடமே காணப்படுகிறது. அந்த வடிவத்தில் சிறிய மாறுபாடு செய்தால் ஆசிரியர் பாடிய பாடம் இது என்பது தெரியவரும். நான் ஊகித்த பாடம், அந்த வடிவத்தில் மிகச் சிறிய எழுத்து மாற்றம் செய்து அமைத்தது, ஆதலின் அதுவே இயல்பான பாடமாக இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

பாசம் முதலியவற்றைச் சொன்ன பிறகு அம்பிகை மூன்று கண் உடையவள் என்று சொல்கிருர். சிவபெருமா

னுக்குத்தான் மற்றவருக்கு இல்லாத மூன்று கண்கள் உண்டு; "இமையாத முக்கண் மூவரிற் பெற்றவன்" என்று திருக்கோவையாரில் மாணிக்கவாசகர் பாடுவார். நெற்றிக் கண் அவனுடைய சிறப்புக்கும் ஆற்றலுக்கும் அறிகுறி. அது ஞானக்கண். உலக வழக்கில் கூட யாராவது பலசாலி என்றால், 'அவன் நெற்றியில் கண் படைத்தவனோ?' என்று கேட்கிறதுண்டு அதிலிருந்து நெற்றிக்கண்ணின் பெருமை தெரியும்.

அம்பிகைக்கும் சிவபெருமானுக்குரிய ஆற்றல்கள் அத்தனையும் உண்டு. அவளுக்கும் மூன்று கண்கள் உண்டு.

முக்கண்ணியை.

அம்பிகை மூன்று கண்களை உடையவள் என்பதை முன்பும், "கண் மூன்றும் கருத்தில் வைத்து" (53) என்றும், "ஒன்றே டிரண்டு நயனங்களே" (73) என்றும் குறிப்பிட்டுள்ளார் இவ்வாசிரியர். த்ரிநயனா. த்ரிலோசனா, த்ரயம்பிகா (லலிதா சகஸ்ரநாமம், 453, 477, 726) என்னும் திருநாமங்களாலும் இதை உணரலாம்.

இவ்வாறு உள்ள அபிராமியை வழிபடுபவர்களுக்கு எந்த வகையான தீங்கும் இராது என்கிறார் ஆசிரியர்.

தொழுவார்க்கு ஒரு தீங்கு இல்லையே!

இந்தப் பிறவியில் பசி, பிணி, பகை, அறியாமை முதலிய தீங்குகளும், மறு பிறவியில் நரகம் முதலிய தீங்குகளும், பிறகு பிறத்தல் இறத்தலாகிய தீங்குகளும் இல்லை என்று கொள்ள வேண்டும். இம்மையில் எந்தத் துன்பமும் இன்றி எல்லா நலன்களும் பெற்று வாழ்ந்து, பிறகு முத்தி யின்பத்தை அடைவார்கள். குறிப்பாக இந்தப் பொருள் புலப்படும்படி சொன்னார்.

ஆத்தாளை, எங்கள் அபிராம
வல்லியை, அண்டம்எல்லாம்
பூத்தாளை, மாதுளம் பூநிறத்
தாளைப் புவியடங்கக்
காத்தாளை, அங்குச பாசம்
குசுமம் கரும்பும்அங்கை
சேர்த்தாளை, முக்கண்ணி யைத்தொழு
வார்க்கொரு தீங்கில்லையே.

[எவ்வுயிருக்கும் தாயை, அடியார் கூட்டமாகிய எங்களுக்கு உரிய தெய்வமாகிய அபிராமவல்லியை, உலகங்கள் எல்லாவற்றையும் உண்டாக்கியவளை, மாதுளம் பூவைப் போன்ற சிவந்த நிறம் உடையவளை, உலகம் முழுவதும் பாதுகாத்தவளை, அங்குசம், பாசம், மலரம்புகள், கரும்புவில் ஆகியவற்றை அழகிய கையில் ஏந்தியவளை, மூன்று கண்களை உடையவளை, வழிபடுகிறவர்களுக்கு ஒரு வகையான தீங்கும் இல்லை.

ஆத்தாள்-தாய். எங்கள் என்றது, தம்மையும் அடியார் கூட்டத்தையும் சேர்த்துச் சொல்லியது. அண்டம்-உலகம். பூத்தாள்-தோற்றுவித்தவள். அடங்க-முழுவதும். அங்குசமும் பாசமும் குசுமமும் கரும்பும் என்று உம்மையை மற்றவற்றுக்கும் கூட்டுக. குசுமம்-மலர்; இங்கே மலரம்புகள். கரும்பு - கரும்பு வில். அம் கை-அழகிய கை. தொழுதல் இங்கே கையின் செயலைக் குறியாமல், மூன்று கரணங்களாலும் வழிபடுவதைக் குறித்தது. ஒரு தீங்கும் என்ற உம்மை விகாரத்தால் தொக்கது. இல்லையே: ஏகாரம், தேற்றம்].

அம்பிகையை வழிபடுபவர்களுக்கு என்றும் எங்கும் ஒரு தீங்கும் வராது என்பது கருத்து.

## திருநாமங்கள்

[அபிராமி அந்தாதி விளக்கமாகிய நான்கு பகுதிகளிலும் லலிதா சகசிரநாமத்திலிருந்து எடுத்தாண்ட திருநாமங்கள்.]

அசிந்த்ய ரூபா
அந்தர்முக ஸமாராத்யா
அநாஹதாப்ஜ நிலயா
அநேக கோடி ப்ரஹ்மாண்ட ஜனனி
அப்ரமேயா
அருணருண கௌஸும்ப வஸ்த்ர பாஸ்வத் கடிதடீ
அவ்யக்தா
அவ்யாஜ கருணாமூர்த்தி
அஜா
அஷ்டமூர்த்தி
அக்ஷமாலாதிதரா
ஆப்ரஹ்ம கீட ஜனனி
ஆனந்தகலிகா
ஆஜ்ஞா சக்ராப்ஜ நிலயா
உத்யத்பானு ஸஹஸ்ராபா
உமா
ஏகாகினி
க்ரோதாகாராங்குசோஜ்வலா
கடாக்ஷ கிங்கரீ பூத கமலா கோடி ஸேவிதா
கதம்ப குஸும ப்ரியா
கதம்ப வன வாஸினி
கந்தர்வ ஸேவிதா
கமலாக்ஷ நிஷேவிதா
கருணாரஸ ஸாகரா
கலாத்மிகா
கலாநாதா
கலாநிதி
கலாமாலா
கலாலாபா
கலாவதி
காகினீ ரூப தாரிணி
காந்தி
காந்திமதி
காமபூஜிதா
காமஸேவிதா
காமேச்வர ப்ரேமரத்ன மணிப்ரதிபணஸ்தனி
காலஹந்த்ரி
காவ்யகலா
குணநிதி
குமார கணநாதாம்பா
கோப்த்ரி
கோமலாகாரா
கோமலாங்கி

கோவிந்தரூபிணி
ச்யாமாபா
சண்டிகா
சதுர்வக்த்ர மனோஹரா
சதுஷ்ஷஷ்டி கலாமயீ
சந்த்ரமண்டல மத்யகா
சந்த்ர வித்யா
சம்பு மோஹினி
சாங்கரி
சாம்பவி
சாருசந்த்ர கலாதரா
சாரு ஹாஸா
சிவமூர்த்தி
சிவாராத்யா
சிஷ்டபூஜிதா
சுக்லவர்ணா
சூலாத்யாயுத ஸம்பன்னா
சைலேந்த்ர தனயா
த்யான கம்யா
த்ரயம்பிகா
த்ரிநயனா
த்ரிபுரா
த்ரிலோசனா
த்ரிஜகத் வந்த்யா
த்விஜப்ருந்த நிஷேவிதா
த்வைத வர்ஜிதா
தடில்லதா ஸமருசி
தயாமூர்த்தி
தர்ம வர்த்தினி
தரஸ்மேர முகாம்புஜா
தஹராகாச ரூபிணி
தாடங்க யுகளீ பூத
தபனோடுபமண்டலா
தாடிமீ குஸுமப்ரபா
தாபஸாராத்யா
திவ்யகந்தாட்யா
திவ்ய விக்ரஹா
துக்கஹந்த்ரி
துர்க்கா
தைவகார்ய ஸமுத்யதா
தேவர்ஷி கண ஸங்காத
ஸ்தூயமானாத்ம வைபவா
தேஜோவதி
தோஷவர்ஜிதா
நடேச்வரி
நவவித்ரும ஸ்ரீந்யக்காரி
தசனச்சதா
நளினி
நாராயணி
நிராகாரா
ப்ரஹ்மரூபா
ப்ரஹ்மோபேந்த்ர
மஹேந்த்ராதி தேவஸம்
ஸ்துத வைபவா
ப்ராஹ்மி
பக்த சித்த கேகீ கநாகநா
பக்த மானஸ ஹம்ஸிகா
பக்த ஸௌபாக்ய தாயினி
பசுபாசவிமோசனி
பஞ்சதன்மாத்ர ஸாயகா
பஞ்சபூதேசி
பஞ்சமி
பத்மநயனா
பத்மநாப ஸஹோதரி
பத்மாஸனா
பந்தமோசநி
பயிரவி
பரஞ்ஜோதி
பரதேவதா
பரமானந்தா
பரமேச்வரி
பரா
பராகாசா
பராசக்தி
பராத்பரா
பவநாசினி
பவரோகக்நி
பவாரண்ய குடாரிகா
பஹிர்முகஸுதுர்லபா
பஹுரூபா

பாசஹந்த்ரி
பாபநாசினி
பாபாரண்ய தவாநலா
பார்வதி
பானுமண்டல மத்யஸ்த்தா
பீதவர்ணு
புதார்ச்சிதா
புலோமஜார்ச்சிதா
புஷ்டி
பூர்ணு
ம்ருகாக்ஷி
ம்ருத்யுதாரு குடாரிகா
ம்ருத்யுமதனி
மங்கலாக்ருதி
மணிபூராப்ஜ நிலயா
மந்தஸ்மித ப்ரபாபூர
மஜ்ஜத் காமேச மானஸா
மலயாசல வாஸினி
மனுவித்யா
மஹேச ரூப்பக்ஷோ தண்டா
மஹேவாசாமகோசரா
மஹேன்மனி
மஹாசதுஷ்ஷஷ்டி கோடி
யோகினீ கண ஸேவிதா
மஹாத்ரிபுரஸுந்தரி
மஹாபத்மாடவீ ஸம்ஸ்த்தா
மஹாபாதக நாசினி
மஹாபைரவபூஜிதா
மஹாபோகா
மஹாமாயா
மஹாஸித்தி
மாதா
மாயா
மார்த்தாண்டபைர
வாராத்யா
மாலினி
முக்திரூபிணி
முகுந்தா
மூலாதாராம்புஜாரூடா
மேருநிலயா
மோஹநாசினி
ரக்தவர்ணு
ரத்னக்ரைவேய சிந்தா
கலோல முக்தாபலான்
விதா
ரணத்கிங்கிணீமேகலா
ரம்பாதிவந்திதா
ரமா
ராகஸ்வரூப பாசாட்யா
ராஜ்யதாயினி
ராஜராஜார்ச்சிதா
ராஜராஜேச்வரி
ருத்ரரூபா
லலிதாம்பிகா
லக்ஷ்ய ரோமலதாதார தாஸ
முன்னேய மத்யமா
லாகின்யம்பாஸ்ரூபிணி
லோலாக்ஷீதா
லோபாமுத்ரார்ச்சிதா
வ்யாபினி
வஸுதா
வந்ஹி மண்டல வாஸினி
வாகவாதினி
வாகதீச்வரி
விக்னநாசினி
விச்வமாதா
விச்வரூபா
விச்வாதிகா
விசுத்திசக்ர நிலயா
விந்த்யாசல நிவாசினி
விஜ்ஞான கலனு
விஷ்ணுரூபிணி
வேதவேத்யா
வேதஜனனி
வைஷ்ணவி
ஜ்ஞான விக்ரஹா
ஜன்மம்ருத்யுஜரா தப்த
ஜனவிச்ராந்தி தாயினி
ஜனனி
ஸ்ரீகண்டார்த்தசரீரிணி

ஸ்ரீமத் ஸிம்ஹாஸனேச்வரி
ஸ்ரீ மஹாராஜ்ஞி
ஸ்ரீ மாதா
ஸ்ரீ வித்யா
ஸ்ருஷ்டி கர்த்ரி
ஸ்வப்ரகாசா
ஸ்வாதிஷ்டா நாம்புஜகதா
ஸச்சிதானந்த ரூபிணி
ஸசாமர ரமா வாணீ ஸவ்ய
 தக்ஷிண ஸேவிதா
ஸத்கதிப்ரதா
ஸர்வ ம்ருத்யு நிவாரணி
ஸர்வ மோஹினி
ஸர்வ வ்யாதி ப்ரஸமநி
ஸர்வாதீதா
ஸர்வாந்தர்யாமினி
ஸர்வாருணா
ஸர்வேச்வரி
ஸரஸ்வதி
ஸஹஸ்ரதளபத்மஸ்தா
ஸஹஸ்ராராம்புஜாரூடா
ஸாகின்யம்பாஸ்வரூபிணி
ஸாந்த்ரகருணா
ஸாம்ராஜ்யதாயினி
ஸித்தமாதா
ஸித்தேச்வரி
ஸிந்தூர திலகாஞ்சிதா
ஸிஞ்ஞானமணிமஞ்சீர
 மண்டித ஸ்ரீ பதாம்புஜா
ஸுத்தவித்யாங்குராகார
 த்விஜபங்த்தி த்வ
 யோஜ்வலா
ஸுதாஸாகர மத்யஸ்திதா
ஸுமங்கலி
ஸுமேருமத்யச்ருங்கஸ்தா
ஸுர நாயிகா
ஹ்ருத்யஸ்தா
ஹ்ருத்யா
ஹரிப்ரஹ்மேந்த்ரஸேவிதா
ஹாகினீரூபதாரிணி.